# பஞ்சாக்ஷரம்

(தொகுப்பு — விளக்கம்)

நமசிவாய-சிவாயநம-சிவயசிவ-சிவசிவ-சி

நமசிவாய - சிவாயநம - சிவயசிவ - சிவசிவ - சி

அர்த்தநாரீஸ்வரர்



சிவம் - சக்தி
சி - வா

நமசிவாய - சிவாயநம - சிவயசிவ - சிவசிவ - சி

ஓம் ஹாம் ஹெளம் சிவாயநம





பதிப்பாசிரியர் :

சித்தாந்த சிகாமணி - அருட்பாமணி

**S. ராமலிங்கம்** B.Sc., (Ag.) B.L.,

அட்வகேட், சேலம் - 7.

# பஞ்சாக்ஷரம்

(தொகுப்பு - விளக்கம்)





ஆசிரியர் :

S. ராமலிங்கம் B.Sc., (Ag.) B.L.,
அட்வகேட்,

8/224, ராஜாஜி ரோடு
சேலம் - 636 007.

போன் : 64731

முதற் பதிப்பு : 1994

ஆசிரியர் : S. ராமலிங்கம் B.Sc., (Ag.) B.L.,
அட்வகேட்,
8/224, ராஜாஜி ரோடு,
சேலம் – 636 007.

போன்: 65731

விலை : ரூ. 35–00

அச்சிட்டோர் : ஜுபிடர் பிரஸ்,
38, டாக்டர் சுப்பராயன் ரோடு,
சேலம் – 636 001.

3/4/2


உ
SIVAMAYAM Phone: 3679

# Sri Thondai Mandala Atheenam

**Sri Gnanaprakasa Desika Swamigal Mutt,**
57, V. C. Paramasiv Mudaliar Street,
Big Kanchipuram – P. C. 631 502.


## ஆசியுரை

"ஐந்தெழுத்தும், திருநீறும், கண்டிகையும் பொருளாகக் கொண்ட நாயன்மார் திருக்கூட்டம்" என்பது மாதவச்சிவ ஞான யோகிகளின் வாக்கு. இவைகளுள் திருநீறும், கண்டிகையும் மக்கட் சமுதாயத்திற்கு புற அணிகலன்களாக விளங்குவன. "திருவைந்தெழுத்து" அக அணிகலன் ஆகும். இதனையே நாவரசப் பெருந்தகையார், "நல்லக விளக்கது நமசிவாயவே" என்கிறார்.

தேவாரத் திருமுறைகளுள் நான்கு பஞ்சாக்கர பதிகங்கள் உள்ளன. திருஞான சம்பந்தப் பெருமான் இரு பதிகங்களும், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஓரோர் பதிகமும் அருளிச் செய்துள்ளனர்.

ஐந்தெழுத்தின் அருமை பெருமைகளைப் பற்றி பேசாத சைவ நூல்களே இல்லை என்றாலும், இவை அனைத்தும் ஐந்தெழுத்தின் ஓரோர் கூறு பற்றியே பேசுகின்றன. "பஞ்சாக்ஷரம்" என்னும் இந்நூல் ஐந்தெழுத்துப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் சிறப்பாக எடுத்துக் கூறுகின்றது.

ஐந்தெழுத்தை ஓதுவதினாலே பெறும் பயன், யாவரும் அறிந்துள்ள எடுத்துக்காட்டுகளால் (பக்கம் – 3) விளக்கப் பெற்றுள்ளது. அடுத்து "நமசிவாய" எனும் மந்திரத்துள் அடங்கியுள்ள எழுத்துக்களின் பொருளும், இம்மந்திரத்தின் துணைக்கொண்டு உய்ந்த பல நாயன்மார்களின் செயல்களும் சுட்டப் பெற்றுள்ளன. (பக்கம – 6, 7)

மேலும் திருக்கோயில் அமைப்பே பஞ்சாக்கர விளக்கம் என்பதும், இம்மந்திரம் யாவரும் ஓதுவதற்குரியது என்பதும், தெளிவுறப் பேசப் பெற்றுள்ளன. இவற்றுக்கு ஆதாரமாகப்

பற்பல திருமந்திரப் பாடல்களும், தணிகைப் புராண மேற்கோள்களும் தரப்பட்டுள்ளன. அடுத்து இராமலிங்க சுவாமிகளின் பாட்டும் - உரையும் மிக எளிய நடையில் அமைந்துள்ளன.

அடுத்த பகுதி வடமொழி - தென்மொழி ஆகிய நூல்களிலும், குறிப்பாகத் திருமுறைகளில் உள்ள பஞ்சாக்கரப் பெருமைகள் விளக்கப் பெற்றுள்ளன. இவையாவும் யாவரும் ஓதி உணரும் வகையில் உள்ளன.

அடுத்த பகுதிகளில், ஸ்தூல, சூக்கும, அதிசூக்கும, காரண, மகாகாரண பஞ்சாக்கர விளக்கங்கள், திருவைந்தெழுத்துக்களை உள்ளடக்கிய படங்கள், இவற்றிற்கான மேற்கோள்கள் முதலியனவும் உள்ளன. இவை யாவும் நுண்மாண் நுழைபுலனும், சைவ சமய இலக்கண நூல்கள், சிவ ஆகமங்கள் இவைகளுள் நல்ல பயிற்ச்சியும், முறையாகச் சிவ தீக்கை பெற்று சிவ பூசையும், இதனால் ஆன சாதனையும் உடையவர்க்கே உரியன.

பஞ்சாக்கரத்தைப் பற்றி இதுபோன்ற ஒரு நூல் இதுவரை வெளிவந்ததாகத் தெரியவில்லை.

இந்நூலைத் தொகுத்து அளிப்பவர் நமது ஆதீன ஆலோசனைக்குழு உறுப்பினரும், "சித்தாந்த சிகாமணி" "அருட்பா மணி" என்ற பட்டங்களை பெற்றவரும், இவ்வாதீன 229ஆம் பட்டத்தில் விளங்கிய குருமூர்த்திகளிடம் முறையாகத் தீக்கை பெற்று இவர்களைக் கொண்டு தமது இல்லத்தில் பலமுறை சித்தாந்த சாத்திர வகுப்பு நடத்தியவரும் ஆன வழக்கறிஞர் சேலம் S. இராமலிங்க முதலியார் ஆவர். அன்று பெற்ற பயனை என்றும் எவரும் பெறும் வகையில் இதனை இது போது ஒரு நூலாக வெளியிடுகிறார். இச்சிவசமயத் திருத்தொண்டு பெரிதும் பாராட்டுவதற்குரியது. இவர் மேலும் பல சமய, சமுதாயப் பணிகள் செய்து, அனைத்து நலன்களுடன் நீடினுதும் வாழத் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

சிவம்

36/2

உ
குருபாதம்



"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே"


திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்
26ஆவது குருமகா சந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

தருமபுரம்
மயிலாடுதுறை (அஞ்சல்)
609 001.


15—1—1994

---

சிவபெருமானை முழுமுதற் பரம் பொருளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவச் சமயமாகும். திருநீறு, உருத்திராச்சம், திருவைந்தெழுத்து ஆகிய மூன்றும் அவ்விறைவன் திருவருளைப் பெறுதற்குரிய சமய சாதனங்கள் எனப்பெறும். சைவர்களாகப் பிறந்தோர் திருநீறு பூசி உருத்திராச்சம் அணிந்து திருவைந்தெழுத்தை ஓதி உய்தி பெறுதல் வேண்டும். வேதசிவாகமங்களும், பன்னிரு திருமுறைகளும், அவற்றைத் தொடர்ந்த மெய்கண்ட நூல்களும், பிற அருள் நூல்களும் சைவ சமய சாதனங்களாகிய இவற்றின் பெருமைகளைப் பல படியாக விரித்துரைக்கின்றன.

சிறப்பாகத் தேவாரத் திருமுறைகளில் திருநீற்றின் பெருமைகளை விளக்கும் திருநீற்றுத் திருப்பதிகத்தையும், திருவைந்தெழுத்தின் அருமை பெருமைகளை அறிவிக்கும் பஞ்சாக்கத் திருப்பதிகங்களையும் காணலாம். இவ்வாறே உருத்திராச்சத்தின் சிறப்பைத் தெரிவிக்கும் பாடல்கள் பலவும் அத்திருமுறைகளில் இடம் பெற்றுள்ளன.

சமய சாதனங்களில் திருவைந்தெழுத்து, மந்திரங்கள் பல வற்றுள்ளும் தலையானதாகும். இதனை வடமொழியில் பஞ்சாக் கரம் என்பர். மக்களைப் பிறவிக் கடலிலிருந்து கரையேற்ற வல்ல இம் மகா மந்திரத்தை ஓதி உணர்தல் சைவ மெய் யன்பர்களின் தலையாய கடனாகும்.

திருவைந்தெழுத்து நூல் ஆக்கும் காரணம் முதலான பல நிலைகளில் உருவேற்றுதற்குக்குரியன. அன்போடு ஓதி வரு வோர்க்கு அனைத்து நன்மைகளையும் அருளவல்லன. சிவ பிரானது திருவுருவம் ஐந்தெழுத்தின் அமைப்பில் விளங்குவது எனச் சாத்திர நூல்கள் கூறும். இம் மகாமந்திரத்தை பல் வேறு நிலைகளில் ஓதி மோகனம், வசியம், சத்ருஜயம் முத லான உலக நன்மைகளையும், வீடு பேற்றையும் பெறலாம். இத்தகைய திருவைந்தெழுத்தைச் சக்கரங்களில் அமைத்து வழிபடவும் செய்யலாம்.

திருவைந்தெழுத்தின் சிறப்புக்கள் பலவற்றையும் அறிவதற்கு ஏற்ற நிலையில் அன்பர் சித்தாந்த சிகாமணி திரு. எஸ். இராமலிங்கம் பல நூல்களிலிருந்தும், திருவைந் தெழுத்துக்களைப் பற்றிய பாடல்களைத் தொகுத்தும், நுட்பங் களையும் விளக்கியும் சமய உலகிற்கு இந்நூலை அளித்துள் ளார். பஞ்சாக்கரச் சக்கரங்கள் பலவற்றையும் இந்நூலில் அமைத்துள்ளார்.

ஐந்தெழுத்தின் பெருமைகளை அறிய உதவும் இந்நூலைத் தந்த அன்பர் திரு. இராமலிங்கம் அவர்களின் பணி பாராட் டுக்குரியது. அவர் இதுபோன்று பிற சமயப் பணிகளை ஆற்றி எல்லா நலங்களோடும் இனிது வாழவும், இந்நூலைப் பெற்றுக் கற்றுப் பயனுறும் அன்பர்கட்கு நலம் பல விளையவும் செந் தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.



Phone : 21 2332/1403

Kailai Ma Munivar
**H. H. Sri La Sri Kasivasi**
**Muthukumaraswami Tambiran**
**Swamigal**

**Head of Sri Kasi Mutt,**
**TIRUPANANDAL-612504.**
**Thanjavur District.**

SIVA SIVA

Date : 17—12—93

சேலம், 'சித்தாந்த சிகாமணி' – 'அருட்பாமணி'
திரு. எஸ். இராமலிங்கம் அவர்கட்குச்
செந்திலாண்டவன் திருவருள் முன்னிற்க.

'பஞ்சாக்ஷரம்' எனும் தலைப்பிட்ட தங்களின் தொகுப்பு நூல் பார்வையிடலாயிற்று.

'வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது' – 'அந்தியுள் மந்திரம் அஞ்செழுத்துமே' – 'சிவசிவ என்றிடச் சிவகதி தானே' என்பவை ஐந்தெழுத்தின் மேன்மை பற்றி அருள் குரவர்கள் மொழிந்த திருவாக்குகளாகும்.

திருவைந்தெழுத்தின் புனிதம், இன்றியமையாமை, பயன் ஆகியவை பற்றி எல்லோரும் அறிய வேண்டும் எனும் கருதுகோளுடன் நுதலிப் புகுந்து, திருமந்திரம், திருவருட் பயன், சித்தியார் முதலான சாத்திரங்களும், பெரிய புராணம், சித்தர் பாடல்கள், வள்ளலார் வாக்கு முதலான அருள் நூல் களும் பலவிடத்தும் பலபடப் பேசிய மொழிகளை ஒருங்கு தொகுத்து, உரிய நெறிப்படி வகுத்து ஆற்றொழுக்கான நடையில் அரிய முறையில் படைத்துள்ள நூல் ஓர் ஒப்பற்ற படைப்பு எனலாம்.

தக்க பணியைத் தக்க வகையில் தாளுன்றியாய்த் தலைப் பட்டுச் செய்த தாங்கள் மேன்மேலும் பணியாற்றவும், நூல் பலர்க்கும் பயன்பட மலரவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்.

சிவசிவ

உ
சிவமயம்



திருக்கயிலாய பரம்பரை
சீர் வளச் சீர்
**சிவப்பிரகாச பண்டாரச்சந்நிதி**
குருமகாசந்நிதானம் அவர்கள்
திருவாவடுதுறை ஆதீனம்

**திருவாவடுதுறை - 609 803.**
(தஞ்சாவூர் மாவட்டம்)

நாள்: 31—12—93

"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க"

# வாழ்த்துரை

பஞ்சாக்ஷரம் (தொகுப்பு – விளக்கம்) என்னும் நூல் வரப் பெற்றோம்.

முந்தை முதன் மந்திரங்களுக்கெல்லாம் தோன்றும் முதலாகும் முதல்வனார் எழுத்து திருவைந்தெழுத்து. வினைப் பகைக்கு அத்திரம் ஆவது. பேரின்பப் பெருவாழ்வு கைகூடச் செய்வது. இன்ன பல சிறப்புகளை உடையதாய் உயர்வற உயர்நலம் விளைக்கும் திருவைந்தெழுத்தைப் பற்றி அறிந்துணர்ந்து பயன் கொள்ள வேண்டிய அனைத்து விளக்கங்களையும் திருமுறை மற்றும் ஆன்றோர் உரைகளுடன் பஞ்சாக்ஷரம் என்னும் இந்நூலில் தொகுக்கப் பெற்றுள்ளமை பெரிதும் பாராட்டுதற்குரியது. மகிழ்கிறோம்.

அன்பர்கள் இந்நூலினைப் பெற்று பயன் கொள்ளவும், இவ்வரிய முயற்சியில் தம்மை ஆட்படுத்திக் கொள்ளும் அன்பரின் சிவ புண்ணியப் பணிகள் தொடர்ந்து சிறந்து அமையவும் அருள அருள்தரு ஞானமாநடராசப் பெருமான் திருவடி மலர்களைச் சிந்திக்கிறோம்.

பெறுநர் :
**எஸ். இராமலிங்கம்** பி.எஸ்.ஸி., பி.எல்.,
8/224, ராஜாஜி ரோடு, சேலம் - 636 007.

உ

ஸ்ரீ சந்த்ரமௌளீச்வராய நம:

போன்: 2115

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு

# ஸ்ரீசங்கராச்சார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடம் ஸமஸ்தானம்,

காஞ்சிபுரம்.

தலைமை அலுவலகம்:

1, சாலைத் தெரு, பெரிய காஞ்சிபுரம் - 631 502.

தேதி: 29—1—1994

சேலம் நயாய்வாதி ஸ்ரீ எஸ். இராமலிங்கத்தினால் எழுதப் பட்டுள்ள பஞ்சாக்ஷரம் என்னும் மஹா மந்த்ரத்தைப் பற்றிய தொகுப்பு - விளக்கம் என்னும் நூலானது வேதங்கள், புராணங்கள், திருமந்திரம் முதலிய பண்டைய நூல்களி லிருந்து இந்த மந்த்ரத்தைப் பற்றிய ஸ்தூலம், ஸூக்ஷ்மம், அதிஸூக்ஷ்மம், மஹாகாரணம், வழிபாடு, சக்ரங்கள் முதலிய விஷயங்களைத் தொகுத்து தகுந்த விளக்கங்களுடன் அளிக்கிறது.

சைவ அன்பர்கள் தகுந்த குருவினிடம் உபதேசம் பெற்று இந்த மஹா மந்த்ரத்தை முறையுடன் ஜபித்துக் கொண்டு இம்மை, மறுமைப் பயன்களை அடைவார்களாக.

நாராயண ஸ்ம்ருதி:

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# அணிந்துரை

சித்தாந்த பாநு – சிவஞான சரசுவதி
**திரு. சி. சு. கண்ணுயிரம்**
கோயம்புத்தூர்.

உலகில் வாழும் உயிர்கள் அனைத்தும் பாசத்தால் பிணிப்புண்டவை. பரமபதியாகிய இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். பாசத்தால் கட்டுண்ட உயிர்கள் தங்களையும் அறியாமல், தங்களை அனுதியே பிணித்துள்ள பாசத்தையும் அறியாமல், அதன் பிணிப்பையும் அறியாமல், அதன் பிணிப்பினின்றும் அவற்றை விடுவித்துத் தன்பால் ஈர்த்து அவற்றுக்குப் பேரின்பம் தரும் வீட்டுலகு நல்க விரும்பும் இறைவனையும் அறியாமல் அஞ்ஞான இருளில் ஆழ்ந்து பிறப்பிறப்பில் பட்டுழல்கின்றன. அவ் உயிர்களை உய்விக்க விரும்புவது இறைவனின் பேரருளுடைமை. இஃது அவனுக்கு இயல்பாகவே அமைந்த எண்குணங்களுள் ஒன்று. அப்பேரருளுடைமையால் இறைவன் உயிர்களுக்காகப் பல சாதனங்களைப் படைத்தான். அவை நான்மறைகள், சைவாகமங்கள் போன்றவை.

நான்மறைகளும், சிவாகமங்களும், உயிர்கள் சிவ பரம்பொருளை வழிபடுவதால் ஆணவ மலத்தின் பிணிப்புப் படிப்படியாகத் தளர்ந்து வந்து முடிவில் உயிர்களைப் பற்றியுள்ள பிணிப்பை முற்றிலும் நீங்குகின்றது. விடுபட்ட உயிர்கள் வீடுபேறெய்திப் பேரின்பம் துய்க்கின்றன என்று அறுதியிட்டுக் கூறுகின்றன அத்தகைய சிவ வழிபாட்டுக்காக நமக்குக் கிடைத்துள்ள சாதனங்கள் பல அவற்றுள் தலையாயது திருவைந்தெழுத்து என அந்நூல்கள் நவில்கின்றன. திருவைந்தெழுத்தையே வடமொழியில் ஸ்ரீ பஞ்சாட்சரம் என்பர் மேலோர் இத்திருவைந்தெழுத்து மந்திரங்கள் அனைத்தினும் தலைசிறந்த மகா மந்திரமாகும். இஃது இறைவன் நாமமாகவும், அவன் திருமேனியாகவும், இறைவனேயாகவும் விளங்கும் சிறப்பினது.

ஆன்ம வாழ்வில் தொடக்க நிலையில் உள்ளோர் முதல் சீவன் முத்தர் வரை அனைவருக்கும் இன்றியமையாதது. உலக இன்பங்கள்

அனைத்தையும் துறந்து உடலை வருத்தும் கடுந்தவம் முயல்வோர் எய்தும் வீடுபேற்றை உலக இன்பங்கள் அனைத்தையும் ஐம்புலன்களும் ஆரத்துய்த்து மனைவி மக்களுடன் இல்லத்தில் வாழ்ந்தே நாம் திருவைந்தெழுத்தை ஓதுவதால் எளிதில் பெறலாம் எனும் உண்மையை ஓர் எடுத்துக்காட்டால் பட்டினத்தடிகள் மிக அழகாக நிலைநாட்டுகின்றார்கள். வலிமைமிக்க ஒருவன் ஒரு கல்லை எடுத்து மிக முயன்று அதை விண்ணில் வீசினும்; வலியற்றான் ஒருவன் அதிக முயற்சியின்றி ஓர் கல்லை விண்ணில் உய்க்கினும் இரு கற்களும் நிலத்தில் வீழ்வது தப்புவதில்லையன்றே? அவ்வாறே துறவிற் செல்லாதாரும் திருவைந்தெழுத்தைக் கணித்தலால் வீடுபேறெய்துகின்றனர் என்பது அவ்வெடுத்துக்காட்டு.

இத்துணை விழுமிய திருவைந்தெழுத்து ஆன்மாக்களின் பக்குவம் நோக்கி உபதேசிப்பதற்காக பல வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவற்றுள்ளும் உட்பிரிவுகள் பல உள. அவை ஒவ்வொன்றும் பிரணவம் சேர்த்தும், சேர்க்காமலும்; பீஜ மந்திரங்கள் சேர்த்தும், சேர்க்காமலும் கணிக்கக் கூடியவை எனப் பலவகையாக உள்ளன. இவற்றுள் ஒன்றைத் தம் மாணவனின் பக்குவம் நோக்கி ஞானகுரு தீட்சை நல்கி உபதேசம் செய்வார். பின்னர் மாணவனின் ஆன்ம வளர்ச்சியைக் கவனித்து வந்து அடுத்துள்ள மேல் நிலைக்கான பஞ்சாட்சரத்தை உபதேசம் செய்வார். எனவே இம்மந்திரம் கணிக்கும் முறையும், நிற்கும் நிலையும் அன்பர்கள் ஒவ்வொருவர் மாட்டும் வேறுபட்டு நிற்பன.

இவ்வனைத்து வகைத் திருவைந்தெழுத்துக்களையும் கடல் போன்ற பல வடமொழி, தமிழ் மொழி நூல்களினின்று தொகுத்தெடுத்துப் **"பஞ்சாட்சரத் தொகுப்பு - விளக்கம்"** என்னும் பெயரில் ஓர் ஒப்பற்ற நூலாக நமக்கு வழங்கியுள்ளார் நூலாசிரியர். அவர் சேலம் வழக்கறிஞர். சித்தாந்த சிகாமணி - அருட்பாமணி - சைவத் திருவாளர் **S. இராமலிங்கம்** B.Sc., (Ag) B.L., ஆவர்.

நூலாசிரியரின் தந்தையார், அன்னையார் இருவரும் சைவ – வைணவ நூல்களிலும், பகவான் இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர் போன்றோர் நூல்களிலும் ஆழ்ந்த பயிற்சியும், சிறந்த தெய்வ பக்தியும் நிறைந்த சைவ நெறியினர். திரு **வி. கோ. சூரிய நாராயணசாஸ்திரியாரின்** தமிழாசிரியராகத் திகழ்ந்த மதுரை **சபாபதி முதலியார்** அவர்கள் பெயர்த்தியே நூலாசிரியரின் அன்னையார் திருமதி **நீலாம்பாள் சுப்ரமணியம்**. எனவே இளமையிலிருந்தே ஆன்மீகவாழ்வில் திளைக்கும் பேறுபெற்ற நூலாசிரியருக்கு இந் நூல் எழுதுவது எளிதாயிற்று. நூலாசிரியரின் தீட்சாகுரு - தொண்டைமண்டலாதீனம் **229-ஆம் குருமகா சந்நிதானமாகத்** திகழ்ந்த

''ஞானக்களஞ்சியமாவர்''. அவர்களை சேலத்தில் தம் மாளிகையில் பல ஆண்டுகள் எழுந்தருள வைத்து ஞான நூல்கள் பலவற்றையும் பாடம் கேட்டவர் நூலாசிரியர்.

அவர் அவ்வண்ணம் உபதேச முறையில் பெற்ற பல அரிய செய்திகளை உலக மக்கள் அனைவரும் அறிந்து கைக்கொண்டொழுகி உய்ய வேண்டும் என்னும் வேட்கை உள்ளத்தினின்றும் உந்த இந்த அரிய நூலை ஆக்கியுள்ளார் என்பதை நூல் முழுவதும் ஆங்காங்கு வரும் செய்திகளால் நன்கறியலாம். எடுத்துக்காட்டாக ''**நமசிவாய**'' என்னும் தூல பஞ்சாட்சரத்தை ஓதினுல் மலம் நசிக்காது; வீடு பேறெய்த இயலாது. ஆனுல் ''**சிவாயநம**'' எனும் சூட்சும பஞ்சாட்சரத்தைக் கணித்தால் மலம் நசித்து வீடுபேறெய்தலாம் என்று மெய்கண்ட சாத்திர நூல்கள் விளம்புகின்றன. ஆனுல், திருமுறைகளில் மூவர் பெருமக்களும் **நமச்சிவாயப்** பதிகங்கள் பாடியுள்ளனர். அவை வீடு பேறெய்த வாயிலாக உள்ளவை என்று பரம ஆசாரிய மூர்த்திகளே அப்பதிகங்களில் அருளியுள்ளனர் இவ்விரண்டையும் முரண்பாடுகளாகக் கொண்டு மயங்குவோர் பலர். மெய்கண்ட சாத்திர நூல்கள் கூறுபவை திருவைந்தெழுத்தை உள்ளத்திற் கணிப்பதற்கென்றும், திருமுறைகள் கூறுபவை இறைவன் நாமத்தை வாயாரத் துதித்து மகிழ்வதற்கென்றும், இது முன்னதற்கு வழி கோலுவதென்றும் பக்கம் 130இல் நூலாசிரியர் திறம்பட அமைதிப் படுத்துகின்ருர்.

இந்நூலின் 10ஆம் அதிகாரம் முழுவதும் நூலின் மணி முடியாகத் திகழ்கின்றது. ஆன்மார்த்த சிவபூசை செய்வோர்க்கு உதவுவது. சிவபூசையில் ஓர் அங்கமான அந்தர்யாக பூசையை இவ்விதம் புரிவது மிகச் சிறந்த பயனை நல்கும். பூசகர்களைத் தவநெறியில் மிக நெடுந்தொலைவு முன்னேற்றுவது. அச்சில் இருந்தும் எளிதில் கிடைக்காத **காழிக் கண்ணுடைய வள்ளலாரின் பஞ்சாக்கர மாலையை** அனைவருக்கும் நல்கும் நூலாசிரியருக்குச் சைவவுலகம் நன்றிக் கடன் பட்டுள்ளது.

இவ்வாறே திருமந்திரத்தில் பொருள் விளங்காத மிகப் பல பாடல்களை நூலாசிரியர் நூல் முழுவதும் விரவி வர அமைத்து ஆங்காங்கே எளிய முறையில் பாடல்களையும் விளக்கிச் செல்கின்ருர். நூலாசிரியரே நன்கு வடமொழி பயின்றவர். அத்துடன் வடமொழிப் புலவர்கள் பலரை அணுகி, நான்மறைகள், உபநிடதங்கள், சிவாகமங்கள் போன்றவற்றுள் திருவைந்தெழுத்தைக் குறிப்பிடும் பகுதிகளைக் கேட்டு எழுதி நூலில் சேர்த்து விளக்கியும் உதவியுள்ளார். பலவிதமான சக்கரங்களில் திருவைந்தெழுத்துக்கள் அமைந்துள்ள பாங்கை படங்களுடன் நூலின் பிற்பகுதியில் நல்கியுள்ளார்.

நூலாசிரியர் பழம் பெருமை வாய்ந்த புகழ்மிக்க செல்வக் குடும்பத்தில் தோன்றியவராதலின், தட்டிக் கழிக்க இயலாத பல பொறுப்புக்கள் நாளும் இவர் முன் நிற்ப. வழக்கறிஞர் தொழில், விளை நிலங்களைப் பார்வையிட்டுச் செம்மை செய்யும் வேலை, கல்வி நிலையங்களின் பொறுப்பு, அறக்கட்டளைகளை நிர்வகித்தல், சமூக சங்கத்தின் தலைமைப் பொறுப்பு. இத்தனைக்கும் இடையில் நேரம் எடுத்துக் கொண்டு பல்லாண்டு காலம் கடும் உழைப்பினால் பல நூல்களில் சிதறிக் கிடந்த செய்திகளை மிகப் பெரிய அளவில் திரட்டி இந்நூலைச் சைவ உலகுக்குக் கைம்மாறு கருதாது வழங்கியுள்ளார்.

இவ்வரிய நூல் சைவர்கள் ஒவ்வொருவர் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய சிறந்த நூல். நூலகங்கள் அனைத்திலும் வைக்க வேண்டிய மாணிக்கம். சமய நிறுவனங்கள், அறக்கட்டளைகள், கல்வி நிறுவனங்கள் போன்றவற்றின் பொறுப்பில் உள்ளவர்களும், வசதியுள்ள செல்வர்களும் இந்நூலில் பல பிரதிகளை ஒரே சமயத்தில் வாங்கிக் கொண்டு அவற்றைத் தக்க இளைஞர்கள், அன்பர்களுக்கு வழங்கிப் பயன் பெறச் செய்தல் சிறந்த சிவ புண்ணியமாகும்.

திருவைந்தெழுத்தின் ஒவ்வொரு பிரிவுக்கும் ஒவ்வொன்றாகத் தனித்தனி விரிந்த நூல்களை எழுதி இந்நூலாசிரியர் வெளியிடுவதற்குச் சுவர்ணாம்பிகையுடனமர் சுகவனேசர் திருவருள் பாலிக்க வேண்டும் என்று இறைஞ்சுகின்றேன்.

சி. சு. கண்ணாயிரம்

சேக்கிழார் நிலையம்,
480, வைசியாள் வீதி,
கோயம்புத்தூர்.
Pin: 641 001.

20—12—1993





# ஆசிரியர் - ஓர் ஆய்வு



''ஆல் போல் தழைத்து, அருகு போல் வேர்ப் பாய்ச்சித்'' திகழும் இந்து மதத்தின் இலக்கணமாய்த் திகழும் ''பஞ்சாக்ஷரம்'' என்னும் இந்த அரும் பெரும் பொக்கிஷமான இந்நூலின் ஆசிரியர் சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி, சைவ நெறியாளர் திரு. இராம லிங்கம் அவர்களாவார். வேளாண்மைத் துறையிலும், சட்டத் துறையிலும் பட்டம் பெற்று, உரிமையியல், குற்றவியல், வருவாய்த்துறை போன்ற பல துறைகளிலும் 40 ஆண்டுகளுக்கு மேலாக வழக்குரைஞராக ஒப்பாரும் மிக்காரும் இல்லாது திகழ்கிறார். அருட்பெருஞ்சோதி, தனிப்பெருங்கருணை அருள்திரு இராமலிங்க அடிகளாரின் மெய்யன்பரான இவர் இந்து சமய அறநிலையத் துறையின் வழக்குகளைத் தனக்குக் கிடைத்த மாபெரும் தொண்டாகக் கருதி செயல்படுதலே இவரின் தனித்துவமாகும்.

ஏராளமான புத்தகங்களைத் தம் சொந்த செலவில் பதிப்பித்த இவர் திருவருட்பாவில் உள்ள திருவடிப் புகழ்ச்சி மற்றும் மகாதேவ மாலை ஆகியவற்றை ஆங்கிலத்தில் மெய்யன்பர்களுக்காக அர்ப்பணித்தமையால் சிவகாமி பதிப்பகத்தார், குறிஞ்சிப்பாடி, வடலூர், இவருக்கு ''அருட்பாமணி'' என்ற பட்டத்தை நல்கி தமக்கு பெருமை தேடிக் கொண்டது.

சமயத் தொடர்பான செயல்பாடுகளில் புன்முறுவலுடனும் ஆர்வத்துடன் ஈடுபட்டு 6 வருடங்களாக சேலம் அருள்மிகு சுகவனேஸ்வரர் திருக்கோயிலின் தர்மகர்த்தாவாக செம்மையாகப் பணியாற்றிய இவர் தொண்டை மண்டல ஆதினத்தின் அறிவுரைக் குழுவின் உறுப்பினராகத் திகழ்ந்து வருகின்றார்.

கல்வித்துறையிலும், சமுதாயப் பணியிலும் இவர்தம் பங்கு வியத்தற்குரியதாகத் திகழ்ந்து வருகிறது. தம் தந்தையின் பேரவாவின்படி இவரும், இவர்தம் சகோதரர்களுமான முனைவர். பாலகிருஷ்ணன், திரு. ஷண்முகம் அவர்களும் ஐந்து ஏக்கர் நிலத்தை, சேலம்-5,

இராமலிங்க வள்ளலார் உயர்நிலைப் பள்ளிக்கு நல்கி, அப்பள்ளி தற்போது 2500 மாணவ மாணவிகளைக்கொண்ட நீலாம்பாள் சுப்ரமணிய மேனிலைப் பள்ளியாக மேம்பட்டு, அதற்குத் தலைவராகத் திகழ்ந்து வருகிறார்.

1260 மாணவ மாணவிகளைக் கொண்ட ஸ்ரீ இராமலிங்கவள்ளலார் தொடக்கப் பள்ளி, சேலம்-5 இன் செயலாளராகவும், மேலாளராகவும் இந்நூலின் ஆசிரியர் திகழ்கிறார். போதிய இடவசதியின்றிச் செயல்படும் இப்பள்ளிக்காகத் தம் சொந்த நிலத்தில் பள்ளிக்காகத் தம் அரும் முயற்சியால் தம் பெரும் பணத்தால் கட்டிடங்கள் கட்டித்தந்துள்ளார். ''அன்ன சாத்திரம் ஆயிரம் வைத்தலின் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தலே சாலச் சிறந்தது'' என்னும் பாரதியின் கூற்றுக்கேற்ப ஏழை எளிய மாணவர்களும் கல்வி பெற வேண்டும் என்னும் உயரிய நோக்கத்தோடு அவர்களுக்கு இலவச உணவு, உடை, பாட நூல்கள் ஆகியவற்றை ஈந்து அவர்தம் அறியாமை இருளை அகற்றிட அரும்பாடு பட்டு வரும் அறிஞர் இவர். சத்தியசாயி சங்கம் மற்றும் ரோட்டரி கிளப்பின் துணையோடு இலவச மருத்துவ முகாம் நடத்தியும் வருகிறார் அன்னார்.

அவர்தம் பாட்டனார், தந்தையாரால் நிர்மாணிக்கப்பட்டு, சூரமங்கலத்தில் எழுந்தருளி அருள்பாலிக்கும் அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருக்கோயில், விநாயகர் திருக்கோயில்களுக்கு வழி வழி தர்மகர்த்தாவாகத் திகழ்ந்து வருகிறார். சேலம் மாவட்ட தொண்டை மண்டல சைவ வேளாள அபிவிருத்தி சங்கம் மற்றும் சேலம் நகர சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் இவற்றின் தலைவராகவும், தொண்டை மண்டல சைவ வேளாள அறக்கட்டளை மற்றும் இராமலிங்கம் அறக்கட்டளையின் ஸ்தாபகராகவும், தலைவராகவும்: திருச்செங்கோடு கனக சபை மண்டல கட்டளைக் குழுவின் பெருந்தலைவராகவும் சேக்கிழார் திருமண மண்டப ஸ்தாபகராகவும் திகழும் இவர்தம் சமயத் தொடர்பான நிகழ்ச்சிகளில் காட்டி வரும் ஆர்வமும் ஆதரவும் சொற்களால் விளக்குதற்கும் அப்பாற்பட்டதாய், அளவிடற்கரியதாய் நிலத்தினும், நீரினும் வானினும் உயர்ந்தாய்த் திகழ்கின்றது. சேலத்தில் கர்நாடக இசையைப் புகழ்பெறச் செய்தமையில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு. ஆறு வருடங்களுக்கு மேலாக சரஸ்வதிகான சபாவின் செயலாளராகப் பணியாற்றிஉள்ளார். புகழ்ப் பெற்ற கர்நாடக இசைப் பாடகி இசை பேரரசி கலைமாமணி முனைவர் எஸ், ஜெயலட்சுமி பி. எச். டி., அவர்கள் இவர்தம் தங்கை என்பது குறிப்பிடத் தக்கது.

காஞ்சி தொண்டை மண்டல ஆதினம் 229-ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் ஞானப் பிரகாச தேசிக பரமாச்சார்யார் (பூர்வாசிரமம்-முத்து சு. மாணிக்க வாசகம்) அவர்களின் உண்மைச்

சீடராவார் இவர் ஞான குருவிடம் சைவ சித்தாந்த சாத்திரங்களைக் கற்றுத் துறை போக்கியவர் இந்நூலின் ஆசிரியர். அவர்தம் ஞானகுரு இவருக்கு ஞானதீட்சை நல்கி, சைவ பூசையையும், ஞானபூசையையும் செய்யத் தூண்டினர். இவர்தம் குரு இவருக்குச் "சித்தாந்த சிகாமணி" எனும் பட்டத்தை ஈந்து இவரைச் சிறப்பித்தார்.

திரு. எஸ். இராமலிங்கம் அவர்கள் இன்று இவ்வாறு திகழ்வதற்கு அவர்தம் பெற்றோர் கற்றுத் தந்த ஒழுக்க நெறிகளே அடிப்படைக் காரணம். அவர் உருவாக்கிய கல்வி நிறுவனங்களும், கோயில்களும் அவர்தம் தந்தையின் தொலை நோக்கின் விடியல்களே ஆகும். இவர் தந்தை முதன் முதலாக தன் சொந்த நிலத்தில் 12 ஏக்கர் ஸ்ரீ சாராதா வத்யாலாயாவிற்கு மனமுவந்து நல்கினர். அதுவே இன்று சேலம் மாநகரத்தின் முதுகெலும்பாய்த் திகழும் சாரதா கல்வி நிறுவனங்கள் ஆல்போல் செழித்துப் பரவக் காரணமாய் நின்றது என்றால் மிகையாகாது.

அவர்தம் பெற்றோர் திரு. R. சுப்ரமண்ய முதலியார் பி ஏ.பி.எல். அவர்களும், திருமதி. நீலாமபாள் அம்மாள் அவர்களும், துறவியரைப் போலவும், நாயன்மார் போலவும் தம் வாழ்வை நடத்தி வந்தனர். ஆழ்வார்கள், நாயன்மார்களின் இறைபக்தி ஒன்றேஎனும் தத்துவத்தை விளக்கும் சமய நூல்கள் சிலவற்றை அவர்தம் தாயார் பதிப்பித்து வெளியிட்டு சமய உலகிற்கு அரும்பணியாற்றியுள்ளார். அந்நூல் "ஆழ்வார்களும் நாயன்மார்களும்" எனும் பெயர் தாங்கி வெளி வந்துள்ளது.

இன்றும் இவர் ஆற்றி வரும் அரும் பணிகளுக்குத் தம் அரும் முயற்சியையும் ஆதரவையும் நல்கி வரும் இவர்தம் துணைவியார் திருமதி. சுசிலா இராமலிங்கம் அவர்கள் ஓர் இலட்சிய கணவருக்கேற்ற இலட்சிய மனைவியாக வாழ்ந்து. "தற்கொண்டார் பேணித் தகைசான்ற சொல் காத்து" அவர் ஆற்றும் அரும்பணிக்கு உறுதுணையாய், சோர்விலாதப் பெண்ணாகத் திகழ்கின்றார்.

> "மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
> நன்கலம் நன்மக்கட் பேறு"

எனும் அரும் பாவிற்கிணங்க, இவர்தம் மக்கள் இவருக்குத் துணையாக நின்று வருகின்றனர். இவர்தம் மகளான திருமதி. நீலா ஸ்ரீதரன் அவர்களும், அவர்தம் துணைவர் திரு. கே. ஸ்ரீதரன் அவர்களும் திறமையும் இனிய பண்பும் ஒருங்கே இணைந்து பல அறச் செயல்களைச் செய்து, இந்நூலாசிரியருக்கு உதவி புரிகின்றனர். இவர்கள் இவ்விளம்பருவத்திலே இந்நூலாசிரியரின் தெய்வீகக் கொள்கைகளைப் பின்பற்றி ஒழுகி

வருகின்றனர் இவர்தம் மைந்தன், வழக்குரைஞர் திரு. ஆர். சுப்பிரமணியன் பி. எஸ். சி., பி, எல். அவர்கள் தந்தையைப் பின்பற்றும் தனயனாகத் திகழ்ந்து '' இவன் தந்தை என் நோற்றான் சொல்? '' எனும் சொல்லுக்கு இலக்கணமாய் விளங்கி வருகிறார்.

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி திரு. எஸ். இராமலிங்கம் அவர்களைப் பற்றி நான் கருத்து தெரிவிப்பதில், எழுதுவதில் நான் மட்டற்ற மகிழ்ச்சியும், இறும்பூதும் எய்துகிறேன். அவருக்கும் அவர்தம் குடும்பத்திற்கும் இறைவனின் ஆசிகள் என்றென்றும் அருள் மழையாகப் பொழியட்டும்.

சமய உலகிற்குச் சாகாவரம் பெற்ற சாதனைகள் பல நிகழ்ச்சிய இச் சிகாமணி தம்பதியர் நீடூழி வாழ எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

இவண்,

இன்சொல் அரசு, தொண்டை மண்டல வேளாளர் திலகம்

**திரு. சி. பாலசுப்ரமணியன்**

கௌரவ ஆசிரியர்,

தமிழ்நாடு வேளாண்மை பல்கலை கழகம் மற்றும்

பதிவு பெற்ற வேளாண்மை துறை அரசு அலுவலர் (ஓய்வு)

குகாஸ்ரமம், சாரதா காலேஜ் ரோடு, சேலம்-16.



## முன்னுரை



சித்தாந்த சிகாமணி
அருட்பாமணி
**S. ராமலிங்கம்**
B.Sc., (Ag.) B.L.,
அட்வோகேட்,
8/224, ராஜாஜி ரோடு,
சேலம் - 636 001.
போன்: 64731

பஞ்சாக்ஷரம் என்பது வடமொழிச் சொல். பஞ்ச-ஐந்து, அக்ஷரம்-எழுத்து. க்ஷரம் அழியக் கூடியது. அக்ஷரம் அழியாதது. இது தமிழில் ஐந்தெழுத்து எனப்படும். இது மகாமந்திரம். மந்திரங்களுள் தலையாயது. எனவே இது தமிழில் திருவைந்தெழுத்து என்று சொல்லப்படுகிறது.

''ஏதும் ஒன்றும் அறிவிலராயினும் ஓதி அஞ்செழுத்தும் உணர் வார்கட்கு - அவருள்ளத்தே மூதும் தானும் மகிழ்வர்'' என்றும், ''படைக்கலமாக உன்நாமம் எழுத்தஞ்சை என்நாவில் கொண்டேன் இடைக்கலனல்லேன்'' என்ற அப்பர் பெருமானாலும் மற்றும் திருமூலர், சுந்தரர், ஞானசம்பந்தர், மணிவாசக பெருந்தகையார், வள்ளல் பெருமான் ஆகியவர்களாலும், மற்றும் பலராலும் போற்றப் படுகின்ற சக்திவாய்ந்த முக்தி அளிக்க வல்லதுமான இம்மகா மந்திர மாகிய திருவைந்தெழுத்தை ''பஞ்சாக்ஷரம் - தொகுப்பு விளக்கம்'' என்னும் தலைப்பாக கொண்ட இந்த நூலை எல்லாம் வல்ல இறைவன் கருணையாலும். திருவருள் துணையாலும், என் குருநாதர் மறைந்த மாமேதை தமிழ் கடல் காஞ்சிபுரம் தொண்டை மண்டல ஆதீனம் ஸ்ரீ ல ஸ்ரீ ஞானப்ரகாச தேசிக பரமாச்சார்ய ஸ்வாமிகள் (229-ம் பட்டம் (பூர்வாஸ்ரமம் - முத்து சு. மணிவாசகம்) அவர்கள் அருளி னாலும் ஓரளவுக்கு எழுதியுள்ளேன். நான் வடமொழி பயின்றவன். என் குருநாதர் என்னை ஆட்கொண்டு எனக்கு சமய தீக்ஷை பின் சிவ பூஜை, பின் ஞான பூஜை தீக்ஷை செய்து வைத்து அருளினார்கள். எனக்கு சித்தாந்த சாஸ்திரங்கள் பயில்வித்து என்னை ஆளாக்கி எனக்கு ஆக்கமும், ஊக்கமும் அளிக்க எனக்கு சித்தாந்த சிகாமணி என்னும் பட்டத்தை அளித்து அருளினார்கள்.

சென்னை சைவ சித்தாந்த பெருமன்றம் காசியில் காசி மடத்தில் ஒரு ஆண்டு விழா நடத்தினார்கள். அந்த விழாவில் திருப்பனந்தாள்

மடாதிபதி அவர்கள் எனக்கு திருவைந்தெழுத்து எனும் பொருள்பற்றி பேச அருள் கூர்ந்து வாய்ப்பு கொடுத்தார்கள். அதன்படியே அந்த விழாவில் கலந்து கொண்டு பேசினேன். அப்படி பேசுவதற்கு குறிப்பு களுக்காக திருவைந்தெழுத்து சம்பந்தமாக உள்ள நூல்களை ஆராய வேண்டியிருந்தது. அப்போது எல்லா நூல்களிலும் உள்ள திருவைந் தெழுத்து பற்றி ஒரே நூலாக இல்லை என்பது தெரிய வந்தது. எனவே பல நூல்களிலிருந்து திரட்ட வேண்டி வந்தது. அப்போது திரட்டிய அரிய பெரிய விஷயங்களை எல்லாம் தொகுத்து ஒரே நூலில் வெளி யிட்டால் பல அன்பர்களுக்கு உபயோகமாக இருக்கும் என்ற எண்ணத் துடன் இந்த நூலை எழுதினேன். என்னால் இயன்ற அளவில் தொகுத்துள்ளேன்.

சிவப்ரகாசம். சிவஞான சித்தியார், திருக்களிற்றுபடியார், திரு வுந்தியார், திருமந்திரம் (தருமையாதீன வெளியீடு - வித்வான் அருணை வடிவேல் முதலியார் - உரை ஆசிரியர் — திருப்பனந்தாள் மடத்து வெளியீடு — சைவ சித்தாந்த கழகம் வெளியீடு - ராமனுதம் பிள்ளை உரை) திருச்செந்தூர் அகவல், திருவருட்பா (அண்ணுமலைப் பல்கலை கழக வெளியீடு — ஔவை துரைசாமிபிள்ளை), தணிகைப் புராணம், சிவஞான போதம், பண்டார சாத்திரம், பஞ்சாக்கர பஃறொடை (திருவாவடுதுறை ஆதீனம் வெளியீடு) பேரூர் வேலப்ப தேசிகர் அருளியது. குமரகுருபரன் இதழ் ஆனி 1 - 1986, விடையரங்கம் பகுதி, திருவிளையாடல் புராணம், வாயு சங்கிதை, பிரம்மோத்தர காண்டம், சிவதருமோத்தரம், கடம்பவன புராணம, அருட் பெருஞ்சோதி அகவல், சிவஞான தீபம், கடம்பர் கோவில் புராணம், சிவராத்திரி புராணம், சிதம்பர செய்யுட் கோவை, பேரூர் புராணம், திருவருட்பயன, உண்மை விளக்கம், சிவவாக்கியர் பாடல், சிதம்பர (நடேசா) சம்மேளன அஷ்டோத்திரம், அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் அஷ்டோத்தரம, சஹஸ்ரநாமாவளி, பெரிய புராணம, பட்டினத்தார பாடல், அருட்பா, தத்துவ தீபிகை, திருமுறைகள், தவத்திரு ஊரன் அடிகள எழுதிய 'வள்ளலார் வாககில் ஓங்காரமும் - பஞ்சாக்ஷரமும் என்னும் நூல்', காழிக்கண்ணுடைய வள்ளலார் இயற்றிய பஞ்சாக்கர மாலை, ஸ்ரீஸ்காந்த மகாபுராணம் 2ம் பாகம், சேங்காலிபுரம் ப்ரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷதர் உரை.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் வைர விழா மலரில் பாலூர் கண்ணப்பமுதலியார் கட்டுரை, துகளறு போதம், ஆகமங்கள், திருப்புகழ், தணிகை புராணம், சன்மார்க்க விவேக விருத்தி - மாத இதழ் - ஆசிரியர் தவத்திரு ஊரன் அடிகள் - அண்ணுமலைப் பல்கலைக் கழக வெளியீடு. சித்தாந்த புலவர் திரு ந. சிவப்ரகாச தேசிகர் திரு மந்திரமாலை முன்னூறு, பிரம்மாரிஷ்ட பண்டித ஸ்ரீலஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட பஞ்சாக்ஷர மகா மந்த்ரார்த்தம், என் குருநாதர் உபதேசங்கள் - விளக்கங்கள், ஞானவல்லி என்னும் ஓர்

மலர், தாயுமானவர் பாடல்கள், அப்பர் - சுந்தரர் - சம்பந்தர் தேவாரம், திருவாசகம், குரு நமசிவாயத் தேவர் பஞ்சாக்கரமாலை, கொடிக்கவி அருட்பெருஞ்சோதி அகவல், சிவரகஸ்ய காண்டம், பூர்து காரணுகமம், உபநிஷத், சிவபுராணம் (வடமொழி), பஸ்ம ஜாபால சுருதி, யஜுர்வேத போதாயன சாகை, திரிபுரதா பிணியுபநிடதம், பஞ்சப்ரஹ்மோபநிஷதம் முதலிய நூல்களில் இருந்து தொகுப்புக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது

சிவாகம, சிவாகம பூஷண, சிவ்யாக நிர்வாக சாம்ராட் டாக்டர் G S. விஸ்வநாத சிவாச்சாரியார் அவர்கள் ஆகமங்கள், வேதங்கள் முதலியவைகளிலிருந்து குறிப்புகள், மேற்கோள்கள் கொடுத்து இந்நூலை எழுத மிகவும் உதவினார்கள். அவர்களுக்கு என் நன்றி உரித்தாகுக. மேலும் பஞ்சாக்ஷரத்தை வைத்து சிதம்பர ரகசியத்தை பற்றியும், ஸ்ரீநடராஜபெருமான் பற்றியும் புதுமையான விளக்கம் சொல்லி உதவிய ஸ்ரீ ராமுடு சிவாய அய்யப்பசாமி ஸ்வாமிகள் அவர்களுக்கும் என்னுடைய நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன். மேலும் இந்நூல் வெளியிடுவதற்கு எனக்கு பெருத்த ஆக்கமும் ஊக்கமும் கொடுத்து, தொகுப்பிலிருந்து பொருள்வாரியாக அத்தியாயங்களை பிரிப்பதற்கும் பேருதவியாக இருந்தும், இந்நூலுக்கு அணிந்துரை கொடுத்தவருமசன கோவை திரு சித்தாந்தபாநு C. S. கண்ணுயிரமுதலியார் அவர்களுக்கும் என்னுடைய மனமார்ந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ள கடமைபட்டவனுகிறேன்.

என்னைப் பற்றி ஆய்வு என்று எழுதி என்னை பெருமைபடுத்தி - ஆசி அருளிய தொண்டை மண்டல வேளாளர் திலகம் இன்சொல் அரசு திரு. C பாலசுப்ரமணியம் BA;BSc; (Ag), Retd. Agricultural Officer and Honorary Editor, Tamilnadu Agriculture University அவர்களுக்கு என் பணிவான வணக்கங்களையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்பால் கருணை உள்ளம் கொண்டு இந்நூலுக்கு ஆசியுரை, வாழ்த்துரை வழங்கிய காஞ்சீபுரம் தொண்டை மண்டல ஆதீனம் (ஞானப்பிரகாச தேசிக ஸ்வாமிகள் மடம்) 230ம் பட்டம் குருமகா சன்னிதானம் அவர்களுக்கும், திருக்கயிலாய பரம்பரை திருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக ஞான சம்பந்த பரமாச்சார்ய சுவாமிகள் அவர்களுக்கும், கயிலை மாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி, திருப்பனந்தாள் காசிமடம் அதிபதி முத்துகுமார ஸ்வாமி தம்பிரான் ஸ்வாமிகள் அவர்களுக்கும், திருவாவடுதுறை ஆதீனம் குருமகா சன்னிதானம் திருக்கயிலாய பரம்பரை சீர்வளர்சீர் சிவப்ரகாச பண்டார சந்நிதி அவர்களுக்கும், காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள் அவர்களுக்கும் அவரவர் பொன்னார் திருவடிகளுக்கு வணக்கம் செய்துகொண்டு என்னுடைய மனமார்ந்த பணிவான நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலே சொல்லியபடி பஞ்சாக்ஷரம் என்பது வடமொழிச் சொல் - அது தமிழில் திருவைந்தெழுத்து எனப்படும். இது மகா மந்திரம். எனது குருநாதர் இந்த பஞ்சாக்ஷரத்தில் இந்த உலகமே அடங்கும் என்று அருளுவார்.

'சி' என்பது சிவனைக் குறிக்கும்;
அது இறைவன் எங்கும் நிறைந்த பொருள்.

'வா' என்பது அருளை (சக்தியை) குறிக்கும்;
அதுவும் எங்கும் நிறைந்த பொருள்.

'ய' என்பது உயிரைக் குறிக்கிறது;
இதில் சகல உயிர்களும் அடக்கம்.

'ந' என்பது திரோதம், மாயை, கன்மம் என்பதை குறிக்கும்;
கன்மத்தில் உலகில் உள்ள அனைத்து காரியங்களும் அடக்கம்.
மாயை என்பதில் மா - மாய்தல்-அழிதல்;
ஆய் - வருதல்-தோன்றுதல் என்ற பொருள்படும்.
தோன்றி அழியக் கூடியது. இதில் தோன்றி அழியக் கூடிய
அனைத்து பொருள்களும் அடக்கம்.

'ம' ஆணவத்தை குறிக்கும்.
'யான்' 'எனது' என்பது அதன் விளக்கம்.

யான் - தனு (உடம்பு), கரணம் (கருவிகள்) என்பது.
எனது - என்னுடையது என்பது.

இவைகளை வைத்து ஆராய்ந்து பார்த்தால் சகல உலகங்களும் இவ்வைந்தெழுத்தில் அடங்கும் என்பது தெளிவாகும். திருமூலர் வாக்கும் அதே கருத்தை தெரிவிக்கிறது.

மறைந்த மாமேதையாகிய என் குருநாதர் பஞ்சாக்ஷர உபதேசம் செய்து அருளினார். என் குருநாதரின் உபதேசங்களும், அருளும்தான் எனக்கு இந்த மகா மந்திரத்தைப் பற்றி தொகுத்து விளக்கம் அளிக்க சக்தியை அளித்தது என்று சொன்னால் அது மிகையாகாது.

இந்நூலில் நூல் நிறைவுரை என்று 16ம் அத்யாயத்தில் இம்மகா மந்திரத்தின் இந்நூலில் சொல்லாத பெருமைகளையும், சிறப்புகளையும் மட்டும் குறிப்பிட்டுள்ளேன்.

இங்ஙனம்,

**S. ராமலிங்கம்**

ஆசிரியர்



உ

சிவமயம்

அத்தியாயம் – 1

# திருவைந்தெழுத்து

திருவைந்தெழுத்து என்பது பஞ்சாக்கரம்; பஞ்சாக்ஷரம் என்று வடமொழியில் சொல்லப்படுகிறது. பஞ்ச = ஐந்து, அக்ஷரம் = எழுத்து. க்ஷரம் என்றால் அழியக்கூடியது. அக்ஷரம் என்பது அழியாதது. இதை அஞ்செழுத்து என்றும் சொல்லப்படும். திருவைந்தெழுத்தின் பெருமை அளவு கடந்தது. அது மகாமந்திரம். அஞ்செழுத்தே ஆண்டவனின் வடிவம் என்பர். எழுத்துக்கள் அழியும். அதுபோல் ஐந்தெழுத்தும் அழிவதுதானே என்று கேள்வி எழுகிறது.

திருவருட்பயன் ஆசிரியரைப் பார்த்து அவரது சீடன் ''நாதாந்த நாடகத்தை நன்றாக தெளிவாகச் சொன்னீர்கள்.. ஆனால் அவை எழுத்துக்கள். அதனால் அது அழியும் எழுத்தாகிவிடுமோ; விளக்கம் சொல்லுங்கள்'' என்று கேட்கிறார்.

உண்மை விளக்கம் (பாட்டு 40)

நாதாந்த நாடகத்தை நன்கு அருள்செய்தீர்
ஓதீர் எழுத்தைந்தும் உள்ளபடி — தீதறவே
அஞ்செழுத்தீதாகில் அழியும் எழுத்தாய் விடுமோ
தஞ்ச அருட்குருவே சாற்று

அதற்கு குருநாதர் பதில் அளிக்கிறார் :-

எழுத்துக்கள் வேறுபடினும் அதன் பொருள் சலியாது வேறுபடாது. அது அழியாது. அழியாததால் அது அக்ஷரம் எனப்பட்டது. பாஷைகளை எழுதுங்கால் எழுத்து அழியும். ஆனால் அதன் பொருள் அழியாது.

உண்மை விளக்கம் (பாட்டு 41)

உற்றகுறியழியும் ஓதுங்கால் பாடைகளில்
சற்றும் பொருள்தான் சலியாது

என்று அருளுகிறார்.

அஞ்செழுத்தும், அவற்றின் அடைவும் வெவ்வேறு ஆதலை உணர்வது மிக அவசியம். அது எளிது.

திருவைந்தெழுத்து என்பது நமசிவாய, சிவாயநம ஆகும். பஞ்சாக்ஷரங்களையும் அதன் விவரங்களையும் பின்வரும் அத்தியாயங்களில் காண்போம்.

திருமந்திரம் 2651

அகராதியிரென் கலந்த பரையும்
உகராதிதன் சக்தியுள்ளொளி வீசியீசன்
சிகராதி சிவவேதமே கோண
நகாராதிதான் மூலமந்திரம் நண்ணுமே

திருவருட்கலப்பால் தோன்றும் அகர முதலிய உயிரெழுத்துக்கள் பதினாறு. உகராதி சிவபெருமானின் ஆற்றல் ஆகும். அவ்வாற்றல் களில் உள்ளொளியால் விளங்குபவனே சிவனே. சிவயநம, சிவவேதம் என சொல்லப்படும் திருவடியுணர்வாகும். இவ்வுணர்வுனைப்பெறும் உரிமை உயிருக்கு உண்டு. அதை ஆருயிர்க்கோணம் என்று சொல்லப்படுகிறது.

நகர முதலாக ஓதப்படும் ''நமசிவாய'' மூலமந்திரம் எனப்படும். இவற்றால் திருவடிபேறு ஏற்படும். இதைத்தான் ''நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க'' என்று மணிவாசகப் பெருந்தகையார் சிவ புராணத்தில் அருளியுள்ளார்.

திருமந்திரம் :

வாயொரு கண்டம் இதயமருவுந்தி
ஆயஇலிங்க மவற்றின் மேலேயவ்வாய்த்
தூயதோர் கண்டமிருமத் தகஞ்செல்லல்
ஆயதிருமைந் தோடாம் அஞ்செழுத்துமே

வாய் — புருவநடு கண்டம் — மிடறு இதயம் — நெஞ்சு
உந்தி — மேல்வயிறு இலிங்கம் — கொப்புழ்
மேலாய் — மூலம் ஆறுநிலைக்களமும் இடமாக அகரம் தோன்றும்

மூக்கு நுனியாகிய தூயதொரு கண்டத்தினின்று பெருமைமிக்க உச்சித் தொளையாகிய கபாலம் வரை அம்மந்திரத்தின் ஒலி பரந்து செல்லும். பின்வெளிப் போதரும். போதரும் என்றால் எழுத்து வடி வாய் தன் செவிக்கும் பிறர் செவிக்கும் புலனாகும் செவியோசையாகும்.

திருமந்திரம் 2653

கிரணங்கள் ஏழும் கிளர்ந்தெரிபொங்கி
கரணங்கள் விட்டுயிர் தானெழும்போதும்
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும்போதும்
அரணங்கை கூட்டுவது அஞ்செழுத்துமே

ஊதா, நீலம், பச்சை, சிகப்பு, மஞ்சள், பழுப்பு, இளநீலம் என்னும் 7 கதிர்கள் சேர்ந்த நிலையில் எரி ஒளி உண்டாகும். அவ் வொளி மிகுதிப்படும்போது ஆருயிர் எழுந்து புறம் செல்லும். அவ்வுயிர்

இறப்பினை மேற்கொண்டு உடம்பினை விட்டு விலகும். அதற்கு புகலிடமாக இருப்பது சிவபெருமான் திருவடி, அத்திருவடியினை மருவிப்பது திருவைந்தெழுத்தாகும்.

மரணம் — யமன் அரணம் — உயிருக்கு அரணாகிய முத்தி

விளக்கம் :

அவ்வாளி மிகுதிப்படும்போது ஆருயிர் எழுந்து புறம் செல்லும்:- முன்னோர்களாகினும் மற்றும் எப்பேர்ப்பட்டவர்களாகினும் கடைசியில் பிடி சாம்பல் ஆகி விடுவார்கள் என்பது ஆன்றோர் வாக்கு. இப்போது தூக்கு தண்டனையை நிறைவேற்றுவதற்கு மின்சார நாற்காலியை பயன்படுத்துகிறார்கள். அதில் கைதியை உட்கார வைத்து மின்சாரம் பாய்ச்சப்படுகிறது. அப்போது மிகுதியாய் இருப்பது பிடிசாம்பல்தான் என்று சொல்லப்படுகிறது. சாதாரணமாக சுடுகாட்டில் விறகு விராட்டி முதலியவைகளைக் கொண்டு எரிப்பதால் அதிக சாம்பல் உள்ளது ஆனால் மின்சாரம் உபயோகப்படுத்துங்கால் வேறு பொருள் இல்லாததாலும் அந்த உஷ்ணம் அதிகமாக இருப்பதாலும் பிடி சாம்பல்தான் இருக்கிறது. அதே உஷ்ணம் இன்னும் அதிகமானால் அந்த பிடி சாம்பலும் இல்லாமல் வெட்ட வெளியாய் போய்விடும். அதுபோல் நாம் ஐந்தெழுத்தை ஓதி தீவிரமாக தியானம் செய்து வந்தால் அந்த எரிஒளி மிகுதியாக வரும், அப்போது உடல் முழுவதும் கரைந்துவிடும், மீதம் ஒன்றும் இருக்காது. நாம் பூஜையில் ஊதுபத்தி கொளுத்தி வைக்கிறோம், அதில் சாம்பல் மீதம் ஆகிறது. இது வேறு எதற்காவது பயன்படும். அதே கற்பூரத்தை கொளுத்தினால் ஜோதி உண்டாகி மீதி ஒன்றும் இரா.. ஒரு காகிதத்தை வைத்து அதன் மேல் ஒரு லென்ஸின் மூலமாக சூரிய ஒளியைப் பாய்ச்சினால் ஒளி ஒருமுகமாகி அந்த காகிதத்தை எரிக்கிறது என்பதை உதாரணமாக கொள்ளவும், இதுதான் பிறப்பு இறப்பு அற்ற இடம். உயிர் இறைவனோடு கலக்கும் ஞான சம்பந்தர், சுந்தரர், அப்பர், வள்ளல்பெருமான் மறைந்து இறைவனடி சேர்ந்தார்கள். எனவே நமசிவாய என்னும் தூல பஞ்சாக்ஷரத்தை ஓதி, கர்ம சித்தி அடைந்து, மேலும் அதன் மூலம் ஒளிவடைந்து, இதர வகை பஞ்சாக்ஷரத்தை ஓதும் பக்குவம் பெற்று, புருவ நடுவில் நிலை நிறுத்தினால் 7 கிரணங்களால் ஆன எரி ஒளி பக்குவம் ஏற்பட்டு இத்தேகம் நீங்கி இறைவன் திருவடியை அடையலாம், அதனால்தான் அந்த திருவடியைக் கூட்டுவிப்பது அஞ்செழுத்து என்று அருளினார்.

இதை திருமூலர் சிவயோகப் பயிற்சியில் அருளும் திருக்கூத்து தரிசனம் என்பதை வைத்து சிந்திப்போம். திருமூலர் சிவயோகப் பயிற்சியில் ஆறு ஆதாரங்களில் புருவ நடுவாகிய சிற்றம்பலத்தில் விளங்கும் தாமரைகளில் சிவ என்னும் ஒலியும், அதன் வடிவாகிய செவ்வொளியின் அசைவும், நீல ஒளியின் நிலையுமே ஆனந்த தாண்டவம் என்றும்,

அகமார்க்கத்தில் தியான சொரூபமாக காண்பதே திருக்கூத்து தரிசனம் என்றும் சொல்கிறார். தற்காலத்தில் விஞ்ஞான ஆராய்ச்சிப்படி அணு (Atom) இரண்டு பிரிவாக உள்ளது (Protons & Electrons) அதில் ஒன்று நடுவில் நீல நிறத்தில் உள்ளது. அது எப்போதும் அசைந்துகொண்டே இருக்கும். விஞ்ஞானிகள் அந்த அசைவின் விளக்கம் காணமல் அதிசயப் படுகிறார்கள். இதையும் கருத்தில் கொண்டு மேல் சொன்ன கருத்தைப் பற்றி சிந்திக்கவும். ஆகவே அகமார்க்க தரிசனம் அமையவே புற உலகத்து மக்கள் கண்டு பழகவே இவை அமைந்தன என்பது தெளிவு. எனவே ஐந்தெழுத்தை அக மார்க்கமாக உணர்ந்து பழகினல் நமக்கும் திருக்கூத்து தரிசனம் கிடைக்கும் என்பது புலனுகிறது. இதைத்தான் அருணகிரிப் பெருமான் 'செவ்வாறு ருவில் திகழ் வேலவன்' என்றும், மற்றும் பல பெரியவர்கள் 'கற்பூர ஜோதி நடம் கண்புருவ பூட்டினிடம் தற்போத ஞானம்' என்றும் அருளியுள்ளார்கள் இவைகளை உய்த்துண ரின் நல்ல பலன் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. மேலே சொல்லிய படி ஒரு கான்வெக்ஸ் லென்சின் மூலம் சூரிய ஒளியை ஒருமுகப்படுத்தி ஒரு பொருளில் பாய்ச்சினல் அப்போது அப்பொருள் அந்த எரி ஒளி சூட்டிலே எரிந்து விடுகிறது. சாம்பலும் மீதி இருப்பதில்லை என்பதை வைத்து சிந்தித்துப் பார்த்தால் இது நன்கு விளங்கும்

திருமந்திரம் 2654

ஞாயிறு திங்கள் நவின்றொரு காலத்தில்
ஆயுறு மந்திரமாகும் அறிகிலர் சேயுறு
கன்னி திருவெழுத் தஞ்சையும்
வாயுற வோதி வழுத்தலு மாகுமே

ஞாயிறு — பிங்கலை வலப்பாகம் மூச்சி — சூரியன்
திங்கள் — இடைகலை இடப்பாகம் மூச்சி — சந்திரன்

வலப்பாகம், இடப்பாகம் மூச்சு எடுத்தும், தடுத்தும், விடுத்தும் பயிலும் போது ஆராய்ந்து மேற்கொள்ளும் மந்திரத்தை அறிகிலர். செவ்வரிபரந்த திருக்கண்களுடைய திருவருளாற்றலால் வெளிப்படும் நாதம் விந்து தத்துவங்களில் இருந்து எழுத்துக்கள் வெளிபடும். எனவே மேற்படி வீதம் மூச்சுவிட பயிலும் போது திருவைந்தெழுத்தை மனதால் ஓதி வாழ்த்த வேண்டும் என்பது கருத்து. அவ்வெழுத்தால் ஆகிய மந்திரங்களில் திருவைந்தெழுத்தே முதன்மையாகும். அதுவே உயிர்ப்புப் பயிற்சிக்கு திருமுறையாகும். அதை வாயார வாழ்த்தி வழுத்துவோமாக.

திருமந்திரம் 2655

குருவழியாய் குணங்க ளினின்று
கருவழியாய் கணக்கை அறுக்க

வரும்வழிமான மறுக்க வலலார்கட்கு
அருள்வழி காட்டுவது அஞ்செழுத்தாமே

சிவ குருவானவர் அருளிச் செய்த திருவைந்தெழுத்தின் மாறுப் பண்பின் வழிநின்றால் கருவழி புகுவதற்கு வாயிலாகிய வினைப்பயன்களை அறுத்து அகற்றலாம். அம்முறையால் வரும் வழியினையால் மாளச் செய்யவும், மறுக்கவும் வல்லார்க்கு திருவருள் திருவைந்தெழுத்துள் வழியினைக் காட்டும் திருவைந்தெழுத்து பொருள் மறையாகும். அதன் விரிவே அனைத்து நூல்கள் ஆகும்.

திருமந்திரம் 2656

வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத்தோதுங்
குறிப்பது வுன்னிற் குறைகழல் கூட்டுங்
குறிப்பறிவான்றவங் கோது ருவாமே

அஞ்சும்படியாக வினைத்துன்பம் தொடரும், அப்போது எங்கும் நிற்கின்றவன் நந்தி. அவன் திருப்பெயர் ஐந்தெழுத்தாகும். அதை விதிப்படி உறுதியாக நினைந்து ஓதி வந்தால் ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியினைக் கூட்டுவிக்கும். (வீரக்கழல் — மறைச்சிலம்படி) அத்தகைய தவத்தின் குறிப்புணர்வான் ஒருவன் சிவனடிக்கீழ் சிவனுரு வாய் நிலைத்திருப்பன். (வந்திடும்போது—வந்து துன்புறுத்தும்போது) ''மறைச் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்'' என்று சேக்கிழார் வாக்கில் காண்க. சேரமான் பெருமான் நாயனார் பூசையில் சிலம்பொலி கேட் டார் என்பதையும் வைத்து உய்த்து உணர்க.

திருமந்திரம் 2657

நெஞ்சு நினைத்து தம்வாயாற் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன அருள் பெறலாகுமே

ஐந்தெழுத்தின் சிறப்பை உணர்ந்து அப்பெரும் பொருள்தனை நீங்கா நினைவுடையராய், தூயராய், கணித்தும், வாயால் வாழ்த்தியும் வருவோர் செந்நெறி செல்வர். அவர்கள் தூங்கும் போதும் உன் துணைத்தாள் ஒன்றே புகலென்று அடைக்கலம் புகுவர். அதனால் அவர்கள் திருவருள் உருவாக சொல்லப்படும் மேகங்கள் தவழும் திரு வெள்ளிமலை மீது உறைந்தருளும் திருவைந்தெழுத்தால் பெறப்படும் சிவபெருமான் அருள் பெற்று உய்வர்.

திருமந்திரம் 2658

பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணரா
தீராமாற்றஞ் செய்வார் கொல் ஏழைமனிதர்
பராமுற்றங் கீழொடு பல்வகை யாலும்
அராமுற்றஞ் சூழ்ந்த அகலிடந் தானே

முழு முதற்கடவுள் சிவபெருமான் ஆருயிர்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்த பொருள் மறை திருவைந்தெழுத்து ஆகும். அத்திரு வைந்தெழுத்தின் பெருமை உணராதவர்கள் ஆணவ வல்லிருளாகிய இராவினை மாற்றம் செய்ய வன்மையுடையவர் ஆவாரோ! அந்தோ அறிவிலா ஏழை மனிதராயிருக்கின்றனரே. ஏனை மந்திரங்கள் அனைத்தும் புகழ் மறையர்கும் என்று சொல்லப்படுகிறது

ஐந்து—ஐந்தெழுத்து இராமாற்றம்—அஞ்ஞான இருளைக் கெடுத்தல்

ஐந்தெழுத்தே அனைத்தும் :-

அண்டம் பிண்டம் ஆகிய உலகமும் உடல்களும் திருவைந்தெழுத்தால் ஆனவை என்பது நம் பெரியவர்கள் வாக்கு.

சிவவாக்கியர் பாடலில் :

"நவ்விரண்டும் காலதாய் நவின்ற மவ்வயிறதாய்ச்
சிவ்விரண்டு தோளதாய் சிறந்த வவ்வுவாயதாய்
யவ்விரண்டு கண்ணதாய் எழுந்துநின்ற நேர்மையின்
செவ்வையொத்த நின்றதே சிவாயநம அஞ்செழுத்துமே"

என்று அருளப்படுகிறது.

ஐம்பதெழுத்தும் அஞ்செழுத்தில் சிவாயநமவில் 'சி' சிவனை காட்டுகிறது. 'வா' இறைவன் திருவருளை காட்டுகிறது. இவை இரண்டும் எங்கும் நிறைந்தவை. சிவம் எங்கும் நிறைந்து கூட அனைத்து இடங்களிலும் அசைவதற்கு இடம் இல்லாமல் நிறைந்து நிற்கின்றது என்பது நமது சித்தாந்தம். அதனால் சிவனை அசலன் என்று சொல்லப்படுகிறது.

'ய' என்பது அனைத்து உயிர்களையும் குறிக்கிறது. 'ந' என்பது மாயை, கன்மம், திரோதம் ஆகியவைகளை குறிக்கிறது. கன்மம் உலகத்தில் நடக்கும் அனைத்து காரியங்களையும் காட்டுகிறது. மாயை என்பது அழியக் கூடியவைகள் அனைத்தையும் காட்டுகிறது. அதாவது சாஸ்வதமில்லாத பொருள்கள் என்று காட்டுகிறது.

மாயா :- யா — வருதல், மாய் — அழிதல் என்பது அதன் பொருள். 'ம' என்பது ஆணவத்தை குறிக்கிறது. ஆணவம் என்பது

யான், எனது என்பது ஆகும். யான் என்பது தனு (உடல்) கரணம் (உட் கருவிகள்) என இருவகைப்படும். இதில் எல்லா உடல்கள் கரணங்கள் அடங்கி விடுகிறது. எனது என்பது புவனம் (உலகம்) போகம் (உலகத்தில் உள்ளவைகளை துய்ப்பது) இது [அனைத்து உலகத்தையும், அதன் போகத்தையும் குறிக்கிறது. எனவே அஞ்செழுத்தில் அனைத்துலகமும் அடங்கும் என்பதும், அதுவே அனைத்துலகமும் என்பதும் நமது பெரியவர்கள் அருள் வாக்கு. திலகவதி அம்மையார் திருநாவுக்கரசு நாயனுருக்கு திருக்கயிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்து ஓதி கொடுத்தார் என்று பெரிய புராணம் கூறுகிறது.

எனவே நாம் ஒருவர்க்கு எது கொடுப்பினும், நாம் எது செய்யினும் திருவைந்தெழுத்து ஓதி கொடுக்க, செய்க. திருநீலநக்க நாயனுர் பூசை முடிவில் திருவைந்தெழுத்து ஓதி செபித்தார் என்று பெரிய புராண வரலாறு கூறுகிறது நாமும் அப்படியே செய்தல் வேண்டும். அமர்நீதி நாயனுர் ஐந்தெழுத்தோதி தராசு தட்டில் ஏறி நேர் நிற்கச் செய்தார். தண்டியடிகள் நாயனுர் ஐந்தெழுத்தோதிக் குளத்தில் மூழ்கி கண் பெற்றுர். சிறப்புலி நாயனுர் திருவைந்தெழுத்தாலேயே சிவ வேள்வி இயற்றிச் சிறந்தனர்.

மாற்றுரை மாற்றும் வாள் திருவைந்தெழுத்து. அதை ஓதுபவர்கள் நன்னெறி செல்வார்கள். ஓவாது திருவைந்தெழுத்து ஓதுவதால் அவர் பால் உறுபிணிகள் வர அஞ்சும். ஐந்தெழுத்தும் பாடிய பொருளாய் உள்ளவன் முன்னை பழம் பொருட்டு முன்னைப் பழம் பொருளாகிய சிவ பெருமான் அஞ்செழுத்தும் உணரார் அறிவிலார். நெஞ்சம் அகலா இருள்வண்ணமாய் இருக்கும். ஆனய நாயனுர் புல்லாங்குழலில் வைத்து ஓதியது திருவைந்தெழுத்து ஆகும். ஆண்டவன் உவந்து அவர்க்கு மீண்டும் வரரா வழியருள்புரிய வாயிலாயதும் அத்திருவைந்தெழுத்தே. அன்புடைய தாய்மார்கள் தங்கள் சேய்களின் எழில்நலம், பாராட்டல், தாலாட்டல், சீராட்டல் முதலிய நற்பொழுதுகளில் எல்லாம் திருவைந்தெழுத்து ஓதி வந்தால் அது கர்ப்பத்தில் உள்ள சிசுவுக்கு ஓர் ஊன்றுகோலாக இருக்கும். அந்த பெண்மணிக்கும் ஒரு கவசமாக இருக்கும்.

பிரகலாதன், அஷ்டாவக்ரன் முதலானேர் வரலாற்றில் கர்ப்பத்தில் உள்ள சிசுவுக்கு பகவன் நாமா எப்படி பலனளித்தது என்று நாம் அறிவோம். பெருமிழலைக்குறும்பநாயனுர் திருவைந்தெழுத்தினையே கேளும் பொருளாகவும், உணர்வுமாய் கொண்டார். காரைக்கால் அம்மையார் ஐந்தெழுத்தோதி வண்டல் பயின்றனர். (வண்டல் — விளையாட்டு) நம்பி ஆரூர் வரவு நோக்கி குருகாவூர் குழகர் பொதிசோறும் பந்தலும் அமைத்து இருந்து அருளினுர். நம்பி ஆரூரரும் அங்குவந்து சிவாயநம என ஓதி அமர்ந்தார். அவ்வொழுக்கத்தையே நாம் கடைப்பிடித்தால்

நலமாய் இருக்கும். புகழ்ச்சோழ நாயனூர் தழனிடை மூழ்கும்போதும் ஓதியது திருவைந்தெழுத்தாகும்.

திருமந்திரம் 945

அஞ்செழுத்தால் ஐந்துபூதம் படைத்தனன்
அஞ்செழுத்தால் பலயோனிப் படைத்தனன்
அஞ்செழுத்தால் இவ்வகலடி தாங்கினன்
அஞ்செழுநிதாலே அமர்ந்து நின்றுனே

ஐந்தெழுத்தால் அகிலமும் விளைந்தது. ஐந்தெழுத்தால் ஐம்பூதங்களையும், பல யோனிகளையும் படைத்தனன். அவற்றுலேயே இவ்வுலகத்தை காத்தனன். அவற்றுள் ஒன்றுய் அமர்த்தனன்

திருவைந்தெழுத்து பல வகைகள்படும். அவைகளை பின்வரும் அத்தியாயங்களில் அவற்றின் பத விளக்கம். வகைகள் இவைகளைப்பற்றி காண்போம். இப்பாட்டின் விளக்கத்திற்கு மட்டும் இரு வகையை காண்போம். நமசிவாய - சிவாயநம என்பது பஞ்சாக்ஷரம். திருவைந்தெழுத்தில் சிகார வகாரங்கள் சிவமும் சக்தியும். எனவே ஆவை முதலாக நின்று மகாரமாகிய மாயையினை கூடி, யகாரமாகிய உயிர்களை நகாரமாகிய திரோதாயியைக் கொண்டு மறைப்பித்து வினைப்போகம் ஊட்டி காத்து வருகிறது என்பதை குறிப்பிடுகிருர்.

பலயோனி — எண்பத்து நான்கு நூருயிரமான பிறவி வேறுபாடு
பூதம் படைத்தனன் — உலகம் படைத்தனன்
யோனி படைத்தனன் — யோனியில் பிறக்க படைத்தனன் என
உயிரை உடலோடு கூட்டி வைப்பதையும் குறிக்கிறது

திருமந்திரம் 946

வீழ்ந்தெழலாம் விகிர்தன் நாமத்தைச்
சோந்தொழியாமல் தொடங்கும் ஒருவர்க்குச்
சார்ந்த வினைத்துயர் போகத்தலைவனும்
போந்திடம் என்னும் புரிசடையானே

திருவைந்தெழுந்து போகமும், மோக்ஷமும் நல்கும். இறைவன் திருநாமமாகிய திருவைந்தெழுத்தை மனம் சேர்ந்து விடாமல் செபிப்பவர்க்கு போகத்தை துய்த்தலாகிய வீழ்தலும் ஆதனின்று மீழ்தலாகிய எழுதலும், இவைகள் இறைவன் உயிர்களை ஆட்கொள்ள போகங்களை கொடுத்து இவைகளை துய்ப்பித்து ஆட்கொள்கிருன் என்பதை குறிக்கிறது.

வீழ்தல் — விரும்புதல் எழுதல் — போகத்தில் இருந்து மீளல்

திருமந்திரம் 948

உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலுமாய் நிற்கும்
விண்ணின்ற மார் விரும்பி அடிதொழ
எண்ணின் எழுத்து அஞ்சுமாக நின்றுனே

ஸ்ரீ பஞ்சாக்ஷர வடிவாய் நிற்கும் சிவன் மருந்து முதலிய எல்லா மாய் உதவுவன். சுவர்க்கத்தில் இருக்கும் அமரர்கள் அன்பு பூண்டு அடி வீழ்ந்து வணங்க பாசங்கள் நீங்கிய ஆன்மாக்களின் உள்ளத்தினின்று ஸ்ரீ பஞ்சாக்ஷர வடிவாக் நிலே பெற்ற சிவன் அவர்கள் உண்ணுகின்ற அமுதமாயும், வற்ருத கால தத்துவமாகவும், இசையோடு கூடிய வேதமாயும், பண்ணேடு கூடிய பாடலாயும் நிற்பன் என்றவாறு அவரவர்கள் பரிபாகத்திற்கு ஏற்ப பரமனிருப்பன் எனப்படுகிறது.

புண்ணிய மேலீட்டில் உள்ளவர்க்கு பதவியை ஏற்றவர்கள் விரும்பி அடி தொழுவார்களானல் அவர்களுக்கு அமுதமாய் இருப்பான். காய சித்தியாகிய யோகப்பயனே விரும்புவார்க்கு அழிவற்ற காலமாய் இருப் பான். விதிமார்க்கத்தை விரும்புவார்க்கு வேதமாய் இருப்பன். பக்தி மார்க்கத்தை விரும்புவார்க்கு பண்ணுரு பாடலாயிருப்பன்.

திருமந்திரம் 948

ஐந்தின் பெருமையே அகலிடமாவதும்
ஐந்தின் பெருமையே ஆலயமாவதும்
ஐந்தின் பெருமையே அறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெய்ப் பாலனுமாமே

திருவைந்தெழுத்தின் பெருமையை தெரிவிக்கிறது இந்த அகன்ற உலகம் மாற்றமும், அழிவுமின்றி நிலே பெற்று நிற்பதும், ஆலயங்கள் அமைவதும், தர்ம சொரூபியான பெருமான் கருணே வழங்குவதும் திரு வைந்தெழுத்து பெருமையாலேயாகும். திருவைந்தெழுத்து செபிக்கும் முறை தெரிந்து செபிக்க அவனே பரிபாலகனுக எழுந்தருளுவான்.

ஆலயமாவது :-

| | | |
|---|---|---|
| கர்ப்பக்ருஹம் | — | சிகரம் |
| அர்த்த மண்டபம் | — | வகரம் |
| இடபம் எழுந்தருளிய மகாமண்டபம் | — | யகரம் |
| கூத்தபிரான் இருக்கும் மண்டபம் | — | நகரம் |
| பலிபீடம் | — | மகரம் |

திருமந்திரம் 949

வேறெழுத்தாய் விண்ணாய் அப்புறமாய் நிற்கும்
நீரெழுத்தாய் நிலந்தாங்கியும் அங்குள்ள
சீரெழுத்தாய் அங்கியா யுராமெழுத்து
ஒரெழுத்து ஈசனும் ஒன்சுடராமே

இறைவன் அக்கரங்கள் அனைத்துமாய் ஒன்சுடருமாவான் என்பது. பிரணவமயமாயும், ஆகாய வீசமாகவும், அதற்குபின் வா யு, தேயு, அப்பு பீசங்களாயும், நிலமாக ீதாங்கியிருக்கும் பிருத்வி பீசமாகவும், ஐம்பூதங்களிலும் வியாபித்துள்ள சிறப்பெழுத்தாகிய சிகரமாயும், அதற்கு உடலாக உள்ள வகரமாயும் நின்ற ஒன்சுடரான். இறைவன் பிரணவமாய், ஐம்பெரும்பூத எழுத்துக்களாய் அவற்றிற்கு அப்பாலு மாய் நிற்பன். இவ்வெழுத்துக்களாய் நின்றியக்கும் சிவன் ஒளி பழம் பினன். சிவசக்தி அபின்னமாய் நிற்பன்.

அப்பர் பெருமான் வாக்கு :-

படைக்கலமாக உன்நாமம் எழுத்தஞ்சை என்நாவில் கொண்டேன்
இடைக்கலனல்லேன் எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுதுவணங்கி தூநீறணிந்துன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லை சிற்றம்பலத்தரனே

அணிதில்லை சிற்றம்பலத்து அரனே உன் பெயர் பல்லாயிரங்களுள் திருவைந்தெழுத்தை படைக்கலமாக என்நாவில் கொண்டேன். அப் படை ஆணவ படையை அ க ற் று ம். மாயை படையை வராமல் மாற்றும். பிறப்பு இறப்பு அறுக்கும். கன்ம படையை கழற்றும். இம் மும்மல படையை போக்கும் படைக்கலம் திருவைந்தெழுத்து'

இடைக்கலன் அல்லேன் — உனக்கு ஆட்செய்யாமல் இருப்பவனல்ல
எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன் — உனக்கு மீளா அடிமை
உன் அடிமை துடைக்கினும் போகேன் — நீ வெறுத்து ஒதுக்கினும் நான் உன்னைவிட்டு நீங்க மாட்டேன்
திருநீறணிந்து உன்னை தொழுது வணங்கி அடைக்கலம் காண்பேன்

சிதம்பர (நடேசர்) சம்மேளன அஷ்டோர்த்தரத்தில் '' பஞ்சாட்சர்யை நம : — பஞ்சாட்சராய நம : '' என்று சிவம், சக்தியை பஞ்சாக்ஷரம் உருவமாக கண்டு சொல்லப்படுகிறது. ஸ்ரீஅருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் அஷ்டோத்தரம் (69-70)ல் சக்தியை பஞ்சாக்ஷர ஸ்வரூபமாய் கூறப் படுகிறது. ஸ்ரீ பஞ்சாக்ஷர மயாயதே நம : சஹஸ்ரநாமாவளி 671 - 673ல் அதே கருத்து சொல்லப்படுகிறது.

'' பஞ்சாக்ஷர ஸ்வரூபாய நம: — ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷர்யை நம: ''

திருவைந்தெழுத்து மந்திரம் சித்த வித்தை எனப்படும். காயத்ரி முதலான சிற்சில மந்திரங்கள் இன்னாருக்குத்தான் உண்டு என்ற நியமம் இருப்பதுபோல இம்மந்திரங்களுக்கு இல்லை. அனைவரும் இம்மந்திரம் உபதேசம் பெறும் தகுதியுடையவர்கள். இதைத்தான் திருமூலர் திருமந்திரத்தில் ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்.'' என அருளுகிறார். ' திருவைந்தெழுத்தை பயில்வதில் உலக மக்கள் அனைவரும் உரிமையுடையவர்.

திருமந்திரம் 2729

அம்பலமாவது அகில சராசரம்
அம்பலமாவது ஆதிப் பிரானடி
அம்பலமாவது அப்புத்தீ மண்டலம்
அம்பலமாவது அஞ்செழுத் தாகுமே

அகில சராசரங்களும் சிவபெருமான் கூத்தியற்றும் திருவம்பலமாகும். ஆதியாகிய நடப்பாற்றலையுடைய நாயகன் திருவடியும் அம்பலமாகும். நீர் மண்டலம், தீ மண்டலம், ஏனைய பூதங்களும் திருவம்பலமாகும். திருவைந்தெழுத்தும் அம்பலமாகும்.

திருமந்திரம் 957

அஞ்சுக அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
நெஞ்சத்துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சகமில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்சம் இதுவென்று சாற்றுகின்றேனே

ஐந்து மலங்களும் நீங்குவதற்கு திருவைந்தெழுத்தின் உண்மையை அறி. அப்போது சிவபெருமான் நெஞ்சத்திடத்து நிறைந்து வெளிப்படுவன். அந்நெஞ்சத்தில் பிறவிக்கு வித்தாகிய தீயநினைவுகள் தோன்ற. இவ்வுடம்பும் விரும்பும் நாள்வரை அழியாதிருக்கும். இந்நிலையே நமக்கு நிலைத்த புகலிடம். அம்+சுகம் என்பது அஞ்சுகம் என்றாகும். அப்போது மிகவும் இன்பம் தரும் என்றும் கொள்ளலாம்.

திருமந்திரம் 944

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தே யுமாவது அறிந்தபின்
ஐம்பதெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே

ஐம்தெழுத்தே தமிழ் மறை, ஆகமும் ஆகும். அதை உணர்ந்தபின் இவையனைத்தும் ஒடுங்கி ஐந்தெழுத்தே நின்று நிலவி முதன்மை பெறும்.

நலமாய் இருக்கும். புகழ்ச்சோழ நாயனுர் தழனிடை மூழ்கும்போதும் ஓதியது திருவைந்தெழுத்தாகும்.

திருமந்திரம் 945

அஞ்செழுத்தால் ஐந்துபூதம் படைத்தனன்
அஞ்செழுத்தால் பலயோனிப் படைத்தனன்
அஞ்செழுத்தால் இவ்வகலடி தாங்கினன்
அஞ்செழுநிதாலே அமர்ந்து நின்ருனே

ஐந்தெழுத்தால் அகிலமும் விளைந்தது. ஐந்தெழுத்தால் ஐம்பூதங்களையும், பல யோனிகளையும் படைத்தனன். அவற்ருலேயே இவ்வுலகத்தை காத்தனன். அவற்றுள் ஒன்ருய் அமர்த்தனன்

திருவைந்தெழுத்து பல வகைகள்படும். அவைகளை பின்வரும் அத்தியாயங்களில் அவற்றின் பத விளக்கம். வகைகள் இவைகளைப்பற்றி காண்போம். இப்பாட்டின் விளக்கத்திற்கு மட்டும் இரு வகையை காண்போம். நமசிவாய - சிவாயநம என்பது பஞ்சாக்ஷரம். திருவைந்தெழுத்தில் சிகார வகாரங்கள் சிவமும் சக்தியும். எனவே ஆவை முதலாக நின்று மகாரமாகிய மாயையினை கூடி, யகாரமாகிய உயிர்களை நகாரமாகிய திரோதாயியைக் கொண்டு மறைப்பித்து வினைப்போகம் ஊட்டி காத்து வருகிறது என்பதை குறிப்பிடுகிருர்.

பலயோனி — எண்பத்து நான்கு நூருயிரமான பிறவி வேறுபாடு
பூதம் படைத்தனன் — உலகம் படைத்தனன்
யோனி படைத்தனன் — யோனியில் பிறக்க படைத்தனன் என உயிரை உடலோடு கூட்டி வைப்பதையும் குறிக்கிறது

திருமந்திரம் 946

வீழ்ந்தெழலாம் விகிர்தன் நாமத்தைச்
சோர்ந்தொழியாமல் தொடங்கும் ஒருவர்க்குச்
சார்ந்த வினைத்துயர் போகத்தலைவனும்
போந்திடம் என்னும் புரிசடையானே

திருவைந்தெழுந்து போகமும், மோக்ஷமும் நல்கும். இறைவன் திருநாமமாகிய திருவைந்தெழுத்தை மனம் சோர்ந்து விடாமல் செபிப்பவர்க்கு போகத்தை துய்த்தலாகிய வீழ்தலும் ஆதனின்று மீழ்தலாகிய எழுதலும், இவைகள் இறைவன் உயிர்களை ஆட்கொள்ள போகங்களை கொடுத்து இவைகளை துய்ப்பித்து ஆட்கொள்கிருன் என்பதை குறிக்கிறது.

வீழ்தல் — விரும்புதல் எழுதல் — போகத்தில் இருந்து மீளல்

திருமந்திரம் 948

உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலுமாய் நிற்கும்
விண்ணின்ற மார் விரும்பி அடிதொழ
எண்ணின் எழுத்து அஞ்சுமாக நின்றனே

ஸ்ரீ பஞ்சாக்ஷர வடிவாய் நிற்கும் சிவன் மருந்து முதலிய எல்லா மாய் உதவுவன். சுவர்க்கத்தில் இருக்கும் அமரர்கள் அன்பு பூண்டு அடி வீழ்ந்து வணங்க பாசங்கள் நீங்கிய ஆன்மாக்களின் உள்ளத்தினின்று ஸ்ரீ பஞ்சாக்ஷர வடிவாக நிலை பெற்ற சிவன் அவர்கள் உண்ணுகின்ற அமுதமாயும், வற்றாத காலதத்துவமாகவும், இசையோடு கூடிய வேதமாயும், பண்ணோடு கூடிய பாடலாயும் நிற்பன் என்றவாறு அவரவர்கள் பரிபாகத்திற்கு ஏற்ப பரமனிருப்பன் எனப்படுகிறது.

புண்ணிய மேலீட்டில் உள்ளவர்க்கு பதவியை ஏற்றவர்கள் விரும்பி அடி தொழுவார்களானால் அவர்களுக்கு அமுதமாய் இருப்பான். காய சித்தியாகிய யோகப்பயனை விரும்புவார்க்கு அழிவற்ற காலமாய் இருப் பான். விதிமார்க்கத்தை விரும்புவார்க்கு வேதமாய் இருப்பன். பக்தி மார்க்கத்தை விரும்புவார்க்கு பண்ணுரு பாடலாயிருப்பன்.

திருமந்திரம் 948

ஐந்தின் பெருமையே அகலிடமாவதும்
ஐந்தின் பெருமையே ஆலயமாவதும்
ஐந்தின் பெருமையே அறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெய்ப் பாலனுமாமே

திருவைந்தெழுத்தின் பெருமையை தெரிவிக்கிறது இந்த அகன்ற உலகம் மாற்றமும், அழிவுமின்றி நிலை பெற்று நிற்பதும், ஆலயங்கள் அமைவதும், தர்ம சொரூபியான பெருமான் கருணை வழங்குவதும் திரு வைந்தெழுத்து பெருமையாலேயாகும். திருவைந்தெழுத்து செபிக்கும் முறை தெரிந்து செபிக்க அவனே பரிபாலகனாக எழுந்தருளுவான்.

ஆலயமாவது :-

| | | |
|---|---|---|
| கர்ப்பக்ருஹம் | — | சிகரம் |
| அர்த்த மண்டபம் | — | வகரம் |
| இடபம் எழுந்தருளிய மகாமண்டபம் | — | யகரம் |
| கூத்தபிரான் இருக்கும் மண்டபம் | — | நகரம் |
| பலிபீடம் | — | மகரம் |

திருமந்திரம் 949

வேறெழுத்தாய் விண்ணாய் அப்புறமாய் நிற்கும்
நீரெழுத்தாய் நிலந்தாங்கியும் அங்குள்ள
சீரெழுத்தாய் அங்கியா யுராமெழுத்து
ஓரெழுத்து ஈசனும் ஒன்சுடராமே

இறைவன் அக்கரங்கள் அனைத்துமாய் ஒன்சுடருமாவான் என்பது. பிரணவமயமாயும், ஆகாய வீசமாகவும், அதற்குபின் வாயு, தேயு, அப்பு பீசங்களாயும், நிலமாக தாங்கியிருக்கும் பிருத்வி பீசமாகவும், ஐம்பூதங்களிலும் வியாபித்துள்ள சிறப்பெழுத்தாகிய சிகரமாயும், அதற்கு உடலாக உள்ள வகரமாயும் நின்ற ஒன்சுடரான். இறைவன் பிரணவமாய், ஐம்பெரும்பூத எழுத்துக்களாய் அவற்றிற்கு அப்பாலு மாய் நிற்பன். இவ்வெழுத்துக்களாய் நின்றியக்கும் சிவன் ஒளி பழம் பினன். சிவசக்தி அபின்னமாய் நிற்பன்.

அப்பர் பெருமான் வாக்கு :-

படைக்கலமாக உன்நாமம் எழுத்தஞ்சை என்நாவில் கொண்டேன்
இடைக்கலனல்லேன் எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுதுவணங்கி தூநீறணிந்துன்
அடைக்கலம் கண்டாய் அணிதில்லை சிற்றம்பலத்தரனே

அணிதில்லை சிற்றம்பலத்து அரனே உன் பெயர் பல்லாயிரங்களுள் திருவைந்தெழுத்தை படைக்கலமாக என்நாவில் கொண்டேன். அப் படை ஆணவ படையை அகற்றும். மாயை படையை வராமல் மாற்றும். பிறப்பு இறப்பு அறுக்கும். கன்ம படையை கழற்றும். இம் மும்மல படையை போக்கும் படைக்கலம் திருவைந்தெழுத்து

இடைக்கலன் அல்லேன் — உனக்கு ஆட்செய்யாமல் இருப்பவனல்ல
எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன் — உனக்கு மீளா அடிமை
உன் அடிமை துடைக்கினும் போகேன் — நீ வெறுத்து ஒதுக்கினாலும் நான் உன்னைவிட்டு நீங்க மாட்டேன்
திருநீறணிந்து உன்னை தொழுது வணங்கி அடைக்கலம் காண்பேன்

சிதம்பர (நடேசர்) சம்மேளன அஷ்டோத்தரத்தில் '' பஞ்சாட்சர்யை நம : — பஞ்சாட்சராய நம : '' என்று சிவம், சக்தியை பஞ்சாக்ஷரம் உருவமாக கண்டு சொல்லப்படுகிறது. ஸ்ரீ அருள்மிகு அர்த்தநாரீஸ்வரர் அஷ்டோத்தரம் (69-70)ல் சக்தியை பஞ்சாக்ஷர ஸ்வரூபமாய் கூறப் படுகிறது. ஸ்ரீ பஞ்சாக்ஷர மயாயதே நம : சஹஸ்ரநாமாவளி 671 - 673ல் அதே கருத்து சொல்லப்படுகிறது.

'' பஞ்சாக்ஷர ஸ்வரூபாய நம: — ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷர்யை நம: ''

திருவைந்தெழுத்து மந்திரம் சித்த வித்தை எனப்படும். காயத்ரி முதலான சிற்சில மந்திரங்கள் இன்னாருக்குத்தான் உண்டு என்ற நியமம் இருப்பதுபோல இம்மந்திரங்களுக்கு இல்லை. அனைவரும் இம்மந்திரம் உபதேசம் பெறும் தகுதியுடையவர்கள். இதைத்தான் திருமூலர் திரு மந்திரத்தில் ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என அருளுகிறார். 'திருவைந்தெழுத்தை பயில்வதில் உலக மக்கள் அனைவரும் உரிமையுடையவர்.

திருமந்திரம் 2729

அம்பலமாவது அகில சராசரம்
அம்பலமாவது ஆதிப் பிரானடி
அம்பலமாவது அப்புத்தீ மண்டலம்
அம்பலமாவது அஞ்செழுத் தாகுமே

அகில சராசரங்களும் சிவபெருமான் கூத்தியற்றும் திருவம்பல மாகும். ஆதியாகிய நடப்பாற்றலையுடைய நாயகன் திருவடியும் அம்பல மாகும். நீர் மண்டலம், தீ மண்டலம், ஏனைய பூதங்களும் திருவம்பல மாகும். திருவைந்தெழுத்தும் அம்பலமாகும்.

திருமந்திரம் 957

அஞ்சுக அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
நெஞ்சத்துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சகமில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்சம் இதுவென்று சாற்றுகின்றேனே

ஐந்து மலங்களும் நீங்குவதற்கு திருவைந்தெழுத்தின் உண்மையை அறி. அப்போது சிவபெருமான் நெஞ்சத்திடத்து நிறைந்து வெளிப் படுவன். அந்நெஞ்சத்தில் பிறவிக்கு வித்தாகிய தீயநினைவுகள் தோன்றா. இவ்வுடம்பும் விரும்பும் நாள்வரை அழியாதிருக்கும். இந்நிலையே நமக்கு நிலைத்த புகலிடம். அம்+சுகம் என்பது அஞ்சுகம் என்றாகும். அப்போது மிகவும் இன்பம் தரும் என்றும் கொள்ளலாம்.

திருமந்திரம் 944

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தே யுமாவது அறிந்தபின்
ஐம்பதெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே

ஐம்பதெழுத்தே தமிழ் மறை, ஆகமும் ஆகும். அதை உணர்ந்தபின் இவையனைத்தும் ஒடுங்கி ஐந்தெழுத்தே நின்று நிலவி முதன்மை பெறும்.

எல்லா வேதங்களும், ஆகமங்களும் ஓங்காரத்துடன் கூடிய ஐம்பது எழுத்துக்களும் அஞ்செழுத்தில் அடங்கின.

பெரிய புராணம் 2169

முந்தை முதன்மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனுர் எழுத்தஞ் சென்பர்

பெரிய புராணம் 2601

ஆதிமந்திரம் அஞ்செழுத்தோதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமோ

பட்டினத்தார் பாடல்

விதியாய் இருக்கும் ஐந்தெழுத்தும்
வேதாகமும் முத்தமிழும்

திருமுறை - 11 - 9240

அஞ்செழுத்துங் கண்டீர்
அருமறைகள் ஆவனவும்

காஞ்சி புராணம் — கடவுள் - 18

எவ்வெவர்க் கோட்படும் பொருளும்
அஞ்செழுத்தின் அடங்கி

உண்மை விளக்கம் — 44 :

"அஞ்செழுத்தே ஆகமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும் அஞ்செழுத்தே
ஆனந்த தாண்டவமும் ஆறுறுருக்கப்பாலாம் - ஆம்
மோனந்த மாமுத்தியும்"

எனும் வெண்பாவில் ஆகமங்கள், அருமறைகள், ஆதிபுராணங்கள், ஆனந்ததாண்டவம் எல்லாம் ஐந்தெழுத்தே என்று அருளப்படுகிறது.

வள்ளல் பெருமான் இராமலிங்க ஸ்வாமிகள் தனது அருட்பாவில் பலவிதங்களில் ஐந்தெழுத்தின் சிறப்பைப்பற்றி பேசுகிறுர்.

"உன்னுடைய நாமம் ஆயிரம் அன்றே நூறும்
அன்றே ஈரைந்தன்றே
ஆயிரம்பேர் எந்தை எழுத்தைந்தே காண்"

ஆயிரம் நாமங்களுடைய இறைவனின் எழுத்து ஆயிரம் அன்று நூறு அன்று, ஈரைந்து (பத்து) அன்று, ஐந்தே காண். இப்படி சுருக்கமாக இருந்தும் உன்னை நினைக்கிலேனே. என்றும் அவை எழுத்து

என்றும் ஐந்தெழுத்தில் உன்னை அர்ச்சிக்கின்றேன் என்றும் ஐந்தெழுத்தால் அர்ச்சிக்கும் சிறப்பை பேசுகிறார்.

மேலும் : '' சீர்தருநாவுக்கரையரைப்போல் இச்சிறியனும் ஓர்
காார்தருமாயை சமணன் மனக்கருங்கல்லில்கட்டி பார்தரு
பாவகடலிடை வீழ்திடப்பட்டு உழன்றே ''

என்று அருளுகிறார். நாவுக்கரசர் சமணர்களால் கல்லில் பூட்டப்பட்டு கடலில் தள்ளப்பட்டும் ஐந்தெழுத்தோதி கரையேறினார். அதுபோல் யானுமே மாயையாகிய சமணர்களால் மனமாகிய கருங்கல்லால் கட்டப்பட்டு பாவகடலில் தள்ளப்பட்டேன். ஐந்தெழுத்து ஓதுகிறேன் கரையேற்று அரசே என்று வேண்டுகிறேன்,

மேலும் வள்ளல் பெருமான், ஞானசம்பந்தர் பெருமான் முத்து சிவிகை பெற்றது உந்தன் ஐந்தெழுத்தே என்கிறார். அதுவே திரு மாலுக்கும் பிரமனுக்கும் காப்பதும் படைப்பதும் தொழில் ஈந்தது என்கின்றார்.

அருட்பா :

தேரோங்கும் காழிக்கண் மெய்ஞ்ஞான பாலுண்ட செம்மணியே
சீரோங்குமுத்து சிவிகையின்மேல் வைத்ததேவ உன்றன்
பேரோங்கு ஐந்தெழுத்தன்றோ படைப்பை பிரமனுக்கு
ஏரோங்கு காப்பை திருமாலுக்கு ஈந்ததுவே ''

மேலும் வள்ளல் பெருமான் அருட்பாவில் :

'' என்னிடம் அஞ்செழுத்தாம் மந்திரபடையுண்டு ''
'' ஊன் செய் நாவால் உன் ஐந்தெழுத்து எளியேன்
ஓதிநீ வந்தருள் போற்றி ''

என்றும், ஐந்தெழுத்து ஐந்து மலங்களை (ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாமை) வெந்து விழச்செய்யும். மன்னரை கனுதனில் சேர்த்த நமச்சிவாய காண் நம் பெறும் துணையே என்றும், நமச்சிவாயத்தை நான் மறவேன் என்றும், அருட்பாவில் ஐந்தெழுத்தின் சிறப்பையும் பெருமையையும் பல இடங்களில் அருளுகிறார்.

மேலும் அருட்பாவில் வள்ளல் பெருமான் என்தலையில் எழுதாக் குறையினால் உலகில் தேடி அலைகிறேன். நமச்சிவாயப் பொருளே என்று புகழ்ந்தாலே போதாதா என்கின்றார்.

அருட்பா :

தாதாதாதாதாதாதாக் குறைக்கென் செய்குதும்யாம்
தாதாதா என்றுலுகில்தான் அலைந்தோம் — போதாதா
நந்தா மணியே நமச்சிவாயப் பொருளே
எந்தாய் எனப் புகழவே ''

முதல் வரியில் 7 'தா'க்கள் உள்ளது. ஏழு தாவையும் ஏழுதரம் படிக்காமல் 'எழுதா' என்று படிக்க வேண்டும். எழுதாக்குறைக்கு (என் தலை மேல்) நான் என்ன செய்ய முடியும். இரண்டாம் வரியில் தாதாதா என்ற மூன்று தாக்களை 2ம் 1ம் ஆக பிரித்தால் 'தாதா' 'தா' என்று ஆகும். தாதா — வள்ளல் தா — கொடு

தத்துவதீபிகை :

ஐம்பதெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்பதெழுத்தே அண்டமும் பிண்டமும்
ஐம்பதெழுத்தை அறிவால் அறிந்தபின்
ஐம்பதெழுத்தும் அஞ்செழுத்தாகுமே

என்று அருளப்படுகிறது.

இதே கருத்தை திருமந்திரப்பாட்டிலும் காண்க.

சம்பந்தர் தேவாரம் :

செந்தழல் ஓம்பும் செம்மை அந்தணர்க்கு
அந்தியும் சந்தியும் அஞ்செழுத்துமே

திருஞான சம்பந்தர் ஸ்வாமிக்கு பூணூல் போடும் போது அந்தணர்கள் ஹோமம் செய்தார்கள். அப்போது சம்பந்தர் பெருமான் எல்லாமே அஞ்செழுத்து ஆகும் என்று அருளுகிறார்.

வள்ளல் பெருமான் "அலை எழுத்துந்தெறும் ஐந்தெழுத்தால் உன்னை அர்ச்சிக்கின்றோர்" என்று ஐந்தெழுத்தால் அர்ச்சிக்கும் சிறப்பை பேசுகிறார்.

வள்ளல் பெருமான் திருமுகங்களில் பஞ்சாக்கர உபதேசங்கள் :

வள்ளல் பெருமான் அன்பர்களுக்கு அருளிய திருமுகங்கள் பலவற்றில் பஞ்சாக்ஷர தியானத்தை வற்புறுத்தி எழுதுகின்றார். ஒரு கடிதம் பஞ்சாக்ஷர உபதேசமாகவே உள்ளது. புதுவை வேலு முதலியாருக்கு வரைந்த இரு கடிதங்களில் பஞ்சாக்ஷர சிந்தனை குறிப்பிடப்பட்டிருக்கிறது. இருக்கம் இரத்தினமுதலியாருக்கு எழுதிய கடிதம் பஞ்சாக்ஷர உபதேசமாக உள்ளது.

அன்னாருக்கு எழுதிய உபதேச கடிதம் பின்வருமாறு :

"ப்ரம்மா விஷ்ணு ருத்ராதிகளுடைய பதங்களும், அந்த கர்த்தாக்களும், அவர்களால் சிருஷ்டி. திதி, சங்காரம் செய்யப்பட்டு வருகிற தேகாதிபிரபஞ்சங்களும் அநித்தியம். ஆகலின் நித்தியமானதும் என்றும் ஒருதன்மையுள்ளதர்கியும், சச்சிதானந்த வடிவாகியும், அண்டபரிபூரண வஸ்துவாகியும் விளங்கிய சிவமே நமக்கு பொருள். நாம்

பல சனனங்களையும் தப்பி இந்த மேலான மனிதப் பிறவியெடுத்தது சிவத்தின் அருளைப் பெறுவதற்கே. எவ்வகை பிரயாசத்தினாலாவது அந்த அருளை அடைய வேண்டும். அந்த அருள் எவ்வகையால் வருமென்றால் [எல்லா உயிர்களிடத்திலும் தயவும், பிரபஞ்சத்தில் வெறுப்பும், சிவத்திடத்தில் அன்பும் மாறாது நம்மிடத்திலிருந்தால் அவ்வருள் நம்மை அடையும். நாமும் அதை அடைந்து எதிரற்ற சுகத்திலிருப்போம். இது சத்தியம். இனி மேற்குறித்த சாதனத்தை நாம் பெறுவதற்கு சிவபஞ்சாக்ஷர தியானமே முக்கிய காரணமாய் இருக்கிறது. ஆதலின் இடைவிடாது நல்ல மனத்தோடு அதனை தியானிக்க வேண்டும். அப்படி செய்து வந்தால் பின்பு எல்லாம் விளங்கும். ''

இக்கடிதம் வள்ளல் பெருமானால் தை மீ 7 உ அன்று எழுதப்பட்டது.

(ஆதாரம்: தவத்திரு ஊரன் அடிகள் எழுதிய ''வள்ளலார் வாக்கில் ஓங்காரமும் - பஞ்சாக்ஷரமும்'' என்ற நூலில் காண்க)

இருக்கம் இரத்தின முதலியாருக்கு வள்ளல் பெருமாள் எழுதிய மற்றொரு திருமுகத்தையும் காண்போம். முழுமையாக எடுத்துக் காட்டின் இடம்பெருகுமாதலின் பஞ்சாக்கரம் பயின்ற திருமுகப் பகுதிகள் வருமாறு :

'' தாம் இடைவிடாது பரமசிவமே பொருளெனக் கொண்டுப் பஞ்சாக்கரத்தையே சிந்தித்து வரவேண்டும் '' — இ. இ. 6

'' நம்மை எழுபிறப்பெனும் பெருங்கடலை கடப்பித்தும் பேரின்பம் என்னும் கரையிலேற்றும் சைவப்பயிற்சியிற் றெய்வப்புணையாக வாய்த்த திருமந்திரமாகிய பஞ்சாக்கரத்தை இடைவிடாது சிந்தித்துக் கொண்டும் வருவது முக்கியத்திலும் முக்கியம் ''
— இ. இ. 7

'' சிவபஞ்சாக்கரத்தை சதா கருத்தில் வைத்துக் கொண்டே காரியங்களை நடத்த வேண்டும் '' — இ. இ. 11

'' நமக்கு எவ்விதத்திலும் சிவபெருமான் திருவடியும், சிவ பஞ்சாட்சரியும் அன்றி வேறு சகாயமில்லை. ஆதலின் அவைகளை இடைவிடாது சிந்திக்க வேண்டும் '' — இ. இ. 13

'' தாம் சிவ பஞ்சாக்ஷர தியானபரராகி சதா சந்தோக்ஷ சகிதராக இருக்க வேண்டுவதே என் வேண்டுகோளாக இருக்கிறது ''
— இ. இ. 14

'' சிவபெருமான் திருவடிகளையும், சிவ பஞ்சாக்ஷரியையும் இடைவிடாது தியானம் செய்து வரவேண்டும் என்பது ஒன்றே முக்கியம் '' — இ இ. 18

"சிவபஞ்சாக்கர தியானத்தோடு சாக்கிரதையாக இருங்கள், அஞ்ச வேண்டாம்" — இ. இ. 22

"அரிபிரமாதிகளெத்துணையும் பெறுதற்கு அரிதாகிய சிவ சம்பந்தத்தை முன்செய் தவப்பயனுய் பெற்றனம். அங்ஙனம் பெற்ற நாம் சிவானந்த போக சாத்தியத்தை காலமுண்டாக அடைதல் வேண்டும். அதனை அடைதற்கு சிவபஞ்சாக்ஷர தியானமின்றி வேறு ஏதுக்கள் ஒன்றுமின்று இஃது திருவருளாணை. என்னின் நாம் சொல்லுங் காலமெல்லாம் சித்த சித்தியோடு சிவபஞ்சாக்ஷர தியானத்தில் சர்வ ஜாக்ரதையைப் பெற்று வரவிற்கு ஒத்த செலவோடு வாழ்தல் வேண்டும். இஃதே நமது கடமை" — இ. இ. 24

இனி புதுவை வேலுமுதலியார்க்கு வரைந்த திருமுகங்கள் இரண்டில் பஞ்சாக்ஷர சிந்தனையை குறிப்பது பின்வருமாறு :

"தாங்கள் தேக முதலிய கருவிகளை சாக்கிரதையோடு வைத்துக் கொண்டும் சிவ பஞ்சாக்ஷரியையும் சிவபெருமான் திருவடிகளையும் இடைவிடாது சிந்தித்து தியானித்து வர வேண்டும் என்பது என் பிரார்த்தனை" — பு. வே 3

## காழிக்கண்ணுடைய வள்ளலார் - பஞ்சாக்கரமாலை

3. அஞ்செழுத்தும் ஐம்பத்தொன்றும் எழுத்துப் போலன்றி
நெஞ்செழுத்தும் உட்பொருளை நீ நினைந்து — தஞ்சமென
எங்கும் நிறைவானமையும் இவ்வெழுத்தாம் அவ்வடிவில்
அங்கு பொருள ளமையும் சாற்று

நிட்கள எழுத்து அஞ்சும் சகள எழுத்தில் நிற்கும் நிலையை குறிக்கின்றது

பஞ்சாக்கரத்தை ஐம்பத்தோரக்கரங்களை போல் எழுத்தென்று நினையாமல் அறிவிலே வடிவற நின்றழுந்தும் எழுத்துக்களென்று உட்பொருளை நினைந்து அந்த அஞ்செழுத்தே யாவர்க்கும் தஞ்சமாக எங்கும் பூரணமாய் நிற்கும் நிலையும் தரிசித்து அந்த பொருளஞ்சும் இந்த எழுத்தணுகி நிற்கும் நிலையும் அறிவாய். அஞ்செழுத்து எங்கும் பூரணமாய் நிற்கும் நிலை. அயன், அரி, அரன், ஈசன், சதாசிவன் முறையே அகங்காரம், புத்தி, மனம், சித்தம், உள்ளம் இவைகளை நடத்தி வியாபிக்கும்

தாபரமாம் லிங்கத்திற் சங்கமத்திற் றண்டுலத்திற்
றீபரவு குண்டத்திற் சிந்திக்க — மாபரனு
ரங்கங்குத் தோன்றுதல்போல் அஞ்செழுத்தாம் அப்பொருளுக்
கங்காள மெழுத்தஞ்சும்

சிவபெருமான் சிவலிங்கத்தில் பிரசன்னம் போல் பஞ்சாக்கரத்திலும் பிரசன்னமாம்.

தாபரமாகிய சிவலிங்கப் பெருமாளிடத்திலும், உற்சவ பேதங்களிடத்தும், வேதிகையிடத்திலும், அக்கினி குண்டத்திலும் ஆவாகித்துத் தியானிக்க நிட்களமாகிய சிவன் அந்தந்த இடங்களிலே பிரசன்னமானாற்போல் பஞ்சாக்கரமாகிய நிட்களம் பொருள்களும் இந்த வடிவாகிய பஞ்சாக்கரங்களிலே தரிசனப்பட்டவர்களுக்கு தோன்றும்.

தாபரமாகிய சிவலிங்கம் — திருக்கோயில்களில்
எழுந்தருளியிருக்கும் மூலத்தானங்கள்

## பஞ்சாக்ஷரம் வேத ஹிருதயம் :

வடமொழி வேத ஹிருதயம் :

வடமொழியில் 4 வேதங்கள் உண்டு. அவை ருக், யஜுர், சாம, அதர்வன வேதங்களாவன். அதில் ருக், யஜுர், சாம வேதங்கள் முக்யம். இதை வேதத்ரயி என்பர். இம் மூன்றில் நடுவில் உள்ளது யஜுர் வேதம். அதன் சம்ஹிதை 7 காண்டங்கள் உடையது. அவற்றுள் 4வது நடு சம்ஹிதையின் நடுவே ஸ்ரீருத்ரம் அமைகிறது. அதன் நடுவே நமசிவாய எனும் தூல பஞ்சாக்ஷரம் மிளிர்கிறது. '' நமச்சிவாய ச சிவதராய ச'' என்று மிளிர்கிறது. ஆகவே இது வேதத்தின் ஹிருதயம். மூன்று வேதங்களையும் ஒரு பறவைபோல் எண்ணி யஜுர்வேதம் சிரம் என்றும், ருக் வேதம் வலதுபுறம் இறக்கையென்றும், சாம வேதம் இடதுபுறம் இறக்கையென்றும் தைத்ரேய உபநிஷத் கூறுகிறது.

இதை மகாவித்வான் மீனாட்சிசுந்த்ரம் பிள்ளை அவர்கள்

'' மும்மறையில் நடுமறையில் எழுகாண்டத்தில்
செம்மைதரும் நடுகாண்டம் சேர்ந்த ஏழுசங்கிதையில்
அம்மநடு சங்கிதையின் ஆதியீரொழித்து நடுப்
பொம்மலுறுமவர் மனுவின் பொருளாவன் எவன்மைந்த ''

என்று பேசியுள்ளார்.

## தமிழ் வேத ஹிருதயம் :

பஞ்சாக்கரம் தமிழ் வேத ஹிருதயமாகிறது. தேவாரத்தில் மூவர் தேவாரம் முக்கியமானது. சம்பந்தர்பெருமான் தேவாரம் 1, 2, 3 திருமுறைகள் ஆகும். நாவுக்கரசர் தேவாரம் 4, 5, 6 திருமுறைகள் ஆகும். சுந்தரமூர்த்தி தேவாரம் 7ம் திருமுறையாகும். இதில் நாவுக்கரசர் தேவாரம் நடுவில் உள்ளது. அது 100 பதிகங்களை உடையது.

நடுப்பகுதியில் அதாவது 51வது பதிகம், அது 11 பாட்டுக்களை உடையது, அதில் நடுவில் 6வது பாசுரம். அப்பாசுரத்தின் நடுவில் ''சிவாய'' என்னும் முத்தி பஞ்சாக்கரம் ஒளிர்கிறது. எனவே இதை தமிழ் வேத ஹிருதயம் எனப்படுகிறது.

அப்பாசுரம் : '' விண்ணினார் பணிந்தேத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது **சிவாய**வென்று
எண்ணினார்க்கு இடமா எழில்வானகம்
பண்ணினார் பாலைத்துறையாரே '' என்பது.

சிவப்ரகாசம் 90

அந்தம் ஆதியில்லாத அஞ்செழுத்தருள்
நெஞ்சுவிடு தூதுநாட்டிய அஞ்செழுத்தின்
உள்ளீடறிவித்தான் நெஞ்சமுத்தி நேயமயமாக்கி
அஞ்செழுத்தை உச்சரிக்கும் கேண்மைஉணர்த்தி
அதில்உச்சரிப்பு வச்சிருக்கும் அந்தவழிகாட்டி

அஞ்செழுத்து என்பதை திருவைந்தெழுத்து, பஞ்சாக்ஷரம், பஞ்சாக்கரம் எனக் கூறப்படுகிறது. அஞ்சு (ஐந்து) எழுத்து என்று வழங்கினும் ''திரு'' என முன்னோ அருள் என்று பின்னலோ ஒரு அடையின்றி கூறுதல் கூடாது என்பது எனது குருநாதர் வாக்கு. திருவருட்பயன் ஆசிரியர் உமாபதி தேவநாயனார் ''ஐந்தெழுத்தருள் நிலை'' என்று அருளியது மேற்படி சிவப்ரகாசம் செய்யுளில் உள்ள பொருள் கொண்டு தான். திருவைந்தெழுத்தாகிய அருளினது முறைமை வீட்டு நெறியைக் காட்டுதலால் ஓர் திருவருளாக கூறியருளினர் என்பது நிரம்பவழகிய தேசிகர் உரையில் காண்க.

எல்லா நூல்களும் ஐந்தெழுத்தின் பொருளே.

திருவருட்பயன் வெண்பா 81ல்

'' அருள்நூலும் ஆரணமும் அவ்வாறும் ஐந்தின்பொருள்
நூல் தெரியப்புகின் ''

சிவாகமங்கள், மறைகள், எல்லா கலைகள், மற்ற நூல்கள் எல்லாமும் ஐந்தெழுத்தின் பொருள்களே.

சில மகாரப் பொருளையும், சில நகார பொருளையும், சில யகாரப் பொருளையும், சில வகாரப் பொருளையும், சில சிகாரப் பொருளையும் கூறும் என் குருநாதர் ''உலகம் அனைத்தும் ஐந்தெழுத்தில் அடங்கும்'' என்று அருளுவார்கள். சிந்தித்து பார்த்தால் தெரியும். திருவைந்தெழுத்து என்பது சைவ சித்தாந்த செந்நெறி செல்வர்கள் ஜபித்து வரும் பொருள் மறையர்கும்.

மறை — மந்திரம் மந்திரம்: 1) பொருள் மறை 2) புகழ் மறை என இருவகைப்படும், பொருள் மறை என்பது இறை, உயிர், தளை என்றும் முப்பொருள் உண்மையை செப்புவது. முப்பொருள் உண்மையை செப்புவது சி, ய, கூறுவது சிவாயநம. வடமொழியில் சிவாய நம என்பது சிவன் திருவடிக்கு வணக்கம் என்று பொருள். தமிழில் அது ஐம்பொருள் உண்மை காட்டுகிறது. எனவே அது ஐந்துபதம் எனப்பட்டது. ஒவ்வொரு எழுத்துக்கும் ஒவ்வொரு பொருள்.

## ஸ்ரீ ஸ்காந்த மஹாபுராணம்

ஸூதர் உவாச :

பஸ்மருத்ராக்ஷ யோர் விப்ரா மஹாத்ம்யம் வர்ணிதம் கலு
பஞ்சாக்ஷரஸ்ய மாகாத்ம்யம் ஸ்ருணுத்வ மவதானலுத :
பஞ்சாக்ஷரம் மகாமந்த்ரம் பஞ்சபாதக நாசனம்
பரஸ்யவாசகம் லப்த்வா லிப்த்வா ஸத்குரோர் நியமாச்சுசி:
ஜயத்யனு தினம் மர்த்யஸ்ஸதன் யோ லோகபாவன
நதஸ்ய பாபகந்தோ பிதர்சனுத் பாபஹாரிண :
நசபேதோஸ்ய மகத: ப்ரேண ப்ரும்ஹ ஞஸஹ
அத்ரேதிகாசம் யுஷ்மாகம் வர்ணயாமி மஹரூஸ்ரா :

ஸூதர் சொல்கிறார் : ஓ வேதியர்களே! இதுவரை விபூதி உத்ராக்ஷங்களின் மஹிமையை வர்ணித்தேனல்லவா; இப்போது பஞ்சாக்ஷரத்தின் பெருமையை சொல்லப் போகிறேன் ஜாக்ரதையாக கேளுங்கள்: எந்த மனிதன் பஞ்ச மகாபாதங்களையும் நாசம் செய்வதும், பரப்ரம்மத்தையும் விளக்குவதுமான ஸ்ரீ பஞ்சாக்ஷர மகா மந்திரத்தை குருவினிடமிருந்து உபதேசம் பெற்று சுத்தமாயிருந்து கொண்டு நியமத்துடன் தினமும் ஜபிக்கின்றனோ அவனே மகாபாக்யசாலி. அவனே உலகினைப் பரிசுத்தம் செய்கின்றவன். தன்னை தரிசித்த மாத்திரத்தில் பிறர் பாவங்களை நாசம் செய்யும் வல்லவரான மேற்படி மந்திரத்தை ஜபிப்பவருக்கு பாபலேசமும் இல்லை. அப்பேர்பட்ட மஹானுபவருக்கும் பரப்ரம்மத்திற்கும் வித்யாஸமேயில்லை. இம்மகாமந்திரத்தை ஜெபித்ததினல் பலபேர்கள் பாபத்தினின்று விடுபட்டு மோக்ஷம் அடைந்திருக்கிறார்கள்.

ஸூத : ஸ்தாதவ்யம் பவதாதர்ம கிருஹஸ்தாஸ்ரமம் உத்தமே
பஞ்சாக்ஷரீம் பராம்வித்யாம் லப்தாத்வம் நியமான்வித :
ஜபித்வா அனுதினம் திஷ்டஸ்வதர்மம் அனுபாலயன்
சந்த்ரலேனு தபிபலம் பாவிஷ்யதி தவாதிகம் :
ஸ்ரீமத் பஞ்சாக்ஷரி மந்த்ரஜபாத னககேவலம்
இத்யுக்தீவோப்தி தேசாய்ய ஸ்ரீமத் பஞ்சாக்ஷரி மனும்:

ஓ தர்மனே! நீ சிறந்த கிருஹஸ்தஸ்ரமத்திலிருந்து கொண்டு பஞ்சாக்ஷர மகாமந்திரத்தை உபதேசம் பெற்றுக் கொண்டு நியமத்துடன் தினந்தோறும் ஜபித்து ஸ்வதர்மத்தை அனுஷ்டித்து வா. ஓ குற்றமற்றவனே! பஞ்சாக்ஷர மந்திரத்தை மாத்திரம் ஜபம் செய்வதால் உனக்கு சந்த்ரஸேனனைக் காட்டிலும் அதிக பயன் உண்டாகும் என சொல்லி அவனுக்கு ஸ்ரீபஞ்சாக்ஷர மந்திரத்தை உபதேசித்தார். அதன்பின் தர்மன் உபதேசம் பெற்று அவ்வாறே ஜபித்து நல்வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தான். சந்த்ரஸேனன் தர்மனை ''ஓ மித்திரனே! உனக்கு இந்த மகிமை எவ்வாறு உண்டாயிற்று என்பதை பால்ய ஸ்நேகிதத்தால் எனக்கு சொல்ல வேண்டும்'' என்று கேட்டார்.

அதற்கு தர்மன் :

பஞ்சாக்ஷர மஹாமந்திர மஹிமாயம் தபோதன
நஸமோஸ்ய சமந்தீரஸ்ய மந்த்ரோஸ்த்யகை சர்வதா

ஓ, தவச் செல்வரே! இவையாவும் ஸ்ரீ பஞ்சாக்ஷர மகாமந்திரத்தின் மஹிமையாகும். எல்லாவிதத்திலும் பஞ்சாக்ஷர மந்திரத்திற்கு நிகரான மந்திரமில்லை. இதன் மஹிமையை முக்கண்ணனை ஸ்ரீபரமேஸ்வரனைத் தவிர வேறு யார் அறிவர். அதன்பின் சந்த்ரஸேனன் அவ்வாறே ஜபித்து புண்யாத்மாவாய் சிறந்த சிவலோகம் அடைந்தான் என்று ஸ்காந்தம் கூறுகிறது. மேலும் ஸ்காந்தம் கூறுவதாவது :

'' சிரகாலம் ம்ருத : பாபீநா கேத்யாபி பாத்யதே
தஸ்மாத் த்விஷந்தியேமர்தியா மர்த்தம் பஞ்சாக்ஷரீபரம்
மகாபாதக ஸம்யுக்தாஸ் தேயாந்தி நாகம்த்ருவம்
பஞ்சாக்ஷரி பராணும்யே ஸுஹ்ருத : புண்யகௌரவாத்
யாந்திதே பரயாப்ரீத்யா சிவலோக மனுத்தமம்
தஸ்மாத் பஞ்சாக்ஷரி மந்த்ர : பஞ்சபாதக நாசன :
ஜப்யோநித்யம் ப்ரயத்தனேன ஸர்வை ரேவதபோதனு ''

ஆகையால் எந்த மனிதர்கள் ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹா மத்திரத்தை ஜபம் செய்யும் மானிடரை பகைக்கின்றார்களோ அவர்கள் மகாபாதகங்களோடு கூடியவர்களாகி நிச்சயம் நரகத்தை அடைவார்கள். எவர்கள் பஞ்சாக்ஷரத்தை ஜபிப்பவர்களுக்கு சிநேகிதர்களாக இருக்கிறார்களோ அவர்கள் மிகுந்த புண்ணியவசத்தால் அதிக சந்தோஷத்துடன் மிகச் சிறந்த சிவலோகத்தை அடைவார்கள். ஆகையால் ஓ முனிவர்களே! யாவரும் பஞ்ச மஹாபாதகங்களை நாசம் செய்யும் ஸ்ரீபஞ்சாக்ஷர மஹா மந்த்ரத்தை நாள்தோறும் மிகமுயற்சியுடன் ஜெபம் செய்ய வேண்டும்.

— ஸ்காந்தம் - அத்யாயம் 21-22ல் காண்க

— ஸ்ரீஸ்காந்த மஹாபுராணம் 2ம் பாகம் - பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராமதீக்ஷிதர் உரையிலும் காண்க

பஞ்சாக்ஷரம் உலகின் எல்லா மந்திரங்களுக்கும் தாயாக உள்ளது. தோன்றிய மந்திரங்களுக்கு முதன்மையாக உள்ளது. இவையெல்லாம் ஆளுடையபிள்ளையார் சீர்காழி அந்தணர்க்கு அருள்மொழியில் புலனுகிறது. இவ்வுண்மையை சேக்கிழார் ஸ்வாமி வாக்கில் காண்க :

மந்திரங்களாகவெலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிகநூற் சடங்கில்வந்த
சிந்தைமயக்குறும் ஐயம்தெளிய எல்லாம்
செழுமறையோர்க்கு அருளியவர்தெருளும் ஆற்றுல்
முந்தைமுதன் மந்திரங்கள்எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனுர் எழுத்தென்பர்
அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத்து மேயென்று
அஞ்செழுத்தில் திருப்பதிகம் அருளிச் செய்தார்

மந்த்ரம் : மனஸாத்ராய தே இதி மந்த்ர :

அதாவது மனஸால் சொல்லக் கூடியது, ஜெபிப்பது என்பதால் மந்த்ரம் எனப்படும். அது மந்திரம் ஆக மருவியது.

பஞ்சாக்ஷர மந்திர மாண்பு :-

பஞ்சாக்ஷர மந்திரம் மந்திரங்களுல் தலையாயது.

அப்பஞ்சாக்ஷர மந்திரம் என்பது நமசிவாய

ஐந்து எழுத்துக்கள் இருப்பதால் பஞ்சாக்ஷரம் என்றனர்.

பஞ்ச என்பது ஐந்து என்றும் எண்ணையும்,
அட்சரம் என்பது எழுத்தையும் குறிக்கும்.

இந்த ஐந்து எழுத்துக்கள் வெறும் எழுத்துக்கள் அல்ல.

அவை ஒவ்வொன்றும் பதமாகும்.

சந்தியாவந்தன காலங்களில் பஞ்சாக்ஷர மந்திரம்
உச்சரிக்க வேண்டும்.

இதர மந்திரங்களில் உள்ள எழுத்துக்கள் தனித் தனியாகப் பிரிந்து பொருள் தரமாட்டா. எழுத்துக்கள் சேர்ந்தபின்தான் பொருள் தந்து நிற்கும். ஆனுல் தனித்தனி பொருள்தந்து நிற்கும் பெருமை பஞ்சாக்ஷர மந்திரத்திற்கு உள்ள தனி சிறப்பு ஆகும்.

பஞ்சாக்ஷரத்திற்கு மற்றொரு சிறப்பு உண்டு. இதற்கு ஓம் என்னும் மந்திரத்தை சேர்த்து சொல்ல வேண்டும் என்கிற நியதி இல்லை. அப்படி சேர்த்தால் ஷடாக்ஷரம் எனப் பெயர் பெற்றுவிடும். ஏனைய

மந்திரங்களுக்கு ஓம் என்ற பிரணவம் சேர்ந்த பிறகே மந்திரம் என்னும் பெயருக்கு உரியதாகும்.

(இது ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடாதிபதிகளின் வைரவிழா மலரில் வித்வான் பாலூர் கண்ணப்பமுதலியார் கட்டுரையில் இருந்து)

ஞானசம்பந்த பெருமான் ''வினைப்பகைக்கு அத்திரமாவன அஞ்செழுத்து மே'' என்று அருளுகிறார்.

திருவைந்தெழுத்து மந்திரத்தில் முன் ஏனைய மந்திரங்கள் பகல் விளக்கு போல் வலியிழந்து நிற்கும். ஆளுடைய பிள்ளையார் இருந்த திருமடத்தை அரசன் உடன்பாடுடன் சமணர்கள் மந்திரவலியால் தீக் கொழுத்த முயன்றனர், முடியவில்லை. இது அவ்வுண்மையை எடுத்துக் காட்டுகிறது. இதை சேக்கிழார் பெருமான் ''அஞ்செழுத்து ஓதுவார் கண்ணெழுத்து நோக்கும் திசையினும் ஏனைய மந்திரங்கள் நன்னுது'' என்று அருளினர். அது பின்வருமாறு :

ஆதிமந்திரம் அஞ்செழுத்து ஓதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றமந்திர விதிவருமோ
பூதிசாதனர் மடத்தில் தாம்புனைந்த சாதனைகள்
சாதியாவகை மண்குண்டர்கள் தளர்ந்தார்

மாதிரம் — திசை

அப்பர் பெருமான் ஐந்தெழுத்து சிறப்பை பேசும்போது திருமாற் போர் பதிகத்தில், உனக்கு ஒன்றுமே தெரிய வேண்டாம். ஆனல் ஐந்தெழுத்து பொருள் தெரிந்து ஓதி உணர்ந்தால் சிவபெருமான் சக்தி யோடு காட்சி தருவார் என்றும், ஐந்தெழுத்து ஓதினல் சிவபெருமான் மருந்தாக ஆகி பிணி நீங்கிவிடும் என்ற இருபதிகங்களில் அருளுகிறார்.

'' ஏதும் ஒன்றும் அறிவிலாராயினும்
ஓதி அஞ்செழுத்தும் உணர்வார்கட்கு
பேதமின் அவருள்ளத்தே
மாதும்தாமும் மகிழ்வார் மாற்பேரகே ''

'' இருந்து சொல்லுவன் கேண்மின் ஏழைகாள்
அரும்தவம் தரும் அஞ்செழுத் தோதினல்
பொருந்து நோய்ப்பிணி போகத்துரப்ப தோர்
மருந்தும் ஆகுவர் மன்னுமாற் பேரரே ''

என்று இவ்வாறு ஐந்தெழுத்து சிறப்பை பற்றி பேசுகிறார்.

ஐந்தெழுத்து, அஞ்சுபதம் என்பதை முன்னர் பார்த்தோம். ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பொருளைக் குறிக்கும் என்றும் பார்த் தோம். அவ்வெழுத்துக்களின் பத விளக்கத்தை அடுத்த அத்தியாயத் தில் காண்போம்.

அத்தியாயம் – 2

# பஞ்சாக்ஷர பத விளக்கம்

பஞ்சாக்ஷரத்தில் பல வகைப்படும் : 1) சமஷ்டி பஞ்சாக்ஷரம் 2) வியஷ்டி பஞ்சாக்ஷரம். சமஷ்டி பஞ்சாக்ஷரம் ஓம்காரத்தை குறிக்கும் வியஷ்டி பஞ்சாக்ஷரம் தூல பஞ்சாக்ஷரம், சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம், அதி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் (காரண பஞ்சாக்ஷரம்), மகாகாரண பஞ்சாக்ஷரம், மகாம்னு என ஐ வகைப்படும். அதன் எழுத்துக்களை மட்டும் இங்கு காண்போம்.

| | | |
|---|---|---|
| தூல பஞ்சாக்ஷரம் | — | நமசிவாய |
| சூக்ஷ்ம பஞ்சர்க்ஷரம் | — | சிவாயநம |
| அதி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் (காரண பஞ்சாக்ஷரம்) | — | சிவயசிவ |
| மகா காரண பஞ்சாக்ஷரம் | — | சிவ சிவ |
| மகாமனு | — | சி |

இந்த வகைகளை அந்தந்த அத்யாயங்களில் காண்போம். முன் அத்தியாயத்தில் திருவைந்தெழுத்தின் சிறப்பை பற்றியும், ஒவ்வொரு எழுத்துக்கும் ஒவ்வொரு பொருள் உண்டு என்று பார்த்தோம். அப்பொருள்பற்றி இங்கு சிந்திப்போம்.

சிவாயநம : சிவன் - அருள் – ஆன்மா - திரோதம் - மலம் மாயை எனப் பொருள்.

இதை திருமந்திரத்தில் குறிக்கும் பாட்டு :

சிவன் அருள் ஆயசிவன் திருநாமம்
சிவன் அருள் ஆன்மாதிரோதம் மலம்மாயை
சிவன் முதலாகச் சிறந்த நிரோதம்

உண்மை விளக்கத்தில் குறிக்கும் வெண்பா :

"சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம் இவன்நின்று
நம்முதலாக ஓதின் அருள்நாடாது - நாடும்
சிம்முதலாக ஓது நீ சென்றே

இந்த இரண்டு பாக்களும் ஐந்தெழுத்தின் பொருளையும் ஓதும் முறையையும் விளக்குகிறது.

துகலிறு போதம் :

'' அஞ்செழுத்தும் அண்ணல்அருள் ஆன்மதீ திரோதம்மலம்
மிஞ்சிநமத் துறந்து மெய்யருள் வாத்தஞ்சச்
சிகரத்தில் யவ்வைவிடும், தீதிய இன்பம்
புகாரிற் புகுந்தருந்தும் போய் ''

இது அருள் முறையையும். பொருளையும் குறிக்கிறது.

சமஷ்டி பஞ்சாக்ஷரம் என்பது ஓங்காரம். இது அ, வு, ம், விந்து, நாதம் என ஐந்து பொருள்களை அடக்கியுள்ளது. எனவே இதையும் பஞ்சாக்ஷரம் என்றே கூறப்படுகிறது.

திருவருட்பயன் :

இறை சத்தி பாசம் எழில் மாயை, ஆவி உற நிற்கும் ஓங்காரத்துள்

ஓங்காரம் — அ, வு, ம், விந்து, நாதம் ஆகிய ஐந்தும் இதன் தொகை

திருவைந்தெழுத்து வகை ஐந்து பதம், ஐம்பொருள் என்பது.

விரிவு : விந்து — ஆற்றல் நாதம் — அறிவு

சிவாயநம : சொற்போக்கு முறையின்படி உய்த்துனரின் சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு என்றாகும்.

வெண்பா : '' சிறப்பு வனப்பு யாப்பு நடப்பு - மறைப்பு ஓடு
உறற்பால் ஐந்தெழுத்தின் உண்மை - மறப்பில்
சிவயநம என்னும் செந்தமிழ் ஐந்தாவாம்
சிவமறையின் மெய்விரியாம் செப்பு ''

வெண்பா : '' சிறப்பு வனப்பு யாப்பு, மறைப்போடு
உருக்காண்பார் ஐந்தெழுத்தினுள் ''

இவைகளின் பொருள் என்ன என்பதை சிந்திப்போம்.

சிறப்பு ( சி ) — சிவனைக் குறிக்கும்
சிறப்பு ஈனும் சிறப்பு எனும் செம்பொருள் என்ற திருவள்ளுவர் மொழியால் அறியலாம்

வனப்பு ( வ ) — அழகு - ஆருயிர்களை சிறப்பாகிய சிவத்துடன் கூட்டிப் பேரின்பம் உறச் செய்யும் பொர்ருள்

யாப்பு ( ய ) — பிணிப்புடையது
ஆணவ மலக் களிம்பை உடையது
யாப்பு — கட்டு - கட்டுண்டது

நடப்பு ( ந ) — நடத்துதால் - இதனை ஆட்டுவித்தல் என்பர்

மறைப்பு ( ம ) — இறைவனை காண ஒட்டாமல் மறைக்கும்

எனவே ஐந்தெழுத்தை ஐந்து பதம் எனப்படும். இந்த ஐந்து பதங்களில் இருந்து முதல் எழுத்துக்களை எடுத்துக் கொண்டதில் சிவயநம என்பது ஐம்பொருள் உண்மையைக் காட்டுதலால் ஐந்து பதம் எனப்பட்டது.

எனவே சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் :

'' அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி
முந்திஎழும் பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு ஆரூர்புக்கு
அந்தை பிரானுரை என்றுகொல் எய்துவதே ''

என்று திருவைந்தெழுத்தை ஐந்து பதம் என அருளுகிறார்.

உண்மை விளக்கம் பாட்டு 41 :

......மற்று அது கேள்

'' ஈசன் அருள் ஆவி எழில் ஆர்திரோதம் மலம்
ஆதிஇல் அஞ்செழுத்தின் அடைவாம் ''

மேற்படி சிவாயநம என்னும் ஐந்தெழுத்துக்கும் ஒவ்வொரு பொருள் உண்டு சிகாரம், வகாரம், யகாரம், நகாரம், மகாரம் என உற்ற சிவாயநம என்னும் ஐந்தெழுத்து.

குறிகள் அழியும் (க்ஷரம்). ஈசனும், அருளும், ஆவியும், திரோதமும், மலமும் அழியா (அக்ஷரம்) அஞ்செழுத்தும், அவற்றின் அடைவும் வெவ்வேறு என உணர்வது மிக அவசியம். அது எளிது. சிவயநம என்ற உடனே ஐந்து பொருள்களும் தோன்றும்.

உண்மை விளக்கம் - 42ல்

'' சிவன் அருள் ஆவிதிரோதம் மலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம் ''

திருமந்திரம் பிரணவப் பொருளையும், பஞ்சாக்கர பொருளையும் கூறுகிறது.

'' அகரம் உயிரே உகரம் பரமே
மகாரம் சிவமாய்வரும் முப்பத்துச்
சிகாரம் சிவமே வகாரம் பரமே
யகாரம் உயிரென்றறை யலுமாமே ''

பிரணவப் பொருளை பின்வரும் சமஷ்டி பஞ்சாக்ஷரம் அத்யாயத்தில் காண்போம், இங்கு ஐந்தெழுத்தை மட்டும் காண்போம்.

சிவாயநம : சி – சிவம்; வ - அருள்; ய - உயிர் என்பது
மூன்று எழுத்துக்கள் கூறுகிறது.

ஐந்தெழுத்து என்பது பின்வருமாறு :

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| சிவம் | அருள் | உயிர் | திரோதம் | மலம் |

சிவம் - சிவ - சி : இவைகளுக்கு வள்ளல் பெருமான் இராமலிங்க ஸ்வாமிகள் விளக்கம் அளித்துள்ளார். அவை என்னவென்று பார்ப்போம் இவைகள் அவர் அன்பர்களால் குறித்து வைக்கப்பெற்றுள்ளது.

சிவம் என்பதற்கு பொருள் சச்சிதானந்தம்
சச்சிதானந்தம் என்பது சத், சித், ஆனந்தம்
இதில் சிகரம் சத்து, வகரம் சித்து, மகரம் ஆனந்தம்
சிகரம் எல்லாம் உள்ளதாய் விளங்குவது
வகரம் எல்லாம் விளங்குவதாய் உள்ளது
மகரம் இரண்டினுலும் நிரம்பிய இன்பம்

சிவ சிவ என்பதற்கு பொருள் அணுதியாய் மலமில்லாத சர்வ வல்லமையுடையது.

சி என்பதற்கு பொருள் அனுதியாய் மலமில்லாதது
வ என்பதற்கு பொருள் சர்வ வல்லமையுடையது
மேலும் சி என்னும் எழுத்துக்கு பொருள் ஒருவாறு.

இதில் அடங்கிய பீஜம் ஐந்து. அவையாவன :-

தோன்றி அசைதலாகிய விந்து — 1 — விந்து

அதன் புடைப்பெயர்ச்சி ஒலியாகிய நாதம் — 2 — நாதம்

அதன் வண்ண வடிவமாகிய வரி
அக்கரத்தின் சகர மெய்யென்னும் — 3 — ச்

அதன் குணங்களை வெளிப்படுத்தும்
ஆதி அக்கரமாகிய பிரணவமூல அகரம் — 4 — அ

இதை தன் வண்ணச் சுபாவத்தோடு வெளியில்
தோன்றச் செய்துவித்து விளக்கும் அருட்
பிரணவமாகிய (இ) இகரம் — 5 — இ

ஆகக் கூடிய விந்துக்கள் ஐந்தும் ஒருருவமாய் சிகரமாயிற்று

அனுபவத்தால் அறிக (ச் + அ + இ = சி)

— தவத்திரு ஊரன் அடிகள் எழுதிய 'வள்ளலார் வாக்கில் ஓங்காரமும், பஞ்சாக்கரமும்' எனும் புத்தகத்தில் காண்க

## வள்ளலார் உபதேசக் குறிப்பு :

திருவருட்பா - உரைநடைப்பகுதி - பக்கம் 283

பெருமானது உபதேசத்தை கீழ்கண்டவாறு
நான்கு அட்டவணைப்படுத்தியுள்ளது.

சிவம் — சிவம் — சச்சிதானந்தம்

சி — சத்து — எல்லாம் உள்ளதாய் விளங்குவது
வ — சித்து — எல்லாம் விளங்குவதாய் உள்ளது
ம் — ஆனந்தம் — இரண்டாலும் நிரம்பிய இன்பம்

சிவ — அறுதியாய் சர்வ வல்லமையுடையது
சி — அறுதியாய் மலமில்லாதது
வ — சர்வ வல்லமையுடையது

சி — இதன் பீஜம் - 5
1) விந்து — தோன்றி அசைதல்
2) நாதம் — புடைப் பெயர்ச்சி ஒலி
3) ச் — சகரமெய்
4) அ — பிரணவமூல அகரம்
5) இ — அருட் பிரணவம்

பஞ்சாக்கரம் — வள்ளாலர் விளக்கம்

சமய சூக்ஷ்ம பஞ்சாக்கரத்தின் தாத்பரியம் நான்கு. அக்ஷரம் - 5

தாத்பர்யம் - நான்கு அவை :
பூர்வம், பூர்வ பூர்வம், உத்தரம், உத்தரோத்தரம் ஆக 4

பூர்வத்திற்கு அர்த்தம் சிவனை நமஸ்கரிக்கின்றேன்

பூர்வ பூர்வத்திற்கு : அனாதியில் மலமில்லாது எல்லாம் உடைய சிவத்திற்கு என்னுடைய கரண உள்ளங்களை சமர்ப்பிக்கிறேன். பூர்வத்திற்கு தாத்பர்யம் மாமாயை திரோதை நீங்கி ஜீவ போதமற்ற அருள் வடிவாய் சிவமாவது.

பூர்வ பூர்வத்தின் தாத்பர்யம் : பசுத்துவம் கெட்டு, ஜீவபோதம் போய், ஆன்மா இயற்கை வடிவாய் சத்துவமாயும் எல்லாமே உடையது. ஒருவாறு அனுபவத்தில் பரவிந்து பரநாதம் பரத்திலும், அபர விந்து அபரநாதம் பூர்வத்திலும் வழங்கும். இவ்வளவும் செப மூலமாய் கரணசுத்தி வந்து அ, வு, இ முன்னுதலைவிட்டு அறிவாகிருதாய் கருணையும் சிவமும் பொருளெனும்படி நிற்றற்கு முதல் துவாரமாம்.

திருவருட்பா - உபதேச குறிப்புகள் - உரைநடைப்பகுதி பக்கம் 284

தவத்திரு ஊரன் அடிகள் எழுதிய 'வள்ளாலர் வாக்கில் பஞ்சாக்கரமும் ஓம்காரமும்' என்னும் புத்தகத்தில் பக்கம் 49ல் காண்க

திருமூலர் பாட்டும் இதை குறிக்கிறது :

சிவன் அருள் ஆயசிவன் திருநாமம்
சிவன் அருள் ஆன்மா திரோதம் மலம்மாயை
சிவன் முதலா சிறந்த நிரோதம்
பவமதகன்று பரசிவனுமே

துகலிறு போர்தத்திலும் இது குறிப்பிடப்படுகிறது :

''அஞ்செழுத்தும் அண்ணல் அருள் ஆன்மாதிரோதம் மலம்''

## பஞ்சாக்கர விளக்கம் :

ஆலயமாக அமர்ந்த பஞ்சாக்கரம்
ஆலயமாக அமர்ந்த வித்தூலம்போய்
ஆலயமாக அறிகின்ற சூக்குமம்
ஆலயமாக அமர்ந்திருப்பானே — திருமந்திரம் 899

நம என்ற சொல்லுக்கு வணக்கம் என்று பொருள். இனி மற்றொரு பொருளும் உண்டு. ம - என்னுடையது. ந - இல்லை, என்னுடையது இல்லை என்று தற்போதத்தை தவிர்க்க வைப்பது. நான் என்னும் (அகங்காரத்தை) அகப்பற்றை விடுதல் வேண்டும். எனது என்ற புறப் பற்றை (மமகாரத்தை) விடுதல் வேண்டும்.

தணிகை புராணம் : வீரட்டகாசப் படலம்

ஐந்தெழுத்து மொரு சார்மொழி களைந்தெனவுமாம்
மைந்துபெற்ற வெமையே முழுதுணர்த்தி வழுவா
தைந்தெழுத்து மொழியொன் றெனவழங்கி வருமால்
மைந்த தேர்தியெனவான் பொருடொகுத் தருளினன்

மைந்தனே ! ஐந்தக்கரங்களும் ஒருபகுதிக்கண் ஐந்துமொழிகள் என்று சொல்லத்தகும். அவ்வக்கரங்கள் வலிமையாகிய (சிவமாகிய) எம்மையே உணர்த்தி ஐந்தெழுத்தால் ஆகிய மொழியென்று சொல்லும் வண்ணம் வழங்கப்பட்டுவரும் தேர்வாயென்று மேலாகிய அப்பிரணவப் பொருளினைத் தொகுத்து சொல்லினன். ஐந்தக்கரங்களில் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு பொருளை உணர்த்தும், எனவே மொழிகள் என்று கூறப்பட்டுள்ளது. ஒரு மொழியாக நின்று சிவமாகிய ஒரு பொருளை உணர்த்துதலால் ஐந்தெழுத்து மொழி என்று கூறப்பட்டுள்ளது.

வினவெண்பா நூலில் என் குருநாதர் இந்த பஞ்சாக்ஷர ஒருபத விளக்கம் தருகிறார். அதை இங்கு காண்போம். வினவெண்பாவில் சீடன் தன் குருநாதரிடம் வினா எழுப்பி தெளிவு பெறுகிறான். அதை சுருக்கமாக காண்போம்.

வினா : நீடொளியும் நிறையிருளும் ஒரே இடத்தில் கூடுதல்; அதாவது திருவருள் சத்தியும் (வ) இருள் மலம் (ம) உயிரடத்தில் (ய) அரிது. அப்படியிருக்க தங்களிடம் ஞானம் பெறுவதற்கு அது நின்றது எவ்வாறு என்று ''நீடொளியும், நிறையிருளும் ஒரே இடத்தில் கூடுதல் அரிது. கொடிய வினைப்பயனாக உடம் பெடுத்து உள்ள அடியேனிடத்தில் உன் அருள் பெற்று ஞானத்தை எய்தியதின் முன் குருவே, நீ நின்றவாறு எவ்வாறு?

வினா :
நீடொளி — வகாரம்
நிறையிருள் — மகாரம்
ஓரிடம் — யகாரனிடத்து
கொடுவினையேன்பாடு — கொடிய வினை உடையேனிடத்து நின்றவாறு எவ்வாறு என்ற வினாவிற்கு

விடை: எடுத்துக்காட்டு மூலம் : குருடன் கண்ணுக்கு இரவியொளி வெளிப்பட்டிருந்தும் தெரியாத தன்மை போல்

கதிரோன் (சூரியன்) எல்லோருக்கும் நேரே நின்றாலும், குருடற்கு இரவு இருளேயாகும். காணும் கண்ணுடையவர்க்கு பகல் ஒளியேயாம். முதல் எங்கும் நம்முள்ளும் நிறைந்திருப்பினும் மலம் உடையார்க்கு விளங்காமல் இருப்பன். சிவஞான போதம் 11ம் சூத்திரம் 3வது அதிகாரணம் ''அருக்கண் நேர் நிற்பினும் அல்லிருளே காணார்'' என்னும் வெண்பாவை வைத்து சிந்திக்க.

| சி | வ | ய | ந | ம |
|---|---|---|---|---|
| பொருள் | அருள் | தெருள் | மருள் | இருள் |

சி — சிவம் — பொருள்
வா — திருவருள் - சிவசக்தி — அருள்
ய — ஆன்மாக்கள் - உயிர்கள் — தெருள்
ந — திரோதான சக்தி (மறைக்கும் சக்தி
மாயை, மாயா காரியம் கன்மவினை) — மருள்
ம — ஆணவ மலம்(அறியாமையை உண்டாக்குவது) — இருள்

சூரியன் எங்கிருந்தாலும் தாமரைகள் எல்லாம் அலர்வதில்லை. ஆனால் பக்குவம் உடைய தாமரைதான் அலரும். அருளாய் உணர் வாக்கு அகலாத செம்மைப் பொருளாகி அகலாது நிற்கும்.

| பதி | | பசு | | பாசம் |
|---|---|---|---|---|
| சி | வா | ய | ந | ம |
| (சூரியன்) | சூரிய பிரகாசம் | கண் | விளக்கு | இரவிருள் |

சூரியன் முன்னே இருள் நிற்காது
'சி'காரத்தின் முன்னே 'ம' நிற்காது

சூரியன் முன்னே விளக்கு மறையும்
'சி'காரத்தின் முன்னே 'ந' மறையும்

சூரியப்ரகாசத்தால் கண் நன்கு பார்க்க முடியும்
கண் (ய) சூரிய பிரகாசம் (வ) மூலம் சூரியனை (சி)வை பார்க்க முடியும்

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| நீடும் | ஒளியும் | ஓரிடத்து | | நிறையிருள் - அறியாமை |

இதை வைத்து சிந்தியுங்கள்.

சிவஞான போதம் 7ம் சூத்திரம் 5ம் பாட்டு
" மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது........... "

| மெய்ஞ்ஞானம் | | | அசத்து |
|---|---|---|---|
| சி | வா | ய | ந — ம |
| கடல் | | நீர் | உப்பு |
| நீடு ஒளி | | ஓரிடத்து | நிறையிருள் |
| பதி | | பதி | பாசம் |

அசத்து உப்பு நீரைப் பற்றுவது போல் 'ய'வைப் பற்றும்
(அது கடலைப் பற்றாது)

அதுபோல் அசத்து மெய்ஞ்ஞானம் முன் நில்லாது.

சிவதருமோத்தரம் " பரமசிவம், பராசக்தி........... " என்னும் செய்யுளையும் கொண்டு தெளிக.

அத்தியாயம் – 3

# சமஷ்டி பஞ்சாக்ஷரம்

சமஷ்டி பஞ்சாக்ஷரம் என்பது ஓங்காரத்தை குறிக்கிறது. ஓம் என்பது பிரணவம். இதை நுண்ணிய ஐந்தெழுத்து என்றும், ஓங்கார பஞ்சாக்கரம் என்றும் சொல்லப்படும். பஞ்சாக்கரம் ஜபிக்கும் போது பிரணவப் பொருளையும், பீஜங்களையும் சேர்த்து ஜபிக்க வேண்டும் அல்லது ஓத வேண்டும் என்பது மரபு இதை ஓதும் முறை என்னும் தலைப்பில் விவரமாக காண்க. எனவே பிரணவத்தைப் பற்றி இங்கு சிந்திப்போம்.

திருமந்திரம் 953ல் ''ஓகார முதற்கொண்டொருகால் உரைக்க'' என்று பிரணவத்தை முன்வைத்து ஓத வேண்டும் என்று அருளுகிறார். அது சமஷ்டி பிரணவம், வியஷ்டி பிரணவம் என இருவகைப்படும்.

ஓம் என தொகுத்து கூறுவது சமஷ்டி பிரணவம்

**அ உ ம்** என வகுத்து கூறுவது வியட்டிப் பிரணவம்

**அ** — பதி (சிவம் - அருட்சக்தி)
**உ** — பசு (ஆன்மா)
**ம** — பாசம் (திரோதம் - ஆணவம்)

திருவருட்பயன் 82ல்

'' இறைசத்தி பாசம் எழில்மாயை ஆவி
உறநிற்கும் ஓங்காரத்துள் '' என்று அருளப்படுகிறது.

**அ + உ + ம் = ஓம்**

ஓங்காரத்தின் வரிவடிவம் விந்து — ஒலி வடிவம் நாதம். அகரம், உகரம், மகரம் இம் மூன்றும் கூடி ஓம் என்று எழுதும் போது விந்து, ஒலிக்கும் போது நாதம். அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் ஆகிய ஐந்தும் சேர்ந்து ஓங்காரம்.

அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் ஆகிய இவைகள் சிவம், அருட்சத்தி, ஆன்மா, திரோதம், ஆணவம் ஆகிய ஐந்தையும் குறிக்கின்றன. இதனுல் ஓங்காரம் ஒருவகையில் நுண்ணிய ஐந்தெழுத்து எனப்படும். இதனை ஓங்கார பஞ்சாக்கரம் என்பர். வள்ளல் பெருமான் '' ஓங்கார பஞ்சாக்கரத்தே பாங்காக நடிக்கின்ருர் '' என்று அருளுகிருர்.

திருமூலர் திருமந்திரத்தில் :

ஓமெனும் ஓங்காரத்துள்ளே ஒருமொழி
ஓமெனும் ஓங்காரத்துள்ளே உருஅரு
ஓமெனும் ஓங்காரத்துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே

ஓமெனும் ஓதப்பெறும் ஓங்காரத்துள்ளே ஒப்பில் ஒருமொழி தோன்றும். இதனை மகாவாக்கியம் எனவும் பகர்வர். ஓங்காரத்துள் அருவம், உருவம் தோன்றும்.

உருவினை சகளம் என்பர். அருவினை நிட்களம் என்பர்.

ஓங்காரத்துள் ஆருயிர் வேறுபாடுகள் பலவும் உண்டாம். அவ் வேறுபாடுகள் மா, மாக்கள், மக்கள், ஆன்றோர், அறிவர், அமரர் முதலியவைகளாம்.

ஓங்காரத்தாலேயே பிறப்பும், சிறப்பும் உறப்பெறும்.

பிறப்பு — சித்தி　　　சிறப்பு — முத்தி

திருமந்திரம் – 268 :

ஓங்காரத்துள்ளே யுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத்துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரதீதத்துயிர் மன்றம் உற்றன
ஓங்கார சிவபரசிவ ரூபமே

முப்பத்தலருவது மெய்ஒலி - ஓங்காரம் ஒலியிணின்று தோன்றுவது வழிவழியாக ஏனைய மெய்கள் தோன்றும் அம்முறையினால் ஓங்காரத் தினின்று ஐம்பூதங்கள் தோன்றின என்று ஓதினர்.

ஓங்காரத்துள் மூவகை உயிர்களும் சார்ந்தன.

மூவுயிர்களாவன :

ஒரு மலம் உடையவர் (ஆணவம் மட்டும்) விஞ்ஞானகலர்

இரு மலம் உடையவர் (ஆணவர், கன்மம்) பிரளையாகலர்

மும்மலம் உடையவர் (ஆணவம், மாயை, கன்மம்) சகலர்

திருமந்திரம் - 2626 :

தூலபிரணவமஞ் சொரூபானந்தப்பேர்
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பெண்
ஆலித்த முத்தரையாங் கதிர் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே

பாரிய - ஒமொழி தூலபிரணவம். அதனுல் பெறுவது பரு உடல் இன்பம். நுண்ணிய ஒமொழி நுண்ணுடற்குரிய வாயிலாகும். மேலைச் சொரூபம் என்னும் இன்ப ஒமொழி காரணப்ரணவமாகும். இது திருவருள் வீழ்ச்சிக்கு வாயிலாகும். திருவருள் வீழ்ச்சி என்பது நீர்வீழ்ச்சி போல் திருவருள் இடைவிடாது பொழியும். இதை சத்தினி பாதம் என்பர். அப்ரணவம் கைக்குறியாம் முத்திரை வடிவாகும். மாமுதல் ஓமொழி மேலைப்ரணவமாகும். இது மகாகாரணமெனப்படும். இது திருவடியுணர்வாம் வேதாந்த வீதியில் சேர்க்கும்.

திருமந்திரம் 2629

வருக்கஞ் சுகமாம் பிரமுமாகும்
அருக்கஞ் சராசரமாகும் உலகில்
தருக்கிய வாதாரமெல்லாந் தன்மேவி
சருக்கமின் ஞானம் தொகுத்துணர்ந்தோரே

ஒருமொழியின் இனமாகிய அகர, உகர, மகரங்கள் வருக்கம் எனப் படும். இவைகள் இன்ப நிலையுமாகும், இறைவனுமாகும். அம்மூன்றின் தொகுப்பாகிய அருக்கம் சராசரமாகும். ஆதார நிலைகளின் உலவமெல்லாம் ஓங்காரமாகும். ஓங்காரத்தின் உண்மை உணர்ந்தோர்கள் திருவடி உணர்வாகிய நிறை ஞானத்தொடும் புணர்ந்தோராவர். வருக்கம் என்பது ஓம்காரத்தின் அம்சங்களாகிய அ, வு, ம் ஆகும். மேலும் திருமந்திரத்தில் ஓம் என்பதின் விளக்கத்தை அருளப்படுகிறது.

திருமந்திரம் 907

அதுவாம் அகார இகார உகாரம்
அதுவாம் எகாரம் ஒகாரம் அதுஐந்தாம்
அதுவாகும் சக்கர வட்டம் மேல்வட்டம்
பொதுவாம் இடைவெளி பொங்கு நம்பேரே

ஐந்தெழுத்துக்கு தமிழ் மொழியில் உயிர்க்குறிலாகிய அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தெழுத்தாகும். இவற்றை சக்கர வட்டங்களிலும், மேல் வட்டங்களிலும் வரைக. நடுவாகிய நமக்கு நலமெலாம் பொங்குவிக்கும் பெயர் நமசிவாய என்க.

அதுவாம் — அப்பஞ்சாக்ஷரமான அ, இ, உ, எ, ஒ திருவைந்தெழுத்தை பிரணவத்தோடு கூடி ஒலிப்பது, ஒதுவது, சிந்திப்பது என்று நம் முன்னோர்கள் வகுத்துள்ளார்கள். இதை திருமூலர் திருமந்திரத்தில் அருளுகிருர்.

திருமந்திரம் 931-ல்

அகார உகார சிகார நடுவாய்
வகாரமோடு ஆறும் வளியுடன் கூடிச்

சிகாரமுடனே சிவன் சிந்தை செய்ய
ஒகார முதல்வனே உவந்து நின்ருனே

அகார உகாரம் — ஓங்காரத்தை குறிக்கும்
சிகர வகரம் — ஐந்தெழுத்தை குறிக்கும்

இது ஓம் நமசிவாய ஆகும். இவற்றை ஆறெழுத்து மந்திரம் என்பர். இதை பின்வரும் எழுத்து வகைகள் ஓதும் முறை இவற்றில் காண்க, சிவ சிவ என்று சிந்தை செய்ய ஓங்கார முதற்பொருளாகிய சிவபெருமான் தோன்றியருள்வான்.

அகரம்...ஆறும் — பிரணவத்தோடு கூடிய ஐந்தெழுத்து (ஷடாக்ஷரம்)
வளி செய்ய — சிகரத்துடன் தொடங்கி காற்றைப் பிடிக்கும்
கணக்கறிந்து சிவன் சிந்தனை செய்ய

திருமந்திரம் 932ல் :

அற்ற இடத்தே அகார மதாவது
உற்ற யிடத்தே யுறுபொருள் கண்டிடச்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்
குற்றம் அறுத்த பொன்போலும் குளிகையே

துயிலற்ற இடமாகிய புருவநடுவின்கண் வெளிப்பட்டு தோன்றுவது அகரமாகும். அந்த அகரம் நேர்ந்த இடத்து முழு முதற் சிவனை கண்டிடச் செய்யும். ஆருயிர்களின் மாசு அகற்றிய மெய்ப்பொருளாகிய சிவன் செம்பின் குற்றமாகிய களிம்பகற்றி பசும் பொன்னிருக்கும் குளிகையை ஒப்பன்.

திருமந்திரம் 933ல் :

அவ்வென்ற போதினில் உவ்வெழுத்தொலித்தால்
உவ்வென்ற முத்தியுருகி கலந்திடும்
மவ்வென்றன்னுள்ளே வழிபட்ட நந்தியை
எவ்வணஞ் சொல்லுகேன் எந்தன் இயற்கையே

அகரத்துடனே, உகரத்தையும் ஒலித்தால் அடியார் நடுவுண்ணிருக்கும் குறிப்பினை உணர்த்துவதாகிய உவ்வென்ற வீடுபேறு பிரிவின்றி எய்தும் மகர நிலையாகிய மனத்தின்கண் விளங்கும் நந்தியாகிய சிவன் என்னை முன்னின்று வழிபடுத்தும். சிவபெருமான் புரிய அருளை நான் எவ்வாறு சொல்வேன்.

மணிவாசக பெருந்தகையார் - (சிவபுராணத்தில்)

"உய்ய என்உள்ளத்தே ஓங்காரமாய் நின்ற
மெய்யா, விமலா, விடைப்பாகா"

என்று தன் உள்ளத்தில் தான் உய்ய இறைவன் ஓங்காரமாய் நின்றதாக சொல்லுகிருர்.

வள்ளல் பெருமான்

"சேமமிகு மாமறையின் ஓம்எனும் அருட்பதத்திறன்
அருளி மலயமுனிவன் சிந்தனையில் வந்தனைஉவந்த
மெய்ஞ்ஞான சிவதேசிய சிகாரத்னமே"

என்று முருகப்பெருமானை ஓம் எனும் அருட்பதம் அருளிய சிகரத்னமே என்று பாடுகிறார். ஓங்காரத்தை சமஷ்டியாக காணுங்கால் அது ஓரெழுத்து வியஷ்டியாக பிரித்து காணுங்கால் அது பதமாகும். வள்ளல் பெருமான், முருகன் ப்ரணவ சொரூபன் என்று "பிரணவாகார சின்மய விமல சொரூபமே" என்று பாடுகிறார்.

வள்ளல் பெருமான் பிரணவ ஒலியினர், பிரணவ வடிவினர் என்று பாடுகிறார். அது

"ஓங்குசீர் பிரணவ ஒளியே
பெரும்பொருட் கிடஞும் பிரணவவடிவில்
பிறங்கிய ஒரு தனிப்பேறே" என்று பாடியுள்ளார்.

வள்ளல் பெருமான் இறைவனது திருவடிகளை பிரணவத்தின் அடியிலும், நடுவிலும், முடியிலும் நின்றோங்கும் திருவடிகள் என்று

"பிரணவத்தின் அடிமுடியின் நடுவினும் நின்றோங்கும்
பெருங்கருணைத் திருவடிகள் பெயர்ந்து வருந்திடவே" என்றும்

"ஓங்காரத்துள்ளொளியாய் அவ்வொளிக்கும் ஒளியாய்
உபயவடிவாகிய நின் அபயபதம்" என்றும் பாடுகிறார்.

சத்தினி பாதத்தில் பிரணவமே வடிவாய் இறைவன் எழுந்தருளி உணர்த்துவதை ஒரு பாடலில் கூறுகின்றார்.

ஓங்காரத்தை தனிமொழி என்று "ஓங்காரத் தனிமொழியின் பயனை சற்றும் ஓர்கிலேன் சிறியேன்" என்று ஆளுடைய அரசர் அருண்மாலையில் பாடுகின்றார். வள்ளல் பெருமான் அருட்பா பாடல் 4123ல் ஓங்கார உலகு, ஓங்கார அண்டம் என்றும் பேசுகிறார்,

ஓம், அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் என ஐந்தாக பிரியும். அது ஓங்கார பஞ்சகம் எனப்படும்.

வள்ளல் பெருமான்: "ஓங்கார பஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்"
என ஓங்கார பஞ்சகம் என்று குறிக்கிறார்.

வள்ளல் பெருமான் தான் பெற்ற ஓங்கார அனுபவங்களில் தனக்கு இறைவன் சாகாக்கல்வியை கற்பித்து, ஏகாக்கர பொருளையும் அருளினன் என்று அருட்பெருஞ்சோதி அகவலில்

"சாகாக்கல்வியின் தரம்எலாம் கற்பித்து
ஏகாக்கரம் பொருள் ஈந்த சற்குருவே"

ஏகாக்கரம் — ஏகஅக்ஷரம் ஒரெழுத்து — ஓங்காரம்

வள்ளல் பெருமான் மேலும் தனக்கு இறைவன் ஓங்கார நிலையைக் காட்டினன், அதன்மேல் உற்றெளிரும் நிலையைக் காட்டினன், அப்பால் உயர்ந்த தனி நிலையில் ஏற்றினன் என்று தனது அருட்பாவில்

"ஓங்காரநிலைக்காட்டி அதன்மேல் உற்றெளிரும்
ஒருநிலையும்காட்டி அப்பால்உயர்ந்த தனிநிலையில்
பாங்காக ஏற்றி" என்று அருளுகிறார்.

வள்ளல் பெருமான் தன் பிரணவாகாப் பரிசு, பிரணவ தேகமும் பெற்றதைப் பற்றி இவ்வாறு பேசுகிறார்.

"வேதாந்த நிலையும் அதன் அந்தத்தே விளங்கும்
மெய்ந்நிலையும் காட்டுவித்தீர் விளங்கிய சித்தாந்தம்
போதாந்த நிலையும் அப்பால்புகலரிதாம் பெரிய
பொருள் நிலையும் தெரிவித்தீர் புண்ணியரேறுமது
பாதாந்தம் அறிவித்தீர் சுத்த வடிவுடனே
பகர்பிரணவாகாரப் பரிசும் எனக்களித்தீர்
நாதாந்தத்தனி செய்கோல் நான்செலுத்தக் கொடுத்தீர்
நடராஜரே நுமக்குநான் ஏதுசெய்வனே" என்று பேசுகிறார்.

பிரணவாகார பரிசு என்பது பிரணவ தேகம், சுத்த தேகம், ஞான தேகம் என மூன்றாகும்.

சுத்த தேகம் — ஒளி உடம்பு
பிரணவ தேகம் — ஒலி உடம்பு
ஞான தேகம் — ஞான உடம்பு

இதைத்தான் சேக்கிழார் பெருமான் சம்பந்தர் பெருமானை வருணிக்கும் போது "ஞானத்தின் திருஉரு" என்கின்றார். அடிகளார் தன் உபதேச குறிப்புகளில் ஓம் என்பது பிரணவம் என்று சொல்கின்றார். ப்டைத்து, அளித்து, அழிக்க வல்ல தலைவன் என்பதே இந்த ஓங்காரத்தின் பொருள் என்று அருளுகிறார்.

திருவருட்பா — உரைநடைப் பகுதி பக்கம் 286
உபதேச குறிப்புகள்

வள்ளலார் உபதேச குறிப்பை மற்றொருவர் குறித்து வைத்துள்ளது.
பிரணவம் : பிரணவத்தின் ஐந்து பாகம் யாவெனில் அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் (அ, வு, ம, விந்து, நாதம்) பஞ்சமி என்னும்

வாக்கு பிரணவத்தின்கண் தோன்றியது. அதற்கு ஸ்தானம் மூலாதாரம், அதிலிருந்து தோன்றிய மற்ற நான்கும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி. இவற்றின் இடம் நாபி, இருதயம், கண்டம், லலாடம்.

அடிகளார் மற்றும் அகரத்திற்கு விளக்கம் தருகிறார். அது பிரம் மிக்கதக்கதாக உள்ளது.

— தவத்திரு ஊரன் அடிகள் நூல் ''வள்ளலார் வாக்கில் ஓங்காரமும், பஞ்சாக்கரமும்''ல் பக்கம் 12, 13ல் காண்க

ஓங்கார நடனம் :

இறைவன் சிவபெருமான் திருநடனங்கள் பல வகைப்படும். அவை களை '' ஆடல் வல்லானும் ஐந்தெழுத்தும் '' என்னும் தலைப்பில் காண்போம். அந்த நடனங்களின் வகைகளில் இங்கு ஓங்கார நடனத்தை மட்டும் சிந்திப்போம்.

சிவபெருமானின் திருநடனம் புரியும் வகைகளையும், தாத்பரியங் களையும் நம் செந்தமிழ் நாட்டு மெய்ஞ்ஞானிகள், சிற்பிகள் கலையுணர் வோடு பல அரிய பெரிய தத்துவங்களோடும் ஸ்ரீ நடராஜ பெருமான் திருஉருவத்தை அமைத்தார்கள். ஓங்கார நடனத்தைபற்றி என்ன சொல்கிறது என்பதை மட்டும் பார்ப்போம்.

'' ஓங்காரமே நல்திருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம் - ஆங்காரம்
அற்றார் அறிவார் அணிஅம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார்பின் '' — உண்மைவிளக்கம் 35

ஓம்காரம் — ஓங்காரம் ஓம் — பிரணம்
திருவாசி — பிரமை உற்று — பொருத்தி
அதனின் — அவ்வோங்காரத்தில்
நீங்கா — விட்டகலாத அணி அம்பலம் — திருவம்பலம்
எழுதலுடையது — ஒலி வடிவு எழுதல் உடையது — வரிவடிவு
வரி வடிவு — அழியும்
ஒலி வடிவிலும் தூலம் சூக்குமம் அழியும் காரண ஒலியே அழியாது

எழுத்தோசையின் விளக்கம் :

1) வைகரி — பிறர் கேட்கும் வாக்கு - தூல வைகரி
தன் செவிக்கு மட்டும்
கேட்கும் வாக்கு - சூக்ஷ்ம வைகரி

2) மத்திமை — செவியில் கேட்கப்படாதது - மெல்லோசையாய் கழுத்தில் விளங்குவது. சொல்பவன் தனக்குள் உணர்கின்ற சவிகற்பஉணர்விற்கு ஏதுவானது. உள்ளுணர்வு ஓசையாகி செவியில் உறுதல் செய்யாது.

3) பைசந்தி — சூக்ஷ்ம ரூபமாக (நுண்ணுர்வு) உள்ளது. வாக்குகள் மயில் முட்டையில் உள்ள நிறம் ஐந்தும் போல் அது சிந்தையிலே நிற்கும்.

4) சூக்குமை — பர சரீரத்தினுள் நாத மாத்திரையாய் விளங்குவது. உயிர்க்கு மனம், புத்தி, அகங்காரம், சித்தம் நான்கும் உட்கருவியாகும். இதை அந்தகரணங்கள் எனப்படும். அகர முதலிய எழுத்துக்கள் உடன் நின்று செலுத்திய வழியேயாகும். ஆகவே சமஷ்டியில் பிரணவரூபம் ஆகிய இவ்வெழுத்து ஐந்திலும் உயிரின் கண் உணர்வு மாறி மாறித் தோன்றும்.

அகரம் — அகங்காரத்தை செலுத்தும்
உகரம் — புத்தியை செலுத்தும்
விந்து — சித்தத்தை செலுத்தும்
நாதம் (ஆன்மா) — உள்ளத்தைச் செலுத்தும்

இதை போதத்தில் :

" அகாரம் உகாரம் அகங்காரம், புத்தி
மகாரம் மனம் சித்தம் - பகர்அது இவற்றை
நாதம் உளவடிவாம் நாடிற் பிரணவமாம்
போதம் கடற்றிடையே போன்று "

என்னும் சிவஞான முனிவரின் வாக்கில் காண்க.

நமசிவாய என்பது ஓங்காரத்தின் விரிவே :

இதைப்பற்றி சிந்திப்பதற்கு முன் நமசிவாய - சிவாயநம எழுத்துக்களின் விளக்கத்தை மட்டும் காண்போம். மற்ற விவரங்கள் அந்தந்த தலைப்பின் கீழ் காண்க.

சி — சிவன்
வ — அருள் - சக்தி
ய — உயிர் - ஆன்மா
ந — மாயை, கன்மம், திரோதம்
ம — ஆணவ மலம்

இந்த விளக்கத்தை வைத்து சிந்திப்போம்.

நகாரம் (மாயை, கன்மம், திரோதம்); மகாரம் (ஆணவம்);
இரண்டன் நீக்கமே ஆங்காரம் அறுதற்கு அடி.

யகாரம் (ஆன்மா - உயிர்) ஜீவனம் இன்றி வகாரத்துள் (திருவருள் - சக்திக்குள்) ஒடுங்குதலே ஆங்காரம் அற்றுதல்.

உண்மை நெறி விளக்கத்தில்

'' பரை உயிரில் யான் எனது என்றறநிற்றல் ''

என்று உள்ளவாக்கில் காண்க.

பரை - திருவருள் (வ) உயிர் (ய) - யான் எனது (ஆணவம் - ம)

ந, ம இரண்டும் நீங்கிய ஆடல் இதில் கூறப்பட்டது. இதை நீங்கா எழுத்து 'சிவ' அது ஞான நடனம். (இதர விவரங்கள் 'ஆடல் வல்லானும் - ஐந்தெழுத்தும்' என்னும் தலைப்பில் காண்க) அதை உணர்ந்தவர்க்கே பிறப்பு அறும். அதற்கு இடமான அம்பலமே உகாரம் அந்த அம்பலத்துள்ளே நடத்தும் ஆடலே சிகாரம். தான் அதுவாய் நின்று அவ்வாடலைப் பெற்று பிறப்பற்று பேரின்புற்று வாழ்வதே யகாரம். அற்றப் பிறப்பே நகாரம். அப்பிறப்பிற்கு ஏதுவானதே மகாரம்.

எனவே திருவாசியை ஓங்கார ரூபமாக தியானம் செய்ய வேண்டும். அத்திருவாசிக்குள் விளங்கும் பூரண ஜோதியை அப்பிரணவத்துள் அடங்கிய அக்ஷரங்களாக அறிதல் வேண்டும். அவ்வுண்மையை ஆங்காரம் அற்ற சிவஞானிகளே அறிவார்கள். இறைவன் கூத்து அவர்களன்றி மற்றவர்க்கு விளங்கா்து. இதை விளங்கப் பெற்றவர் பிறத்தலின்றி பேரின்ப கடலில் மூழ்கி திளைப்பர். இது சிதம்பர தரிசனம் செய்யும் உபாய நிட்டை இதனுல் உண்மை நிட்டையை தலைப்பட்டு இன்பம் உறலாம். மேலும் என் குருநாதர் உண்மை விளக்கம் உரையில் (பக்கம் 61) கீழ்கண்டவாறு அருளுகிறுர்.

சவிகற்ப உணர்விற்கு மூலகாரணம் நாதகலை. அதை உணராமையிற் பரமுத்திக்கு அதிகார மல வாசனையே பரமபந்தம் ஆகித் தடையாகும். அதனின் நீங்குதலே பரமுத்தி.

'' ஒவிடவிந்து ஞானம்உதிப்பதோர் ஞானம் உண்டேல்
சேவுயிர் கோயினுன்றன் சேவடி சேரலாமே ''

இதுகாறும் எழுதியவற்றுல் ஓங்காரத்தால் உயிர்க்கு உணர்வு தோன்றியும் ஒடுங்கியும் வரும் உண்மை உணர்த்தப்பட்டது. பிரணவரூபமான வாக்குகளில் இருந்து எழுத்து, செயல், சொல், மந்திரம் எல்லாம் தோன்றுகின்றன. சொல்லுலகிற்கெல்லாம் மூலகாரணம் பிரணவம். அதுவே அந்த கரணங்களையும் புருடனையும் செலுத்தும் பஞ்சகலை வடிவான சூக்கும பஞ்சாக்கரமாகும்.

ஓங்காரி என்பாள் அவள் ஒரு பெண் பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை உடையவள்
ஆங்காரியே ஐவரைப் பெற்று இட்டு
ஈங்காரத்துள்ளே இனித்திருந்தாளே

ஈங்காரம் - ஹ்ரீம். பின்னர் அது தூல பஞ்சாக்கரம் ஆகும். அச் சூக்கும பஞ்சாக்ஷரம் அஜபா மந்திரமாகிய பிராணவாயுவை அடக்கியும் விட்டும் நின்று உணர்த்தும். அதனுல் நினைப்பும் மறப்பும் நிகழும்.

நினைப்பு — சகலம் மறப்பு — கேவலம்
பாலிடையாடை சூழல் போல் கரந்து நின்றுள்ளோம்
கரத்தல் — கேவலம் பரத்தல் — சகலம்

அந்நினைப்பும் மறப்பும் நீங்கி முதல்வனை நினையாமல் நினைந்து பவத்தொடக்கை வெல்ல ஓங்காரத்துண்மையை அனுபவித்துணர்தல் வேண்டும்.

ஓம் எனும் ஓங்காரம் ஒன்முத்தி சித்தியே:

'' ஓங்காரத்துள் ளொளியுள்ளே உதயம் உற்று
ஆங்காரம் அற்ற அனுபம் கைகூடார்
சாங்காலம் முன்னுர் பிறவாமை சார்வுருர்
நீங்கா சமயத்துள் நின்ருெழிந் தார்களே ''

அருணகிரிபெருமானும் ''ஓங்காரத்துள்ளே முருகனுருவங்கண்டு'' ஓம் என்னும் ஒன்றிலே அகர ஒலி, உகர ஒலி, மகர மெய்யொலி என மூன்று உள்ளது. அம்மூன்றனுருவிற்கு காரணமாக விந்து, அந்நான்கினும் கூடியும் குறைந்தும் நிற்கும், நாதம் ஆகிய ஐந்தும் பிரியாமல் உள்ளன. ஓம்காரத்தின் சிறப்பைப்பற்றி இதுகாறும் பார்த்தோம்.

திருமூலர் திருமந்திரம் 9ம் தந்திரம் சமாதி பகுதியில் பிரணவம் எனும் ஓங்காரம் இயல்புணர்ந்து இறைவனோடு ஒன்றுமாறு அருளுகிருர்.

திருமந்திரம் - 2626 :

தூலப் பிரணவம் சொரூபானந்தப் பேருரை
பாலித்த சூக்குமம், மேலைச் சொரூபப்பெண்
ஆலித்த முத்திரை யாங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே

யாரும் கேட்டறியும் தூலப்பிரணவ ஒளி தன்னியல்பு உணர்தலால் வரும் இன்பத்தை பயக்கும் பெருமொழியாகும். காக்கப் பெற்ற சூக்குமப் பிரணவம் மேற்கூறிய தன்னியல்பை உணரவைக்கும்

பெண்மை (அருட்சக்தி) ஆகும். எல்லா நூல் பொருளும் திரண்ட சின் முத்திரை, அதனினும் நுட்பமாகும். இம்மூன்றும் வேதாந்தமாகிய உபநிடதங்கள் நெறிக்கண் உள்ளவை.

பாரிய ஓமொழி தூலப் பிரணவமாகும். அதனுல் பெருவது பரு உடலின்பம். நுண்மை ஓமொழி நுண்ணுடற்குரிய இன்ப வாயிலாகும். மேலைச்சொரூபம் என்னும் இன்ப ஓமொழி காரணப் பிரணவமாகும். அது திருவருள் வீழ்ச்சிக்கு வாயிலாகும். அப்பிரணவம் கைக்குறியாம் முத்திரை வடிவாக இருக்கும். மாமுதல் ஓ மொ ழி மேலைப்பிரணவ மாகும். அதுவே மகாகாரணம் எனவும் சொல்லப்படும். இது திருவடி உணர்வாம் வேதாந்த வீதியில் சேர்ப்பது ஆகும்.

தூல பிரணவம் தூல சரீரத்திற்கு ஆனந்தமும், சூக்குமப்பிரணவம் சூக்கும தேகத்துக்கு (மேலைச்சொரூபம்) ஆனந்தமும், காரணபிரணவம் திருவருட்சக்தி பதியச் செய்தலும், மகா காரணப் பிரணவம் (மேலைப் பிரணவம்) வேதாந்த வீதியில் சேர்த்தலுஞ் செய்யும்.

எல்லாப் பிராணன்களையும் பரமான்மாவிடம்
வணங்கச் செய்வது பிரணவம் :

" ப்ராணுத் ஸர்வான் பரமாத் மறி ப்ரணமயதி இதி "
ப்ரணவம் என்பது சொற்பொருள்

" ப்ரணவமே வில் ஆன்மாவே அம்பு - பிரம்மம்தான் குறி சோர்வு படாமல் எய்க. அம்பைப் போல் அதனோடு ஒன்றும் நிலை உண்டாம் " என்றும் முண்டகோபனிஷத்தின் இரண்டாம் பிரிவின் நாலாம் தொடருடன் எண்ணத்தக்கது. பிரணவத்தின் உட்பிரிவு அ, வு, ம், விந்து, நாதம் என்பன சூக்கும ஐந்தெழுத்து எனப்படும். இவைகள் சூக்குமை, பைசந்தி, மத்திமை வடிவில் நின்று எதிர், எதிர் நிரவலாகப் புருடன், சித்தம், புத்தி, அகங்காரம் என்பவற்றை செலுத்தி நிர்விகற்ப, சவிகற்ப உணர்வுகளை தருகின்றன என்பது சித்தாந்த சாத்திரத் துணிவு. பிரணவமே ஹம்ச எனும் அசபையாகவும், ஹொம் என்றும் சிவபீச மாகவும் திரிந்து நிற்கும் என்பதும், அகர முதலியவைகளில் இருந்து நகரம் முதலிய திருவைந்தெழுத்துக்கள் தோன்றும் என சிவாகம நூல் பேசுகிறது.

பாலித்த — மறையாக வைத்து காக்கப்படுகின்ற
பாலம் — காப்பு ஆலித்த — திரண்ட
முத்திரை — மோன முத்திரை
கையில் பெருவிரல் — சிவ சுட்டு விரல் — ய நடுவிரல் — ம
ஏனைய இருவிரல் — ந எனப் பொருள் வீதி — நெறி

தூல உபாசனையில் பொருள் உணர்த்தும் வேதாத்தில் பிரணவமும் அதன் சூக்கும பொருள் விரிக்கும் சைவ சித்தாந்தில் ஐந்தெழுத்து எனக் கொள்ளப்படுகிறது.

ஐம்பூதங்களுக்கும் இயங்கும் நிலைத்தினங்களுக்கு ஓங்காரமே பிறப்பிடம். ஒரு மலம், இரு மலம், மும்மலம் உடைய மூவகை உயிர்களும் தம் உண்மையியல்பை உணர்வது ஓங்காரமாகிய நாதத்தின் இயல்பை அறிந்து அதனின் வேறுதாம் என உணர்ந்தபோதே கூடுவது. இங்ஙனம் அறிந்த சீவனே பரசிவமே ஆகும். அருணகிரிப் பெருமான் அருளிய 'நாதவிந்து கலாதி நமோநம' என்னும் திருப்புகழைக் கொண்டு அறியலாம்.

இறைவனின் சக்தி அளவிடப்படாத நுண்மையும் ஆற்றலும் வாய்ந்தது. இது உலகத்துக்கு முதலான அசுத்த மாயையை நேருக பொருந்துமாறுல் அச்சக்தியின் வேகத்தை அவை தாங்கமாட்டது. எனவே இவ்வுலகம் தோன்றுது. அதனுல் அச்சக்தி நுண்பொருளியல்பில் தன்னோடு பூத்தும் நடுநிலையாய் நிற்கும் சுத்தமாயை எனப் படும். சுத்த மாயை விந்து சக்தியோடு நேரப்பொருந்தி நின்று தனது வேகத்தை அதன் வாயிலாக அசுந்தமாயை தாங்குமளவு கனிவுபடுத்தி பின் அவ்வசுத்தமாயையை இயக்கி இவ்வுலகங்களையும் இவ்வுலகத்து பல் பொருள்களையும் தோற்றுவிக்கும். எனவே சிவசக்தி நேரே சென்று இயைந்து நிற்கும் இடம் விந்து என அறியப்படுகிறது. இனி இச்சிவ சக்தியால் உந்தப்பட்ட விந்து மாயை இயக்கம் உடையதாய் ஆகிறது. அதனில் இருந்து ஒருநாதம் உண்டாம். அந்நாதம் அசுத்த மாயையின் அணுக்களை திரட்டி உலகங்களைப் படைக்கும். சிவசக்தியால் இயக்கப் விந்து சுழிந்து இயங்குங்கால் வட்ட வடிவம். அவ்வட்ட வடிவில் இருந்து தோன்றும் நாதம் வரிவடிவம் உடையது. இவ்விந்து நாதங்களின் சேர்க்கையைத்தான் 'உ'. அது பிள்ளையார் அழியென முதல் உலக தோற்றத்திற்கு காரணமென்பதை புலப்படுத்த முதலில் தீட்டப் படுகிறது. அதன் அறிகுறியே சிவலிங்கம், மேல்நாட்டு விஞ்ஞானி ஒருவர்; Rocket ஆகாயம் நோக்கி புறப்படும்போது ஒரு Bing-bang என்ற ஒலி உண்டாகிறது. அதுவே பிரபஞ்சங்கள் தோன்றுவதற்கு காரணம் என்று கூறியுள்ளார். எனவே இந்த கருத்து விஞ்ஞான ரீதியாகவும் ஒப்புக் கொள்ளப்பட்டது ஆகும்.

ஓம்கார பிரணவம் அ, உ, ம், விந்து, நாதம் என நுண்ணிய ஐந்தெழுத்து என்பதை வைத்தும்; ''விந்து நாதமும் ஏகவடிவமும் அதன் சொரூபமாய் உறைவது சிவயோகம்'' என்கின்ற அருணகிரி பெருமான் வாக்கையும் வைத்து காண்க. திருமுருக கிருபானந்த வாரியர் சுவாமிகள் திருப்புகழ் அமிர்தம் தொகுதி பழனி (மூன்றும்

படைவீடு) திருப்புகழ் விரிவுரையில் ''நாதவிந்து கலாதி நமோநம'' என்னும் திருப்புகழ் விரிவுரையில் காண்க.

மேலும் திருமூலர் பிரணவம் அல்லது சிவபீசத்தைப் பதினறு கலை களாகப் பாவித்து வந்தால் அது சமாதி நிலைக்கு வாயிலாம் என்று அருளுகிறார். இதை சோடச மார்க்கம் என்பர். சம்யாசாரத்தில் கூறப்படும் சோடசி எனலும் ஆகும்.

திருமந்திரம் 2631

''சோடச மார்க்கமும் சொல்லும் சன்மார்க்கம்
காடிய ஈராறின் அந்தமும் ஈரேழிற்
கூடிய அந்தமும் கோதண்டமும் கடந்து
தேறியே ஞான நேயாந்தத் திருக்கவே''

நன்னெறியினர்க்கு அவர் பன்னிரண்டங்குலம் முடிவெனப்படும். நிராதார முடி நிலயம், பதினன்கு வித்தையில் கூடிய முடி நிலையாகிய பேருரைகளும் புருவ நடுவில் உற்று நோக்குதலும் ஆகிய செயல்களை கடந்து ஞாதுரு, ஞான, ஞேயம் என்னும் பதினறன் நெறியினையும் நூல்கள் விரித்து சொல்லும்.

ஈராறின் அந்தம் — முடிமேல் துவாத சாந்தம் - நிராதாரம்
ஈரேழ் — வேதம் 4, அங்கம் 6, உபாங்கம் 4
ஆகிய பதினன்கு வித்தைகள்

திருமந்திரம் 2690

''அகார முதலாக ஐம்பத்தொன்றாகி
உகார முதலாக ஓங்கியுதித்து
மகாரமுதலாக மாய்ந்து மாய்ந்தேறி
நகாரமுதலாகும் நந்திதன் நாமமே''

அகர முதலானவும் ககர முதலாகவும் உள்ள ஐம்பத்தோர் எழுத் துக்களும் பிரணவ கலைகளாகிய அகர உகர மகரங்களில் தோன்றிபின் வளர்ந்து நின்று பின் மாய்ந்து இவ்வாறே அவற்றை முதலாகக் கொண்டு வருவன. அவையும் அவற்றின் முதல்களாகிய விந்து நாதங் களும் திரிதலால் உண்டாகும் நகாரம் முதலிய ஐந்தெழுத்தும் இறைவன் திருநாமம் வடிவம் எனப்படும். ஆறு ஆதாரத்தில் அடங்கி யுள்ள அகாரம் முதல் உகாரம் முடிய உள்ள ஐம்பத்தோரு அக்ஷரங் களும் மந்திரங்கள் ஆகும் இம்மந்திரத்தை 'மாத்ரு மந்திரம்' எனவும் ளோ மந்திரம் எனவும் வேத சிவாகமங்கள் கூறுகின்றன.

''மாத்ருகா மந்த்ராஞும் முக்ய பவேதி உர
தத்சக்திருத் ரயம்யுக்தா கேவலம் வாயமப் யஸேத்
- காமிகாகமம்''

இம்மந்திரம் ஐம்பது சத்தி பேதங்களோடும், அத்துணை சத்தி பேதங்களோடும் விளங்கி நிற்கும்.

ஓம்காரம் பிரணவம் என்று சொல்லப்படும்.

ப்ர, நவம் — நவம் - புதுமை ப்ர — விசேடம்

சிறந்த புதிய புதிய ஆற்றலை தருவது பிரணவம். இம்மகா மந்திரத்தின் பொருள் அறியாது பிரம்மதேவனே மயங்கினூர். அவரே அறியாது மயங்கினால் மந்திரப் பொருளை நாம் அறிந்தோம் என்று எண்ணுவது முறையா, இக்கருத்தை கச்சியப்ப முனிவர் கூறுகின்றார் :

தூமறைக்கெல்லாம் ஆதியும் அந்தமும் புகலும்
ஓமெனப்படும் ஓரெழுத் துண்மையை யுணரான்
தாமரைப் பெருங்கடவுளும் மயங்கின் என்றால்
நாமினிச்சில அறிந்தமை என்பது நகையே

அருணகிரிபெருமான் ''ஓரெழுத்தில் மிக அன்பு ஊறி ஓவியத்தில் அந்தம் அருள்வாயே'' என்று திருப்புகழில் அருளுகிறார்.

வள்ளல் பெருமான் அருளிய பிரணவ உபதேசம் :

## பிரணவம் :

ஓம் என்னும் எழுத்து பிரணவம் என சொல்லப்படும். படைத்து அளித்து அழிக்கவல்ல தலைவன் என்பதே அந்த ஓங்காரத்தின் பொருள்.

பிரணவத்தின் ஐந்து பாகம் யாவெனில்: அகரம், உகரம், மகரம், விந்து, நாதம். பஞ்சமி என்னும் வாக்குப் பிரணவத்தின் கண் இருந்து தோன்றியது. அதற்கு ஸ்தானம் மூலாதாரம், அதிலிருந்து தோன்றிய மற்ற நான்கும் சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி இவற்றிற்கு நாபி, இருதயம், கண்டம், லலாடம்.

அகரத்தைப் பற்றி அடிகள் உபதேச குறிப்புகள் இரண்டு.

அது பின் வருமாறு :

## அகரம் :

மூலாங்கம் பிரணவமாகிய அகாலக்ஷணம் ஒருவாறு :

ஊன்றல — வாமை
சுழித்தல் — ஜேஷ்டை
விசிரிம்பித்தல் — ரௌத்ரி
மடித்து மேலேறல் — காளி
அங்கிருந்து கீழ்வால் — கலவிகரணி

மேல் புடைப்பெயர்த்தல் — பலவிகரணி

கீழ்த்தாழல் — பலப்ரமதனி

கீழ் ஊன்றி நிற்றல் — சர்வபூததமனி

வரி வடிவாதல் — மனோன்மணி

இதில் விந்து நாதம் இந்த நவநிலைக்கும் உள.

## அகரமாகிய முதல் எழுத்து உற்பத்தி விபரம்




1) விந்து — பெரிய வெளிச்சம் - சூரிய வெளிச்சம்
2) நாதம் — பெரிய நாதம்
3) பரவிந்து — அதில் பாதி வெளிச்சம் - சந்திர வெளிச்சம்
4) பரநாதம் — நாதம்
5) அபரவிந்து — நக்ஷத்ர ஒளி
6) அபரநாதம் — நாதம்
7) திக்கிராந்தம் — அருகிய வெளிச்சம் - மின்னல் ஒளி
8) அதிக்கிராந்தம் — சப்தம்
9) வாமசத்தி
10) ஜேஷ்ட சத்தி
11) ரௌத்ரி சத்தி
12) காளி சத்தி

— இவைகளை தவத்திரு. ஊரன் அடிகள் எழுதிய 'வள்ளலார் வாக்கில் ஓங்காரமும் - பஞ்சாக்ஷரமும்' என்னும் நூலில் பக்கம் 12, 13, 14, 71ல் காண்க

# தணிகை புராணம் :

## அகத்தியன் அருள்பெறு படலம்

### மறைகள் தோன்றுதல் — ஐந்தெழுத்து சிறப்பு

பிரணவ் முதலாய்ச் சிவாயஎன்பதுபின்
பிணைந் துறக்கிலிக்கும் ஆறெழுத்தும்
விரவு மந்நூலின் எவ்வகைமனுக்கு
மேலதாம் அவை தருபொருள்கள்
பரனொடு பஞ்சசக்திகள் இரண்டு
பயனுமாம் பயின்ற வர்க்காதி
மருவிய பதத்தின் வித்தினுலென்ன
மறைமுத லனைத்தும் தோன்றிவால்

பிரணவம் முதலிலே பின் சிவய என்னும் மூன்றெழுத்தும் சேர்ந்து நிற்பவும், ஓதா நின்ற ஓம் சிவாயநம எனும் ஆறெழுத்தாக திருமந்திரம் முதலிய வேதாகம நூல்களில் பரவி ஆங்காங்கு வரும் ஏனைய மந்திரங்களை காட்டிலும் சிறந்ததொன்றாகும். அம்மந்திரங்களில் அமைந்த ஆறெழுத்துகளும் அதைப் பயில்வோர்க்கு நல்கும் பொருள்கள்; இறைவனும் ஐந்துவகைப்பட்ட இறைவியும் இரண்டுவிதமான பயன்களும் ஆகும். அவ்வாறு முதல் நின்ற பிரணவச் சொல்லினின்றே சிறியதொரு விதையினின்று பெரிய ஆலமரம் தோன்றுவது போல் வேத முதலிய அனைத்தும் தோன்றலாயின.

## தணிகை புராணம் - அகத்தியர் அருள்பெரு படலம்

### ஓம்காரம்

ஓமெனும் அந்தப்பதத்தனை உரைத்தோர்
வேதமாதி களெலாம் உரைத்தோர்
தோமறும் அந்தப்பொருள் உணர்ந்தோர்
தொக்கநூற் பொருள்எலாம் உணர்ந்தோர்
ஏமுறும் அந்தப் பொருளின்றே
விரவியில் விழிவிழி யென்னக்
காமறுபொறி மற்றிருப்பினும் சற்றும்
கதிப் பரிதாகு மாதவனே

பெரிய தவத்தை உடையோனே, ஓம் என்னும் ஒலியுடைய பிரணவ மந்திரத்தை ஓதியவர் வேதம் ஆகமம் முதலிய எல்லா நூல்

களையும் ஓதியதின் பயன் அடைவர். மலமழிவதற்கு காரணமான அம் மொழியின் பொருளையுணர்ந்தவர். மற்ற எல்லா மெய்ந்நூற் பொருளை யும் உணர்ந்தவர்.

''ஆர்த்த ஓங்காரப் பொருளெனத் தோன்று
மாரியன் சைவதன் மங்கள்''

இமசத்த ஓங்காரமாகிய பிரணவ மந்திரத்தின் உட்பொருள் என்னும்படி அதிலிருந்து விரிந்து தோன்றிய சிவபெருமானால் கூறப் பட்ட சைவாகம அறங்களை சிறப்பாக அரசர்களுக்கு உணர்த்துக.

## விந்து — நாதம்

ஓர் அளவு கடந்த பெரும் வல்லமை வாய்ந்த சக்தியை பிரபஞ்சத் தையும் ஏனைய சராசரங்களையும் படைத்தாக திருமூலர் திருமந்திரத் தில் அருளுகிறார்.

ஆதிபடைத்தனன் ஐம்பெரும் பூதங்கள்
ஆதிபடைத்தனன் ஆயபல வழிகளில்
ஆதிபடைத்தனன் எண்ணிலி தேவரை
ஆதிபடைத்தவை தாங்கி நின்றாளே

இச்சக்தியை அமெரிக்க விண்வெளி விஞ்ஞானிகள் மின்சார காந்த அணு (Atoum) சக்தியென்றும் அது கட்டுக்கடங்காமல் பொங்கிவரும் முழக்கத்தை அதாவது Bing-Bang என்னும் முழக்கத்தை உண்டுபண்ணி அதன் விளைவாக பிரபஞ்சம் படைக்கப்பட்டாத கூறுகின்றார்கள். இதை அவர்கள் ராக்கட், சாடிலைட்ஸ் விடும் போது இந்த Bing-Bank சத்தத் துடன் அசாதாரண சக்தியுடன் அது எழும்பி விண்வெளிக்கு செல்கிறது என்று பார்த்து இந்த கருத்துக்கு வந்தார்கள். இதையே உண்மை விளக்கத்தில் ஆசிரியர், ஸ்ரீநடராஜ பெருமானைப்பற்றி சொல்கையில் ''தோற்றம் துடியதனில்'' என்று அருளுகிறார். துடியதனில் என்பதை நாம் உடுக்கையில் தோற்றம் உண்டாகிறது என்று எண்ணக்கூடாது. துடி நாதத்தை குறிக்கிறது. துடி — உடுக்கை

கட்டுக்கடங்காத இந்த சக்தியை சமஸ்கிருதத்தில் பிந்து என்றும், சப்த பிரமம் என்றும், சத் என்றும் வேத சாஸ்திரங்கள், உபநிடதங்கள் முதலிய ஆதிநூல்கள் கூறுகின்றன. திருமந்திரம் இச்சக்தியை விந்து என்று விளக்குகிறது.

விந்துவிலிருந்து நாதம் வெளிப்பட்டு இரண்டும் சேர்ந்து சக்கரங் களாய் திரண்டு ஆதிபொருளாய் நின்று பஞ்ச பூதங்களையும் கோடிக் கணக்கான சூரியன்களையும், சந்திரன்களையும் உருவாக்கியிருப்பது ஆதி

நூல்களும், தற்போதைய விஞ்ஞான கண்டுபிடிப்புகளும் ஊர்ஜிதப் படுத்துகின்றன. விந்து நாதத்தால் உண்டான, இச்சக்கரங்களே நமது உடலுள்ளும் ஆத்ம சக்கரங்களாய் இயங்குகின்றன. நந்தீஸ்வரர் உப தேசப்படி மனிதர்கள் இச்சக்கரத்தை சுலபமாக புரிந்து உணரும் வண்ணம் திருமூலர் ஐந்தெழுத்தாக, பதஞ்சலி பஞ்ச அக்கரமாய் தங்கள் நூல்களில் விளக்கியிருக்கிறார்கள். இவ்வைந்தெழுத்தே ஆதி பொருளாய், ஆதிபகவனாய், ஆதிபிராணாய் விளங்குகின்றது. அப்பெரும் சக்தி ஐந்தெழுத்தாலேயே அமர்ந்திருப்பதாக பின்வரும் திருமந்திரம் கூறுகிறது.

ஐந்தெழுத்தால் ஐந்துபூதம் படைத்தனன்
ஐந்தெழுத்தால் பலயோனி படைத்தனன்
ஐந்தெழுத்தாய் இவ்வகலிடம் தாங்கினள்
ஐந்தெழுத்தாலே அமர்ந்து நின்றாளே

அருணகிரி பெருமான்

'' சந்த்ர சூரியர் தாமும் அஜபையும்
விந்து நாதமும் ஏக வடிவமும்
அதன் சொரூபமதாக உறைவது...சிவயோகம் ''

என்று அருளுகிறார்

வள்ளல்பெருமான் இதை மறை பொருளாக வைத்து பாடுகிறார்-அது

'' வானத்தின்மீது மயிலாடக் கண்டேன்
மயில் குயில் ஆச்சுதடி — அக்கச்சி ''

இங்கு மயிலை விந்துவாகவும், குயிலை நாதமாகவும் வைத்து பாடுகிறார்.

வானம் — சிதாகாசம் மயில் — விந்து குயில் — நாதம்

விந்து — ஒளி நாதம் — ஒலி
மயில் ஒளியுடையது குயில் ஒலியுடையது

கீழே இருப்பது மண் — மேலே இருப்பது விண்.
இதுதான் சிதாகாசம் (சித் + ஆகாசம்)

வானத்தை அளாவி விண்ணளாவ மண்ணளாவ வானளாவ
விந்து தத்துவமும், நாத தத்துவமும் நிற்பவை
விந்து — சக்தி நாதம் — சிவம்

36 தத்துவத்தில் 1-வது — பிருத்வி (மண்)
35-வது — விந்து (சக்தி)
36-வது — நாதம் (சிவம்)

சுத்த துரியாதீத நிலையில் விந்து (சக்தி) தத்துவ அனுபவத்தை பெற்றதுதான் வானத்தின்மீது மயிலாட கண்டேன் என்பது. அவ்விந்து தத்துவ அனுபவம் மேலே நா.தத்த்துவ அனுபவமாக விளைந்ததுதான் (சக்தி தத்துவ அனுபவம் சிவ்தத்துவ அனுபவமாக) மயில் குயில் ஆனது

- தவத்திரு ஊரன் அடிகள் 'சன்மார்க்க விவேக விருத்தி'
மாத இதழில் எழுதிய கட்டுரை ஆதாரம்

பொதுவாக உலகில் ஒலியைவிட ஒளியே விரைந்து செல்லும். இடியை விட மின்னலே புலனுகிறது. இதுதான் மயில் குயில் ஆகின்ற முறை. பொற்சபையில் உள்ள வான ஜோதி சிற்சபையில் உள்ள ஞான ஜோதியாக மாறுகிறது. மூச்சாகிற வான ஜோதியே பேச்சாகிற நாத ஜோதியாக மாறுகிறது. ஒளி (மயில்) ஒலியாகிறது.

ஒலி பாம்புபோல் வளைந்து வளைந்து செல்வது என்று விஞ்ஞானம் பேசுகிறது. அதனுல்தான் சிவகாமிஅம்மன் இடுப்பருகில் ஒரு வளைவு காணப்படுகிறது. இது ஒலியை குறிக்கும்.

அருணகிரிநாதர் ''நாதவிந்து கலாதி நமோநம'' என்று பாடினது ஐந்தெழுத்தில் இயங்கும் சக்கரம் என்று தெளிவாகிறது.

மேல்வரும் விந்துவும் அவ்வெழுத்தாய்விடும்
மேல்வரும் நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரும் அப்பதி அவ்வெழுத்தேவரின்
மேல்வரும் சக்கரமாய் வரும்ஞாலமே

விந்துவும் நாதமும் இணைந்து உண்டாகும் ஐந்தெழுத்தில் இயங்கும் ஆத்ம சக்கரமே பதி. இப்பதியே உலகத்தையும், ஏனைய தோற்றங் களையும், வடிவங்களையும், உருவங்களையும் படைத்து நிற்கின்றது. நமது மெய்யுள் ஐந்தெழுத்து சக்கர சொரூபியாய் நிற்கின்றது.

'' விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விளைந்த எழுத்தது சக்கரமாக
விளைந்த எழுத்தவை மெய்யினில் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திரமாமே ''

பதஞ்சலி முனிவர் இதை பஞ்சாக்ஷர மந்திரம் என்று, யோக சூத்திரம், மகாபாஷ்யே என்னும் நூல்களில் கூறியிருக்கிறார்.

அப்பர்பெருமான் சக்கரத்தை சில்லுறு தேவாரத்தில் கூறுகின்றார்:

சில்லுறுவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவர் அறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி

போகாது என்சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய் பார்தோறும் பரந்தாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கழலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

பட்டினத்து பிள்ளையும் ''வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம்'' என்று தன்பாடலில் கூறியிருக்கின்றார்.

அகாரம், இகாரம், உகாரம், ஓங்காரம், மகரம் ஆகிய ஐந்தெழுத்தை ''ஆரும் உரையெலாம் ஐந்தெழுத்தாலே ஆரும் அறியாத ஆனந்த ரூபமாம்'' என்று திருமந்திரம் கூறுகிறது.

மக்கள் விஞ்ஞானம் வளர்ந்து ஓங்கும் இக்காலத்தில் பஞ்சாக்ஷரத்தின் மெய்ப்பொருளை, வேத தொல்பொருளை குரு மூலம் அறிந்து உணர்ந்து இவ்வுலக வாழ்க்கையை இன்பமாக வாழ்வோம் என்பதனை உணர்தல் வேண்டும்.

திருமந்திரம் 944

விந்துவும் நாதமும்மேவி உடன்கூடிச்
சந்திரனோடே தலைப்படு மாயின்
அந்தரவானத் தமும்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதியாமே

விந்துவும் நாதமும் திருவைந்தெழுத்து மந்திரத்தோடு சேர்ந்து சந்திர மண்டலமாகிய ஆயிரம் இதழ் தாமரையுள்ள தலையை (ஸஹஸ்ரஹாரம்) அடையுமாயின், நிராதாரத்தில் உள்ள தேவாமிர்தமாகிய சிவன் இன்ப ஊற்றாய் வெளிப்படுவான். அவனுக்கு அந்த இடத்தில் செய்யும் மந்திரசபமே வேள்வியாய் அமையும். விந்து நாதம் மந்திரம் ஆகாது.

இதுவரை சமஷ்டி பஞ்சாக்ஷரத்தைப் பற்றி சிந்தித்தோம். அடுத்து வியஷ்டி பஞ்சாக்ஷரத்தைப் பற்றி சிந்திப்போம். வியஷ்டி பஞ்சாக்ஷரம் என்பது ஐவகைப்படும். அவை :

1) தூல பஞ்சாக்ஷரம் — நமசிவாய — தூலம் - பருமை
2) சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் — சிவாயநம — சூக்ஷ்மம் - நுண்மை
3) அதிசூக்கும பஞ்சாக்ஷரம் — சிவயசிவ — அதிசூஷ்மபஞ்சாக்ஷரம் காரண பஞ்சாக்ஷரம் - மீநுண்மை
4) மகாகாரண பஞ்சாக்ஷரம்—சிவ —மகாகாரண பஞ்சாக்ஷரம்-முதல்
5) மகாமனு — சி — மாமுதல் - மகாமனு

அடுத்து முதலில் தூல பஞ்சாக்ஷரத்தைப் பற்றி பார்ப்போம்

அத்தியாயம் – 4

# தூல பஞ்சாக்ஷரம்

தூல பஞ்சாக்ஷரம் வியஷ்டி பஞ்சாக்ஷர வகையில் ஒன்று. தூல பஞ்சாக்ஷரம் என்பது நமசிவாய என்பது ஆகும்.

நமசிவாய என்னும் தூல பஞ்சாக்ஷரம் சமயாச்சாரியாரால் உபதேசிக்கப்பெறுவது. இம்மைப் பயனும் மறுமைப் பயனும் அளிப்பது.

நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் ஒளியுடன் கூடி
ஒகார முதற்கொண்டு ஒருக்கால் உரைக்க
மகார முதல்வன் மனத் தகத்தானே

என்னும் திருமந்திரம் நகாரத்தை முதலாக வைத்து ஓதும் வேறு முறையை கூறுகிறது. திருமூலர் சூக்கும பஞ்சாக்ஷரம் (சிவாயநம) பற்றியும் கூறுகிறார். இவ்வாறு இருவகையும் கூறும் திருமூலர் ''அதாவது நமசிவாய என்று நகர முதலாக ஓதின் கருமசித்தியைக் கொடுக்கும் என்றும் சிகரமுதலாக அதாவது சிவாயநம என்று ஓதின் ஞான சித்தியைக் கொடுக்கும் என்று அருளுகிறார்.

மேலும் தொடர்வதற்கு முன் மீண்டும் இந்த ஐந்து எழுத்துக்களின் பொருள்களை நினைவுபடுத்திக் கொள்வோம்.

ந — மாயை, கன்மம், திரோதாமை
ம — ஆணவம் - இருள் மலம்
சி — சிவன்
வா — அருள்
ய — உயிர்

திருமந்திரம் - 950

நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவில வல்லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறிதானே

நம் முதலாக ஓதும் (அதாவது நமசிவாய என) பஞ்சாக்ஷரத்துள் நாலாம் எழுத்தாகிய வகார ஓசை உலக உருவானது. ஆதலால் அவ்வெழுத்துள்ளே உலகம் அடங்கிற்று. அதனை செபிப்பவர்களுக்கு அதுவே தாரகமாய் நின்று நன்னெறி காட்டும். திருவருள் (வ) வழி காட்டவில்லையானல் நாதனை (ச) கூடுவது இயலாது.

திருமூலர் திருமந்திரத்தில் எல்லா நூற்பொருளும் அஞ்செழுத்தின் பொருளாய் அடங்கும் என அருளுகிறார்.

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தின் அடைவை அறிந்தபின்
ஐம்பதெழுத்தே அஞ்செழுத்தாமே

வேத ஆகமங்கள் ஐம்பது எழுத்தில் அடங்கும். அவைகளின் தோற்ற முறையை அறிந்தால் அவை அனைத்தும் திருவைந்தெழுத்தில அடங்கும். இவ்வைந்தெழுத்தே தூல பஞ்சாக்ஷரம் எனப்படும். இதை "நமச்சிவாய வாஅழ்க" என்னும் திருவாசகத்தால் அறிக. இவை முறையே மூர்த்தி, வாமை, ஆர்த்தி, பூரணி' ஈசானி என்னும் ஐந்து சக்திகளை உணர்த்தும். இச்சக்திகள் ஐந்தொழிலை செய்வனவாய் சத்தியோசாதம் முதலிய ஐந்து பொருள் மறைகளால் குறிக்கப்படும். இம்மறைகளுக் அ, இ, உ, ஏ, ஏ, ஹம் என்பவை வீரிய பீசங்களாகும். இவை நாதவிந்துக்களோடு சேர்க்கப்பெற்று ஹம் முதலிய வாக உச்சரிக்கப்படும்.

திருமந்திரம் :

அகாராதி ஈராறன் கலந்த பரையும்
உகாராதி தன்சக்தி உள்ளொளி ஈசன்
சிகாராதி தான்சிவ வேதமே கோணம்
நகாராதிதான் மூலமந்திரம் நண்ணுமே

அகரம் முதல் பதினாறு ஆகிய உயிர் எழுத்துக்கள் கலந்து நிற்கும் பராசக்தியும் உ முதலாகிய பிரணவம் (உ மா) ஆகும். அந்த சக்தியின் உள்ளொளியாய் முதலாய் நிற்பவன் ஈசன். அவன் திருப்பெயரை சிகாரம் முதலாக கூறும்போது அது மூன்று தொடர் ஆகி சிவத்தையும் ஏதத்தையும், கோணத்தையும் உணர்த்தும், நகார முதலாக அமைந்த வடிவு மூலமந்திரமாக மறைகளில் வரும்.

ஏதம் — ந, ம (ஊனநடனம் எனப்படும் - பின்விரிவாக ஆடல் வல்லானும் - பஞ்சாக்ஷரமும் என்னும் தலைப்பில் காண்க)

கோணம் — இரு நேர்கோடுகளின் இடைப்படும் கோணம்
— கோன்றதாகிய ஆன்மா - அது ய - ஆகும்

ம - மலமும், ந - திரோதமும் அதன்கண் அடங்கும்.

மாயை, வினைகளை உணர்த்துதலால் அவ்விரண்டின் சேர்க்கையை ஏதம் எனப்பட்டது. ஏதம் — குற்றநிலை - பிறப்புநிலை

திருவைந்தெழுத்து சூக்குமை முதலாக தோன்றி வைகரியாய் வெளிப்படும்.

திருமந்திரம் :

வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆயஇலிங்கம் அவற்றின் மேலே யவ்வாய்த்
தூயதோர் துண்டம் இருமதத்தஞ் செல்லல்
ஆயதிரும் ஐந்தோடாம் எழுத்தஞ்சுமே

திருவைந்தெழுத்து வாயை அடுத்துள்ள கழுத்து, நெஞ்சு, உந்தி, மூலம் என்பவற்றின் மேல் செவிப்புலனுகாத ஒலி வடிவாய் அடைபடாத மூக்கு முதல் தலை ஈராகக் கூறப்படும் ஐந்திடம் உற்று வைகரியாய் வெளிவரும்.

மேல்ஏய் அவ்வாய் எனப் பிரிக்க

அ — ஆதி அகரம் எனப்படும் நுண் ஒலி

அது மூல முதல் உந்தி வரை சூக்குமையாய் (பரை எனவும் சொல்வது) உந்தி முதல் நெஞ்சுவரை பைசந்தியாய், நெஞ்சு முதல் கழுத்து வரை மத்திமையாய் அரும்பி மலர்ந்து காய்ந்து வரும்.

பின் வைகரியாய் கனியும்.

இலிங்கம் — தன் மேல் உள்ள மூலத்தைக் குறிக்கும்.

வாய் — அன்னதநின் அடி

மத்தகம் ஈராகிய ஐந்து இடமான மூக்கு, இதழ், பல், நா, தலை என்பவை.

திருமந்திரம் - 2773

விளக்கைப் பிளந்து விளக்கினை ஏற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினை தூண்டி
விளக்கில் விளக்கை விளக்க வல்லார்க்கு
விளக்குடையான் கழல் மேவலும் ஆமே

ஒருவன் அறிவுக்கு விளக்கு போன்று உதவும் மாயை காரியங்களை பற்றுது நீக்கி, நல்லக விளக்கு ஆகிய திருவைந்தெழுத்தினை உள்ளத்தில் விளங்கச் செய்து அதன் பொருளைச் சிந்திக்கும் ஆற்றலால் அறிவொளியாகிய ஆன்மாவின் கண் மறைந்துள்ள திருவருள் ஒளியை மேம்படச் செய்து அவ்வுயிருக்குயிராகிய திருவருள் ஒளியை விளங்கச் செய்து கொள்ள வல்லார்க்கு அத்திருவருளுக்கு முதலாகிய சிவபெருமானது திருவடி எனப்படும் பேரின்ப சக்தியை நுகர்தல் கூடும்.

விளக்குகள் விளக்கை தூண்டுவது தவம் எனவும், விளக்கில் விளக்கை விளக்குதல் யான், எனது அற நிற்றல் எனவும் காண்க.

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே

திருமந்திரம் - 2649

ஒன்று கண்டேன் இவ்வுலகுக் கொருகனி
நன்று கண்டாய் அது நமச்சிவாயகனி
மென்று கண்டால் அது மெத்தென்றிருக்கும்
தின்றுகண்டால் அது தித்திக்கும்தான் அன்றே

இவ்வுலகுக்கு ஒப்பிலாத ஒரு கனி கண்டேன். அக்கனி தீயதில்லாத நன்றுடையதாகும். அக்கனியின் பெயர் நமச்சிவாய ஆகும். அத்திருக் கனியினை உணர்வின்கண் கனித்தலாகிய மெல்லுதலை செய்வார்க்கு அது அனிச்ச மலரினும் மெல்லிதாக அமைந்திருக்கும் அதன்கண் அழுந்தியறி தலாகிய தின்றலைக் கண்டார்க்கு தெவிட்டாத இனிப்பாய் சிறப்பாய் விளைந்து தித்திக்கும். தின்றல் — அழுந்தியறிதல் - அனுபவித்தல்

அப்பர் பெருமான் :

நமச்சிவாய வென்பார் உளரேல் அவர்
தமச்சம் நீங்கத் தவநெறி சார்தலால்
அமைத்து கொண்டதோர் வாழ்க்கையாகுலும்
அமைத்து நிற்பது சாலை அறியதே

நமச்சிவாய என்று ஓதுபவர்கள் அச்சம் நீங்கி தவநெறி சார் வார்கள். அமைத்துக் கொண்ட வாழ்க்கையில் எப்படியாகிலும் அதில் ஊன்றி அழுந்திய பந்தம் நீங்குவது அரிது.

எழுத்துக்கள் உறுப்புகளாக பொறுந்தியிருப்பது :

அகாரம் திருமுடி ஆகாரம் நெற்றி
இகாரம் வலக்கண் ஈகாரம் இடக்கண்
உகாரம் வலச்செவி ஊகாரம் வாமம்
ருகாரம் வலமூக்கு ரூகாரம் வாமமே

51 உறுப்புகளில் இடம் பெற்றிருக்கும் 51 எழுத்துக்களை கூறத் தொடங்கும் திருமந்திரச் செய்யுளின் எண்ணும் 51 ஆக இருப்பது விசேஷம். இதர எழுத்துக்களுக்கு மற்ற தொடர்ந்த திருமந்திரத்தில் காண்க.

— அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு
சித்தாந்த புலவர் திரு. ந. சிவப்பிரகாச தேசிகர்
திருமந்திரமாலை முன்னூறு என்னும் நூலில் காண்க

மந்திரம் : மந்திரப் பொருள்வயின் 'ஆ, அ, வு, நம்-கு'—தொல் 931

மந்திரத்தை உடைய தெய்வங்களிடத்தே அம்மந்திரமாய் வரும் சொற்களும் மந்திரச் சொல். மந்திர நூல்களில் கேட்டு உணர்க. மந்திரம் என்பது பிறரறியாமல் தம்முள்ளே அறிய மறைத்து கூறும் சொல். மந்திரம் என்பது வடமொழி சொல்.

மநசாத்ராயதே இதி - மந்த்ர : — மனதில் உச்சரிப்பது மந்திரம்

மண்ணைச் சுமந்தவன்றானும் வரதராஜன் மகன்றானும் எண்ணிய
வரகாலி மூன்றும் இரண்டு மரமும் ஓர்யாறும் திண்மை
அறிய வல்லார்க்குச் சிவகதியைப் பெறலாமே

இதனில் :

| | | |
|---|---|---|
| மண்ணைச் சுமந்தவன் | — | ந |
| வரதராஜன் மகன் | — | ம |
| வரகாலி மூன்று | — | சி |
| இரண்டு மரம் | — | வா |
| ஓர் யாறு | — | ய |

எனக் கூற நமசிவாய பொருளாயிற்று. அதை அறிந்தவர்கள் சிவகதி பெறுவார்கள். இது திண்ணம்.

தேவார திருப்பதிகங்களில் காணுவதை சுருக்கமாக இங்கு குறிப்பிடப்படுகிறது.

" உலகுக்கெல்லாம் நம்பம் நாமச்சிவாயவே "

" நமச்சிவாய எனும் சொல் சிந்தையால் மகிழ்ந்து
ஏத்தவல்லார் எல்லாம் "

" குலமியராகிலும் குலத்துக்கேற்பதோர்
நலமிக கொடுப்பது நமச்சிவாயவே "

" அடைந்தவர்க்கெல்லாம் - நன்னெறியாவது
நமச்சிவாயவே "

என்று தேவார திருப்பதிகங்களில் நமச்சிவாயவைப்பற்றி அருளப்படுகிறது.

பெரிய புராணம் :

நமச்சிவாய திருப்பதிகத்தை அங்கண்வானமும்
நிலனுங்கேட்க அருள்செய்து இம்மணத்தில் வந்தோர்
ஈனமாம் பிறவிதீற யாவரும் புகுக என்க.

# காழிக்கண்ணுடைய வள்ளலார் பஞ்சாக்கரமாலை

அகராதியீ ரெட்டாமச் சொழித் தைந்தாம்
உகராதியை நான்கு ஒன்றெழுன் றுங்கராதி
சுன்மூன்று நீக்கி நமச்சொல்லி மகராதிபத்தி
னன் மூன்றுலந் செழுத்தா நன்கு

அகார உகார மகாரங்களிடத்திற்றோற்றப்பட்ட ஐம்பத்தோரக்ஷரத்திலும் பிரமாவினுடைய வங்கிசமாகிய அகரத்திற்றோன்றிய அச்சாகிய பதினாறு எழுத்தையும் கீழாக சுழித்து உகாரத்திற்றோன்றிய இருபத்தஞ்சு எழுத்தாகிய கவர்க்கம் நான்கும், சவர்க்கம் நான்கும், தவர்க்கம் நான்கும், பவர்க்கம் நான்கும் ஆக இருபது எழுத்தும் ங, ஞ, ண, ந, ம வாகிய சுண்ணெழுத்து ஐந்தும் ஆக இருபத்தி ஐந்தெழுத்தும், விஷ்ணு வங்கிசமாகிய உகாரத்தில் தோன்றினமையால் இதுவும் கீழாகத் தள்ளிச் சிவனை நமஸ்காரம் பண்ணுதல் விஷ்ணுவுக்கு தொழிலாகையால் சுண்ணாகிய எழுத்தஞ்சில் ஙகார ஞகாரணகாரமாகிய மூன்றெழுத்தையும் நீக்கி நகார மகாரமாகிய இரண்டு எழுத்தையும் கூட்டி 'நம'வாக்கி அப்பால் ருத்ராங்கிசமும் மகேஸ்வராங்கிசமும் சதாசிவாங்கிசமும் விந்து நாதமுமாகிய மகாரத்தில் தோன்றிய எழுத்து பத்தினும் சிகார வகார யகாரங்களாகிய அக்கரங்களை கூட்டிச் சிவாய என வைத்து நமசிவாய எனச் சிவனையும் சிவனை நமஸ்காரம் செய்வாரையும் காட்டியது.

5) மண்ணீர் அனல்நிலம் வான்கந்த மாதிகுணம்
எண்ணீர் ஐந்தாமிந்தியங்கடினம் — முண்ணெகிழ்ச்சி
வெம்மை சலிப்பு வெளிகுணியே தானாக
நம்முதலாய் நிற்கும் நயந்து

பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் ஐந்திலும் இவைகளுக்கு குணமாகிய கந்தம், இரதம், ரூபம், ஸ்பரிசம், சத்தம் ஐந்தும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், கடினம், வெம்மை, நெகிழ்ச்சி வெம்மை, சலிப்பு, வெளியாகிய பூதகுணி ஐந்துமாகிய இவைகளை சேர்த்து செயல்படுத்துவன் நகர முதலாகி தூல பஞ்சாக்ஷரத்தால்.

10) சேர்த்த நிவர்த்தி பிரதிட்டை திகழ்வித்தை
சாந்தியுடன் சாந்தீயாதீதகளை — சேர்ந்த
கருமந்துலையொப்பு காணுமளவும்
தரும் நகார முதற்றான்

பாடம் — தரும் அந்நகாரமுதற்றான்

பிருதிவி தத்துவம் முதலிய ஐந்து தத்துவங்களும் இடமாக கட்டு பட்ட கன்மம் முறையே நிவிருத்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்திய தீதாகலையும் ஆகிய பஞ்ச கலைகளிலும் ஆன்மாவுக்கு செய்த கன்மங்களுக்கு சேர்த்து கன்மம் துலையொக்குமளவும் இவைகளை நிவிருத்தியாகலை முதலாக நகாராதியான தூலபஞ்சாக்ஷரம் நின்று நடத்தும்

11) சாக்கிரமே யாதிதரும் அவத்தை ஐந்தினையும்
நீக்கவரும் சுத்த நிகழ் கருவியாக்கிடும்
மேலாலவத்தைவர மேவிஉணர்விக்கும் அதன்
பாலா நகராதி பண்பு.

மேற்படி வீதம் இப்படிப்பட்ட பஞ்ச தத்துவங்களை கொண்டு சாக்கிரம் முதலான ஐந்தவத்தைகளையும் தரிசித்து அவ்வளவிலே நின்றால் அத்தவித்தை முதலான ஐந்து தத்துவங்கள் இடமாக நின்று நகராதியான அஞ்செழுத்தென்னும் தூல பஞ்சாக்ஷரம் பந்முத்திகளை கொடுக்கும்.

12) வரும் சத்தியோசாதம் வாமம் அகோரம், தற்
புருடத்தோடு ஈசானம் போற்றக் - கருமப்
பரிபாக நோக்கி படைப்பாதி சத்தி
தெரிவா நகாராதி சேர்ந்து

சத்யோசாதம், வாமம், அகோரம், தத்புருடம், ஈசானம் ஆகிய இறைவன் ஐந்து திருமுகங்களிலும் ஆன்மாக்களுக்கு கன்மக்காரியம் பிறக்கும் அளவும், சிருட்டி. திதி, சங்காரம், திரோபவம் அனுக்ரஹமாகிய பஞ்ச கிருத்யங்களை செய்விக்கும் பஞ்ச சக்திகளை அதிட்டித்து கொண்டிருப்பன நகாராதியான தூல பஞ்சாக்கரம்.

13) கன்ம சாதாக்கியத்தில் கர்த்திரு சாதாக்கியத்தின்
நன்மைதரு மூர்த்தி மூர்த்தங்களான நன்மையுறுசெய்த
சாதாக்கியத்தில் சேர்சிவ சாதாக்கியத்தில்
எய்து நகாராதி கடாஎனெண்.

பீட லிங்கமாய் அஞ்சுமுகமான கன்ம சாதாக்கியத்திலும், நாலு முகமாகிய பீடமில்லாத இலிங்க சொரூபமான கர்த்திரு சாதாக்கியத்திலும், சோதிலிங்கமான அமூர்த்தி சாதாக்கியத்திலும், ஞானமயமான சிவ சாதாக்கியத்திலும் நிற்பன நகாராதியான தூலபஞ்சாக்கரம்.

14) பன்னுவியோ மாத்திரமும் பாசுபதாத் திரமும்
முன்னுவ கோரத்திர மொண்சுரிகை - யென்னவரு

மாத்திரமுமன்னு சிவவத்திரமும் நம் முதலாய்ச்
சத்தியமா திக்குள்ளாந்தான்

மேற்படி சத்தியோசாதம் முதலிய ஐந்து திருமுகங்களின் நின்ற வியோம அத்திரமும், சிவாத்திரமுமாகிய ஐந்து அத்திரத்திலும் நகாராதியான தூல பஞ்சாக்கரம் நிற்கும்.

15) சேர்த்த இதயம் சிரசு சிகை கவச
நேத்திரம்மென்றைந்தாகி நின்மலமே - யார்த்துளதாம்
அங்கங்கள் ஐந்தாகி யணுவாகி போகம் அவை
தங்கு நகராதிகளால் தான்

இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம் என்னும் ஐந்தும் திருமேனியாக நின்ற அங்கங்களை தியானம் செய்து அந்த நிலையைப் பெற்ற அனு சதாசிவனர் இருதயம் முதலிய மேற்படி ஐந்திற்கும் அக்கினி திக்கிலும், ஈசான திக்கிலும், நிருதி திக்கிலும், வாயு திக்கிலும் ஈசான திக்கிலும் மேற்கிலுமாக சதாசிவ மூர்த்தியை போகாங்கமாக செபித்திருப்பாராகையால் அந்த இருதயாதி ஐந்திடத்திலும் நகாராதியான தூல பஞ்சாக்கரம் பஞ்சானுக்ரகத்தை பண்ணி நிற்கும்.

18) படைத்தும் அவையளித்தும் பண்ணியவை யெல்லாந்
துடைத்து மறைந்து யர்நின்றெடுத்து
மொழியாத ஐந்தொழிலும் உய்ந்திடு நவ்வாதி
மொழியான அஞ்செழுத்து முன்

ஐந்தொழிலையும் நகாராதியான தூல பஞ்சாக்கரம் ஐந்தும் நடத்தும்

19) பிராணாதி காலைந்தும் போதித்து நிற்கக்
கிராணாதி யைந்தினையுங் கிட்டித் — திராணமெனும்
கந்தாதி ஐந்தினையு நாகாதிகால் கொள்ளும்
உய்ந்தே நகாராதியுற்று

பிராணன், அபானன், உதானன், வியானன், சமானன் என்றும் ஐந்து வாயுக்களும் தேகத்திலே ஒவ்வோர் இடங்களைப் பற்றி நிற்க. நாகன், கிருகரன், கூர்மன், தேவதத்தன், தனஞ்செயன் என்னுமிவை ஐந்தும் ஆக்கிராணம், சிங்க்ஷுவை, சட்சு, தொக்கு, சோத்திரம் இவைகளில் நின்று கந்தம் ரசம் ரூபம் பரிசம் சத்தம் இவைகளை கிரகிக்கத் தக்கதாக நகாராதியான தூல பஞ்சாக்கரம் இயைந்து நிற்கும்.

20) வித்தைகலை யோடிராக மிகுசுத்த
வித்தை முதன்மூன்றியற்ற வித்துமுதல் — உய்த்திடும்போர்ய்

மாயை நியதியைப்பின் மன்னுதுடி மானையிவற்
றேயு நகராதி கடானீங்கு

வித்தியா கலாதி அராக தத்துவங்களையும், சுத்த வித்தையும் மயேசுரமும் சதாக்கியமும் சேட்டித்து ஆன்மாவினிடத்தே ஞானத்தையும் இச்சையையும், கிரியையும் எழப்பண்ணி விந்துவானது அசுத்த மாயையும் நாதம் நியதியையும் காலத்தையும் புமானாகிய புருடனையும் சேட்டிக்க நகாராதியான தூல பஞ்சாக்ஷரம் ஐந்தும் சுத்தை, வித்தையாதியான சிவதத்துவம் ஐந்தினும் நிற்கும்.

21) தானில்லை முன்னைத்த மயில்லை மன்னுமிறை
யோனில்லை சத்தியெனு மொன்றில்லை — மானில்லை
யென்ற முதல் ஐந்தின் இழப்பதுவே பெத்தமென
நின்ற நகாராதி கடா நேர்ந்து

பெத்த பஞ்சாக்ஷரத்தையும் சரித்து நின்றதனால் நவ்வென்னும் எழுத்தில்லையென்றும் பொருளைச் செய்வதாக கண்டு தானும்தான் சேட்டிக்கின்ற ஆணவமும், அந்த ஆணவம் இழப்பித்த சிவமும், அருளும் இந்த வேறுபாடுகளெல்லாம் அற மயங்கின் ஆன்மாவும் அறச் சர்வ சூனியம் பண்ணுதலால் நவ்வாகியதானில்லை, மவ்வாகிய மலமில்லை, சிவ்வாகிய சிவம் இல்லை, வவ்வாகிய அருளில்லை, யவ்வாகிய ஆன்மாவில்லையென ஆக்கின. நகாராதியாகிய தூலபஞ்சாக்ஷரம் நின்ற முறைமையும் இவ்வாறும்.

இத்தூல பஞ்சாக்ஷரத்தை வடமொழி பண்டிதர்களின் சில வியாக்கியானங்களையும் சிந்தித்தால் அவர்கள் கருத்தும் என்ன என்பது தெரியும். தமிழில் இதுவரை நாம் பஞ்சாக்ஷரத்தில் ஒவ்வொரு எழுத்தும் ஒரு பொருளைக் குறிக்கிறது என்று பார்த்தோம். வடமொழியில் சிவாய நம என்றால் சிவனை நமஸ்கரிக்கின்றேன் என்று பொருள் படும். இதை

**ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம்**

பிரம்மாரிஷ்ட பண்டித ஸ்ரீலஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகளால் இயற்றப்பட்ட பஞ்சாக்ஷர மகாமந்திரார்த்தம் என்னும் நூலில் காண்க

இங்கு சில கருத்துக்கள் மட்டும் கொடுக்கப்பட்டுள்ளது.

**ஓம் நம சிவாய:**

நமவெனறி யாகத்திற்கா நற்சுகஞ் சிவவென்றற்காம்
அமைபயனுரு பிற்காகுமற முதற் சித்திக்காகச்
சுமண சம்பத்திராதி துயர்தரு தேகமாதி
இமிழொடு மளிக்கின்றேன வென்னலா மந்த்ரார்த்தம்

நம என்னும் சொல்லிற்கு தியாகம் அர்ப்பணம் என பொருளாகும். சிவாய என்னும் சொல்லில் சிவனெனும் பகுதிக்கு ஆனந்தம் பொருளாம். சுகவடிவ முத்தியின் பொருட்டு உடல் பொருள் ஆவியெல்லாம் ஒப்புவிக்கின்றேன். அதாவது உடலாதியிலுள்ள யான் எனது எனும் அபிமானத்தை விடுகின்றேன்.

நம என்றால் தியாகம் என்ற பொருளில் வருதல்.

''ஏதத் தோன்னம் ஸோபகரணம் நம:''

உபகரணங்களோடு இவ்வண்ணத்தினை அளிக்கின்றேன் என்ற கர்ம காண்ட சாஸ்திர பிரயோகத்தால் காண்க :

குறிப்பு : இதை கூர்ந்து சிந்தித்தால் Complete Surender to God என்ற பொருளை குறிக்கும்.

சிவாயவென்பத னருத்தம் சிவத்தினுக் கென்றலாகும்
அவாவுறு தேகமாதியச் சிவத்தினுக் களித்தல்
பகரநம வென்றதற்காகும் பகுத்திவை யீந்தபோதே
அவாவிலச் சிவமாய் நிற்பனந் நியவனுவதில்லை

சிவாய — சிவமாகிய பரமாத்மாவிற்கு
நம — தேகாதிகளை ஒப்புவிக்கின்றேன்

குறிப்பு: Complete Surender is God.

ஓதியநமவென் சொல்லிற் குருவணக்க மர்த்தமாயின்
தீதிலாச் சித்திஞெப்தி சேவையேமெனு மத்தைன்யம்
கோதிலா தெய்ததற்காகக் குறைவிலா வணக்கஞ்செய்வேன்
சேதன சிவத்திற்கென்ன றெரித்திடும் பொருளதாகும்

சிவாய - சிவத்திற்கு, நம - சித்தி, சேவை ஞெப்தி என்பதான தைனியத்தினை பெறுதற்பொருட்டு வணக்கமுளதாகுக. அதாவது இகபர ஐஸ்வரியமாகிய சித்தியெனும் தைனிய லாபத்தின் பொருட்டாவது அல்லது பக்தியெனும் சேவையாகிய தைனியம் பெறும் பொருட்டாவது அல்லது ஆத்ம சொரூப சாக்ஷாத்கார வடிவ ஞானமென்னும் ஞெப்தியாகிய தைன்ய லாபத்தின் (முக்தியின்) பொருட்டாவது சிவத்திற்கு வணக்கம் செய்கிறேன் என்பது பொருளாம்.

தீதிலாச் சிவாயவென்றல் சிவத்தினுக் கென்பதாகும்
ஓதிடுநமவென் சொல்லுக் குறுபொருள் வணக்கமாகும்
தீதுறு அகந்தை போக்கிச் சிவத்தினிலடங்கருனே
ஓதிலாவிதனுக் குற்றவின் பொருளாகு மென்றே

சிவாய — சிவத்திற்கு நம — நமஸ்காரம்

அதாவது வித்தையான அகங்காராதி நீத்து அச்சிவத்திலடங்க லாகிய வணக்கம் செய்கின்றேன் என்பது பொருள்.

ஏதமில்சிவாய வென்றல் எழிற்சிவத்தினுக் கென்றாகும்
ஓதுறநம எனும்சொல் ஒருமையை உணர்த்தா நிற்கும்
ஆதலினால் வேறின்றி அச்சிவமாவேன் என்ன
வீதுமாவாக்கியங்கள் இயம்பும் அப்பொருளைக் காட்டும்

சிவாய — சிவத்திற்கு     நம — கற்பிதமில்லாத அபேதனாகின்றேன்

அதாவது அச்சிவமே ஆகின்றேன் என்பது பொருள்

சிவாயநம என்பதற்கு சிவமதாம் எனக்கென்றர்த்தம்
அவாவிடு தேகமாதியநிய மொன்றில்லை யென்னல்
பகாநச் சொற்பொருளாம் இந்தபான்மையால் சிவனுமெற்குத்
தகாவுலகில்லை யென்னல் சமைந்த நற்பொருளாங்கானே

சிவாய — சிவமாகிய

ந — அஞ்ஞானத்தினால் அந்நியம் போல் தோற்றும் இத்ரேகாதி எப்பொருளும் இல்லை.

ம — மம (எனக்கு)

சிவமாகிவிட்ட யானொருவனே உளன் அஞ்ஞனத்தால் இத் தேகாதிகள் தான் என்று எண்ணிக் கொண்டிருந்தேன்.

வடமொழியில் மம என்னும் சொல் ம என சந்தசு நோக்கித் திரிந்ததென்பர் வேத வியாசர்.

மசனமாம் விகாரமாகும் என்னும் அச்சொல்லிற்கஃது
நிசஉறுவினுக்கின்று என்னநீக்கிடு நஞ்ஞிடைச்சொல்
வசமுறு முலக ரூபமருவிய சிவனுக்குகந்த
மசனம் திலாமையார் பேர்வந்தது நமசென்றிங்கே

'ம' - என்பது மசனம் அதாவது பரிணமம். அந்த பரிணமம் 'ந' - (நத்ர) என்பதனால் நிஷேதிக்கப்படுகின்றது.

பொருள்: நீ என்னுள் இருந்தும் என் அவித்தையினால் வெளிப்படாமல் இருந்தாய். இப்போது ஞானத்தினால் என் அவித்தையை நீக்கி வெளிப்படுவாயாக என்னும் பொருள் பெறப்படுகிறது

சிவனெனும் சொல்லிற்கு இங்குசிறந்த முச்சத்தியோடு
சிவனாறு பிரமனாதிசெப்பு மூவடி விற்றென்றும்
நவையிலாத் துரியமான நற்பரம் பிரமமென்னும்
எவமினிர்க்குணமாம் வத்துமென்றுமே பொருளாங் கண்டீர்

சிவன் (சிவ) என்பது சிருஷ்டியாதி மூன்று சக்திகளோடு கூடிய பிரமா முதலிய வடிவனது. அல்லது துரியமேயாகிய நிர்க்குண பரப்ரம்மம் என்றும். நம (நமர்) என்பது நமனமாகிய தியானம் ஆகும். சிவாய - சிவதாதான்மியம் பெருதற் பொருட்டு என்பது பொருளாம். இதனுல் சிவதாதான்மியம் பெறும் பொருட்டு என்பது தியானம் செய்கின்றேன் என்பது ஆகிறது. நான் சிவம் என்னும் வடிவினன் ஆதல் வேண்டும். மத்திமாதிகாரிக்கு தாசன் நான். நான் தாசன் என்னும் வடிவினதாம். ' மீளா அடிமை உனக்காளாயினேன்'' என்னும் தேவாரத்தை வைத்து சிந்திக்க.

'' மானநமவன் சொல்லிற்கு வணக்க மதுடையானென்றும்
ஆனவையெலாம் அழிப்போனும் சிவனென் றற்கர்த்தம்
ஏனைய வயவென்றற்கோவே குகவென் பதர்த்தம்
ஈனமில் சிவவென்றற் கவ்வீசனை விளித்தலாகும் ''

நம என்பதற்கு வணக்கம் செய்யும் உபாசகனென்பதும், சிவன் என்பதற்கு யாவும் சென்று ஒடுங்குமிடமாகிய சங்காரகர்த்தா என்பதும், அவ என்பதற்க அடைவாயாக என்பதும் பொருளாம்.

ஆகலே இதனுல் சங்காரகர்த்தாவாகிய சிவ; நமஸ்கார கர்த்தா வாகிய யான் உனது தாசன் என்று மதித்து, ஆத்ம சொரூப வடிவ ஞானம் கொடுத்தலால் என்னை ஆத்ம சொரூபமாக்குக எனப் பெறப் பட்டது. ''சங்காரகாரனே முதல்வன்'' என்னும் சிவஞான போதத் தில் காண்க.

'' எதிலெலாம் ஒடுங்கும் அந்தவியல் பிரகிருதிதானே
முதன்மையாம் சியெனும் சொற்குமொழி பொருளவ்வியத்த
மதனின்று உலகுதோன்ற அளித்தயேவ வெனற்கர்த்தம்
இதுதனை விரியச்செய்வோ யென்றலால் சிவவென்றற்கே ''

சி (சி) — பிரகிருதியாகிய அவ்வியக்தம்

வ (வ) — அதனை விரித்து வெளியாக்குதல்

சிவன் — அவ்வியக்தமாகிய பிரகிருதியை வியக்தமான விகிருதிகளாக செய்பவன்

மா (மா) — ஞானமாகிய லக்ஷ்மி ந — இல்லை

நம — மா என்னும் இல்லாதவன் - அதாவது வித்யா லக்ஷ்மி இல்லாதவன்

அஞ்ஞானி — ஞானம் இல்லாதவன்

அய (அய) — இலக்ஷ்மீசா - அவ்வித்யா லக்ஷ்மியை என்னிடம் சேர்த்து ஞானம் அளிப்பாயாக

பிரகிருதியை வியக்தமாக்கும் ஈசனுகிய சிவனே, ஆத்மஞான லக்ஷ்மியில்லாத தரித்திரன் யான். ஞான ஐஸ்வரியமுடைய நீ எனக்கு முக்காலத்தும் ஆன்ம வித்தையாகிய சாம்ராஜ்ய லக்ஷ்மியை தந்தருள் வாயாக என்பது பொருள்.

சிவாவெனல் பிரமஞானச் சிவையெனும் சத்திக்காகும்
அவாவுறும் மயனென் சொல்லிற்கடைந்த வனென்னலர்த்தம்
சிவாயவென்ன வ்வினிக்குச் சிவையினை யடைந்தோயென்றும்
தவாநம சொற்குமாயா சத்தியத்தில் லோமென்றும்

சிவா + அய = சிவாய

சிவை என்னும் சத்தியாகிய பிரம்ஹ வித்தையினை பெற்றுள்ளவனே மாயை எனும் அவித்தையினுல் மாவெனும் வித்தியாலக்ஷ்மி இல்லா திருப்பதால் நமன் (நம:) எனப்படுவோனுகிய நான் வித்தையில்லாத வனும், வித்தையின் வித்தையில் விருப்பமுள்ளவனுக இருக்கின்றேன். ஆதலால் எனக்கு அந்த வித்தையை அருளி அந்த மச் (ம) எனும் சொல் லிற்கு பொருளாகிய விகார வடிவ தேகாதி பிரபஞ்சத்தினை சிவாயம் (சிவமயம்) ஆக்குக. அதாவது எவ்விதத்திலும் உன்னின் வேருக தோற்றுமல் உனது சொரூபமாகவே (சிவஸ்வரூபமாகவே) விளங்கும் படி செய்க.

'' இன்புறு யகாரம்ஆன்மா வியல்திரோ தையாமகார
வன்கணு வாரணந்தன்னை மருவியம் மாயையான
புன்கணமல நகாரம் பொருந்தியே துன்பம்எய்தும்
நன்குறு புண்ணியத்தால் நாடுவன் அருளாம்சிந்தை ''

'' துங்கஅவ் வகாரசித்தால் துயர்தருதி ரோதைநீங்கி
பங்கமார் மலமும்மாயப் பகர்சிவ சிகாரமாகும்
எங்குமார் சத்துரூப வியல்புகளைப் பெருவானென்றல்
புங்கஇம் மந்திரத்தின் பொருளதா நன்றுகாணே ''

பொருள் : நகாரம் மாயை என்னும் மலம். மகாரம் ஆவரமென்னும் திரோதையாம் வகாரம் அருளென்னும் சிற்சத்தியாம். சிகாரம் சத்து ரூபமான சிவமாம்

இதனுல் யகாரமாகிய சீவன் மகாரமாகிய ஆணவத்தால் நகார மாகிய மாயையில் கட்டுண்டிருந்து உத்திருஷ்ட புண்ணியவாசத்தால் வகாரமாகிய அருளை நாட அதனுல் நகார மகாரங்களான மலமாயை கள் ஒழியப் பெற்று சிவத்தை நோக்கி அச்சிவத்தோடு அபேதமுற்று நிற்பன். இது அல்லாமல்,

" மத்யேசிவஸ்தத: சீக்தஸ்தத ஆத்மேதி ஹிஸ்ம்ருத:
தத்பூர்வபந்தக: ப்ரோக்த: தத்பூர்வம் தந்திவாரகம் "

பொருள் :

ஐந்தெழுத்தில் (நமசிவாய) மத்தியிலுள்ள சிகாரத்தில் சிவன் என்பதும், அதன் பின்னால் உள்ள நான்காம் எழுத்தாகிய வகாரத்தில் சக்தி என்றும், பின் ஐந்தாவது எழுத்தாகிய யகாரத்தில் அணுவாகிய ஆன்மாவென்பதும், அச்சிவத்தின் முன்னிருப்பதாகவும் இரண்டாவது ஆனதுமான மகாரத்தில் பந்தத்தை செய்வதான மலம் என்பதும் அம்மகாரத்தின் முன் நிற்பதான நகாரத்தில் அம்மலத்தினை பரிபாக பூர்வமாக நிவர்த்திப்பது. சிவன் தன் சக்தியினால் சீவான்மாவை மும் மலத்தினின்றும் நீக்குகின்றான்.

" தருநகாரம் விசுவனுகுஞ் சார்மகாரம் தைசசனுகும்
தொகுயகாரம் பிராஞ்ஞனுகும் துரியசாட்சி வகாரசித்தாம்
மிகுசிகாரம் துரியாதீத மேவுசிவ சத்தேயாம்இத்
தகுமுறையால் பிரணவத்தின் சாற்றுபொருள்
இதற்குமாகும் "

பொருள் :

நகாரமாகிய ஜாக்கிரா பிரமாணத்தையும், மகரமாகிய சொப்பனு பிமானத்தையும், யகாரமாகிய சுழுத்தி அபிமானத்தையும் விட்டு இவற்றை அறியும் சாக்ஷி நானென்னும் விருத்தி வடிவ வகாரமாகிய சித் ரூபத்தினையும் விட்டு சிகாரமாகிய சிவ சத்தாகியிலகல் வேண்டும் என்னும் பிரணவத்தின் விரிவாகிய இப்பஞ்சாக்ஷரத்திற்குமாம்.

வகாரம் துரியமாம் சிகாரம் துரியாதீதமாம்

சிவவெனல் நற்பதார்த்தம்: சீர்நமதுவம் பதார்த்தம்:
அயவெனல் அசிபதார்த்தம்: இம் முறையினலே
சிவமது நீயேயென்று தெரித்திடும்: பஞ்சாக்கரந்தான்
பவமொழியிந்த மந்த்ரம்பகர் மகா வாக்கியங்காண்

பொருள் : சிவ + அய + நம : = சிவாயநம :

சிவாயநம: என்பதில் சிவ என்பது தத்பதார்த்தம். நம என்பது துவம்பதார்த்தம். அய என்பது அசிபதார்த்தம் ஆகும். இதனால் தத் பதலக்ஷியார்த்த பிரம்மமாகிய சிவம், துவம் பதலக்ஷியார்த்த சீவ சாக்ஷியாய் நீயாகின்றாய் என்பதும் சித்திக்கின்றது.

சிவம் — தத் நம — த்வம் அய — அசி

தத் த்வம் அசி — அது நீயாகின்றாய்

இதனால் பஞ்சாக்ஷரம் மகாவாக்கியம் ஆகின்றது.

என் குருநாதர் எனக்கு தியானப் பயிற்சி அளிக்கும்போது கீழ் வருமாறு செய்யும்படி உபதேசம் செய்தருளினுர்கள். அது :

"நான் இந்த உடம்பு நானல்லேன், கரணங்கள் நானல்லேன், அந்த கரணங்கள் நானல்லேன் என்று எல்லாவற்றிலிருந்தும் நீங்கி நான் சிவம் ஆய்விட்டேன், நான் சிவமாய் விட்டேன் என்று தியானம் செய்ய வேண்டும். அந்த உணர்வு வந்த உடனே உன்னுடைய மூச்சு தானுக நிற்கும். ஆனுல் மறுபடியும் நான் என்கின்ற உணர்வுக்கு திரும்பும்போது மூச்சு மறுபடியும் வரும். இதை நான் செய்து பார்த்து அனுபவத்தில் கண்டேன். ஆனுல் அந்த சிவோஹம் (நான் சிவம் ஆய் விட்டேன்) உணர்வை நிலை நிறுத்துவது கொஞ்சம் கடினம்தான். நம் ஊசலாடும் மனது அதில் நின்று அடிக்கடி திரும்பி விடுகிறது. ஆனுல் உணர்விலே நிலைத்திருக்கப் பயிற்சி இடைவிடாமல் செய்து வந்தால் சிவமாக நிலைப்பது முடியும் என்பது தெளிவு."

அப்பர்பெருமான்:

தந்தையார் தாய்யார் உடன்பிறந்தார்யார்
தாரமார் புத்திரர்ஆர் தாந்தாமாரே
வந்தவா றெங்கனே போமாறேதோ
மாயமாம் இதற்குஏதும் மகிழவேண்டாம்
சிந்தை யீருமக்கென்று சொல்லகேண்மின்
திகழ்மதியும் வாளரவும் திளைக்குஞ்சென்னி
எந்தையார் திருநாமம் நமச்சிவாய
என்றெழுவார்க் கிருவிசும் பிருக்கலாமே

இத் திருத்தாண்டகத்தில் சுற்றத் தொடர்பால் மயங்காது இறைவனது திருவைந்தெழுத்தை மனம் பற்றி ஓதுமாறு அறிவுறுத்தி அருளுகிறுர்

குரு நமச்சிவாய தேவர் :

" ஈட்டிய பொருள்போல் உந்தன்
இணையடி பணிவார் துன்பம்
வாட்டிய செம்பொன் மேனி
வள்ளலே நமச்சிவாயவே "

என்று இறைவனை நமச்சிவாய என்று குறிக்கின்றுர்

பின்வரும் பகுதிகள் ஞானவல்லி என்னும் ஓர் மலரிலிருந்து எடுத்த குறிப்புகளிலிருந்து முக்கியமான பகுதிகளை மட்டும் தொகுக்கப்பட்டது.

## திருவைந்தெழுந்துண்மை என்னும் ஸ்ரீ பஞ்சாக்ஷர ரகசியம்

### நமச்சிவாய - வா - ஆழ்க

நமச்சிவாய என்பது வடமொழியில் நமஸ்சிவாய (நம:சிவாய) என நின்று ஏற்கனவே மேலே சொல்லியபடி சிவனுக்கு வணக்கம் எனப் பொருள்படுகிறது. இந்த சொற்களின் வேறுபாடுகளை வடமொழி இலக்கணங்களில் காண்க.

சிவன் என்னும் சொல் எல்லாம் வல்ல ஆண்டவனை உணர்த்தவும் நம: (நமஸ்) என்ற சொல் அவ்வாண்டவனுக்கு அடிமைத்திறம் பேணும் உயிரைக் குறிப்பால் அறிவுறுத்தி நிற்கின்றது.

∴ சிவனை வணங்குவது உயிரேயாமென்பது வெளிப்படையாய் நிற்க வைத்து ''அஹம் சிவம் நவாமி'' (நான் சிவனை வணங்குகிறேன்) என்று உரையாமல் வணங்கும் உயிரை உணர்த்தும் நமாமி (வணங்குகின்றேன்) என்னும் சொல்லையும் விடுத்து நமச்சிவாய (சிவனுக்கு வணக்கம்) எனும் இருசொற்களை மட்டும் உணர்த்தி ஒரு சொற்றொட்டரைப் பெரும் சிறப் புடைய மந்திர மொழியாக வைத்து வழங்கப்படுகிறது அதன் காரணம் எல்லா வல்ல முதல்வனிடத்துப் பேரின்பத்தை பெற விரும்பி அவனை அணுகினற்கு யான் எனது என்னும் இருவகைச் செருக்கும் அவன் தலைமையின் கீழ் அடங்கி நிற்க வேண்டுவது இன்றியமையாதது ஆகும்.

தம்மைத்தாமே மேலாக நினைத்து செருக்குடையவராயின் முடிவு இல்லாத துன்பத்திலேயே கிடந்து உழல்வர். மற்று அச்செருக்கு அற்று தம்மை ஒரு பொருளாக நினையாமல் தன் தலைவனையே பொருளாக நினைந்து வழிபடுவார்க்குப் பேரின்ப பேறு வருவது திண்ணம். எனவே நான் சிவனை வணங்குகிறேன் என்னும் மந்திர மொழி வகுத்து உரைப் பின் அதன்கண் நான் என்பது முனைத்து நின்று, எல்லா ஆற்றலும் எல்லா அறிவும் உடைய முதல்வர்க்கு முன் தன்னை பெரிதென எண்ணிய குற்றம் உண்டாகும். அதனுல் அறியாமை கிளர்ந்து பேரின்ப பேற்றை அடைய தடை செய்யும். சொல்லுக்கடங்கா துன்பத்தைத் தரும். அப்படி ஆகாமல் இருக்கும்பொருட்டு நான் என்பதனை முற்றும அடக்கி சிவனுக்கு வணக்கம் என்பதை ''நம:சிவாய'' என்று மந்திர மொழி வகுக்கப்பட்டது. இனி சிவனுக்கு வணக்கம் (நமசிவாய) என்னும் மந்திரத்தால் சிவனை வழிபடுமிடத்து உயிர்தான் ஒரு முதல் அன்ருய் சிவனருகில் அடங்கி நிற்கும். இது நம்மை சிவனருளைக் கொண்டு அறியும் தன்மையை உணர்த்துகிறது.

இதை தாயுமானவர் சுவாமிகள்

''அருளாலே எவையும்பார் என்ருன் அத்தை
அறிபோதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
இருளான பொருளல்லல் கண்ட
என்னையும் கண்டிலேன் என்னேடி தோழி''

என்று அருளுகிருர்.

எனவே நம:சிவாய என்னும் மந்திரமொழியில் உயிர் தன்னை ஒரு பொருளாக நினையாமல் சிவனையே ஒரு பொருளாக கருதி இருவகை செருக்கும் அடங்கி அவன் திருவடிக் கீழ் அடங்கி நிற்குமாறு தெரித் துரைக்கப்பட்டது.

நமச்சிவாய எனும் இம்மந்திரத்தின் முதல் நிற்கும் நமஸ் என்னும் மொழி உயிரின் தொழிலாகிய வணக்கத்தை உயர்த்துகிறது. அதனை முன் வைத்து முழுமுதற் கடவுளை உணர்த்தும் சிவ என்னும் மொழியை அதன்பின் வைத்து உரைக்கும் முறை உலக இன்பம் பயக்கும் என்பதாலும், திருவடிப் பேற்றை அடைய முதல்படி ஆதலாலும் இம் மந்திரத்தை தூல பஞ்சாக்கரம் என சொல்லப்படுகிறது.

குகை நமச்சிவாயர் மாணவர் குரு நமச்சிவாயத் தேவர், பஞ்சாக்கர வகைகளாகிய தூலம், சூக்குமம், அதி சூக்குமம் அல்லது காரண பஞ்சாக்ஷரம் என்பவற்றில் தூல பஞ்சாக்ஷரமாகிய நமச்சிவாய என்பதை மகுடமாக வைத்து, அதை அம்மந்திரத்திற்கு உரியவனான சிவ பெருமானுக்குப் பேராக்கி வணக்க முறையாக நமச்சிவாயமாலை என்னும் பாக்களை பாடியருளியுள்ளார்.

இது பஞ்சாக்ஷரம் உன்னல் செய்வோர் பாடமாக்கி ஓதின் அன்னார் கருதும் பொருள்களை எளிதில் அளிக்க வல்லது. இது சிந்திப்பதற்கு ஏற்றவாறு நூறு கண்ணிகளாகச் செய்யப்பட்டது. அவைகளை அந்த நமச்சிவாய மாலையில் காண்க.

திருவாசகம் :

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்  
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன்றில்லை  
போற்றியோ நமச்சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்  
போற்றியோ நமச்சிவாய செயசெய போற்றி

வள்ளல் பெருமான் இறைவன் புகழ் பாடி நமச்சிவாயவென்று இறுதியில் கூறுகிறார். சிவனை நமச்சிவாய என்று குறிப்பிடுகிறார். ''பெற்ற தாய்தனை மறந்தாலும்'' போல பாடல்களில் நமச்சிவாயத்தை நான் மறவேனே என தனது அருட்பாவில் பாடியருளுகிறார்.

திருமந்திரம் - 956

ஆமத்தினி திருந்தன்மை யத்தினை  
ஓமத்திலே உதம்பண்ணும் ஒருத்திதன்  
நாம நமசிவ என்றிருப்பார்க்கு  
நேமத்தலைவி நிலவி நின்றாளே

அரிசி, சோறு முதலியன வாய்ப் பக்குவப்பட்ட பின்னர் அவற்றை வயிற்றுத் தீ அதில் நின்று சீரணிப்பிக்கின்ற தன்மையை உடையது. அத்தன்மையது போல் திரோதான சத்திக்குரிய நகார முதலாக நின்ற அந்த நான்கெழுத்துக்களே (நமசிவ) துணை என்று நிற்பவர்கட்கு சிவ சத்தி (வயிற்றுத் தீ போல்) அவர்களது வழிபாட்டின் பயனைத் தரும் முதல்வியாய் நீங்காது நிற்பாள்.

ஆமம் - அரிசி　　அன்னம் - செய்தல்　　ஓமம் - ஓமம் செய்தல்
உதம் - அவிசு　　ஒருத்தி - திரோதான சத்தி　　நேமம் - நியமம்

இனிதாய் உதமான தலைவியாய் உலகப்பயன் வேண்டுவோர்க்கு தூல பஞ்சாக்ஷரம் உரியது.

திருமந்திரம் 954

நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்துள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவில வல்லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே

மேற்படி எழுத்துக்களில் பிரணவம் நீங்க நகார முதலாக நின்ற ஐந்தெழுத்தில் (நமசிவாய) இறுதி நின்ற 'ய'காரம் நீங்கலாய் நின்ற (நமசிவா) எழுத்துக்களது ஓசையே உலகெங்கும் வியாபிப்பது. அதனால் அந்த எழுத்துக்குள்ளே எல்லா உலகமும் அடங்கியுள்ளது. எனவே அவ்வோசையின் பெருமை அறிந்து ஓதுபவர்க்கு அதுவே நன்னெறியாக நன்மை பயக்கும்.　　நால் ஆம் எழுத்து — நான்கு எழுத்து

திருமந்திரம் 955

இயைந்தனள் ஏந்திழை என்உளம் மேவி
நயந்தனள் அங்கே நமச்சிவ என்னும்
பயந்தனை ஓரும்; பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றுப் பிதற்றறுத் தேனே

யான் மேற்படி நமசிவ நான்கெழுத்தையே ஓதினமையால் சிவ சத்தி என்னிடத்து வந்து பொருந்தி, எனது உள்ளத்தை இடமாகக் கொள்ள விரும்பி அங்ஙனம் அதன் கண்ணே அமர்ந்தாள். அதனால் யான் எனது என்ற சீவ நிலையிலிருந்து நீங்கினேன் பிற மந்திரங்களைப் பல்வேறு பயன் குறித்துப் பிதற்றுதலையும் ஒழித்தேன். ஆகவே நீங்களும் "நமசிவ" என்று ஓதி அதன் பயனை ஆய்ந்து உணருங்கள். உணர்ந்து அம்மந்திரத்தைப் பற்றுங்கள்.

திருமந்திரம் 959

நகார மகார சிகாரம் நடுவா
வகாரம் இரண்டு வளியுடன் கூடி
ஓகாரம் முதற்கொண் டொருகால் உணர்க
மகார முதல்வன் மனத் தகத்தானே

பஞ்சாக்ஷரத்தில் நகார மகாரங்களை முன்னர் உடைய சிகாரம் (நமசிவய) நடுவனதாய் நிற்க, அவற்றின் பின்னதாகிய வகாரம் இடைகலை பிங்கலை இருவாயுக்களுடன் பொருந்தி ஓம்காரத்தை முதற் கண்ணே பெற்று ஓதப்படின் மேற்கூறிய எழுத்துக்களில் மகாரத்திற்கு முதல்வனாய் நின்று அதனை பரிபாகப்படுத்திவரும் சிவன் அங்ஙனம் ஓது வாரது உள்ளத்தை தனக்கு இடமாகக் கொண்டு எழுந்தருளியிருப்பான்

இனி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் பற்றி அடுத்த அத்யாயத்தில் காண்போம்

அத்தியாயம் – 5

# சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்

வியஷ்டி பஞ்சாக்ஷரத்தின் மற்ருெரு அங்கம் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் சிவாய நம என்பது சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்.

சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் - சிவாயநம் என்பது பற்றி திருமூலர்:

திருமந்திரம் - 982

சிகார வகார யகாரமுடனே
நகார மகார நடுவுறநாடி
ஒகாரமுடனே ஒருகா லுறைக்க
மகாரமுதல்வன் மதித்து நின்ருனே

என்னும் திருமந்திரத்தில் சிகாரத்தை முதலாக வைத்து ஓதும் ஆகம முறையை கூறுகிருர். பின் அதன் சித்திகளைப் பற்றி

திருமந்திரம் - 983

நம்முதல் ஓரைந்தின் நாடும் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முதலுள்ளே தெளிய வல்லார் கட்குத்
தம் முதலாகும் சதா சிவந்தானே

என்னும் திருமந்திரத்தில் அருளுகிருர்.

நம் முதலாக — நகர முதலாக ஓதும் தூலம் — நமசிவாய
சிம் முதலாக — சிகர முதலாக ஓதும் சூக்குமம் — சிவாயநம

மனவாசகங்கடந்தார் அருளிய உண்மை விளக்கம் இதனை இன்னும் அழுத்தம் திருத்தமாக கூறுகிறது.

"சிவன் அருள் ஆவி, திரோதம் மலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம் — இவனின்று
நம்முதலா ஓதின் அருள் நாடாது நாடும் அருள்
சிம்முதலா ஓது நீ சென்று"

நம் முதலாக "நமசிவாய" என்று ஓதினுல் அருள் நாடாது. அருள் கிடைக்க வேண்டும் என்ருல் சிம் முதலாக "சிவாயநம" என்று ஓது.

உண்மை விளக்கம் 43ம், 44ம் இதையே கூறுகிறது.

உண்மை விளக்கம் - 43

அண்ணல் முதலா அழகா ரெழுத்தைந்தும்
எண்ணில் இராப்பகல் அற்ற இன்பத்தே - நன்னி

அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை
இருளானது தீர நின்று

அண்ணல் முதலா — சிம் முதலா - சிகார முதலா

சிகார முதலாக ஓதி உணர்ந்து வந்தால் அருள் உயிரை சிவமாக ஆக்கும்

உண்மை விளக்கம் - 44

ஆதிமலம் இரண்டும் ஆதியா ஓதினல்
சேதியா மும்மலம் தீர்வாகா - போதம்
மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
விதிப்படி ஓது அஞ்செழுத்துமே

ஆதிமுதல் — தூல பஞ்சாக்ஷரத்தின் முதல் - ஆணவத்தின் ஆதி குறையாமல்

ஆதி மலம் — ந, ம எனும் இரண்டு எழுத்தின் பொருளாகிய ஆணவமும் - மாயையும் (திரோதம் - கன்மம்)

சேதியா — அழியாது

மும்மலமும் தீர்வாகா — ஆணவம், மாயை, கன்மம் ஆகியவை தீராது

எனவே மாறி விதிப்படி ஓது — சிவாயநம என்று சிம்முதலாக ஓது மதிப்பறியா இன்பத்தில் வாழலாம்

மேற்படி திருமந்திரம் (983) நம்முதல் ஓரைந்தின் நாடும் கருமங்கள்.........மற்றும் உண்மை விளக்கம் பகுதிகளை வைத்து சிந்திப்போம். நமசிவாய என்பது தூல பஞ்சாக்ஷரம். சிவாயநம என்பது சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம். 'ந' என்பது மாயை, திரோதை, கன்மம் இவைகளை குறிக்கும் என்று முன்பார்த்தோம்.

திருமூலர் நம் முதல் ஓரைந்தின் அருள்நாடாது என்றும், மனவாசகங்கடந்தார் உண்மை விளக்கத்தில் நம்முதலா ஓதில் அருள் நாடாது என்று அருளுகிறார். நமசிவாய என்று தூலமாக ஓதினல் அருள் கிடைக்காது. ஆனல் சிம்முதலாக அதாவது சிவாயநம என்று ஓதினல் அருள் நாடும். நமசிவாய என்பதில் 'ந' 'ம'வும் முன் உள்ளது. இதை ஓதினல் உலக போகங்கள் கிடைக்கும். இறைவன் உயிர்களை உலக போகங்களில் கன்மபலன்களை அருந்தச் செய்து அந்த வல்வினையை அகற்றி உயிர்களை கரையேற்றுகிறன். அந்த கரையேற்றம் படிப்படியாக நடக்கும். தூல பஞ்சாக்ஷரம் ஓதி கன்மபலன் நீக்கிய உடன் பஞ்சாக்கரத்தில் 'ய'காரமாகிய உயிர் சிவன் அருள் இவைகளை நாடும்போது சிகரமும் வகரமும் முன்னே தோன்றுகிறது. எனவேதான் தூல பஞ்சாக்ஷரம் ஓதின் படிப்படியாக அடுத்த நிலையையடைய ஏதுவாகும். நம

சிவாய என்னும் திருவைந்தெழுத்து ஐந்திஞல் படைத்தல், காத்தல், மறைத்தல், அருளுதல், அழித்தல் என்ற ஐந்தொழில்களும் நிகழும். அதஞல் கருமங்கள் நாடும். அதஞல் வல்வினை என்ற வினை சேரும். வினைப்பயன் அதிக வலுவுள்ளதாலும், உயிர்களை அது பாதிப்பதாலும் அதை வல்வினை என்று கூறுகிருர்கள். அதை ஓதி தெளிந்தவர்க்கு சிவாயநம என்று கருமங்கள் முதலியன பின்னுக்கு தள்ளப்பட்டு சதா சிவம் என்று சொல்லப்படும் அறிவாற்றலினை சிவன் தம் முதலாக வெளிப்படுவன்.

திருமூலர் சிவயநம என்னும் குளிகையிட்டு பொன்னுக்குவன் இக் கூட்டையே என்று இப்பூத உடலை பொன்ஞக்குவன் என்று அருளுகிருர். கூடு — உடம்பு என்று பொருள். இதை இவ்வாறு திருமூலர் பல திரு மந்திரங்களில் சிவயநம என்பதின் சிறப்பைப் பற்றி அருளியுள்ளார். செம்பு பொன்ஞகும் என்று துவங்கும் திருமந்திரத்தில் திருமூலர் பஞ்சா க்ஷரத்தில் வகர வித்தை சிந்திந்தலை கூறுகிறது

வகர வித்தை — பொன் செய்யும் ஆற்றல்

மேலும் எளியவாறு செய்வார் என்று துவங்கும் திருமந்திரத்தில் பொன்ஞக்குவன் கூட்டையே என்று தகர வித்தை சிந்திப்பது பற்றி கூறுகிருர். தகர வித்தை — தேக சித்தி

பொன்ஞக்குவன் கூட்டையே, உடம்பை பொன்னுடம்பாக (சுவர்ண தேகமாக) ஆக்கிடுதல், உலோகத்தை பொன்ஞக்குதல், உடம்பை பொன்ஞக்குதல் இவ்விரண்டும் பஞ்சாக்கரத்தால் கூடும் என்பதற்கு இவ்விரண்டு பாடல்களுமே சிறந்த ஆதாரமாகும். அவை

எளியவாது செய்வார் எங்கள்ஈசனை
ஒளியை யுன்னியுருகு மனத்தராய்
தெளியஓதி சிவாயநம என்னும்
குளிகையிட்டு பொன்ஞக்குவன் கூட்டையே

உணராதவர்கள் எங்கள் ஈசனைப் பற்றி சொற்போர் புரிவர். அதனை விடுத்து எம் ஆண்டவனும் அறிவுப் பேரொளியுமாகிய முதல்வனை அன்பு செய்து உள்ளத்தில் சிவாயநம என்னும் மறையின் பொருள் உணர்ந்து ஓதின் மலங்களாகிய களிம்போடு கூடிய அவர்தம் உயிரையும் அச்சிவாயநம என்னும் குளிகையைக் கொண்டு களிப்பில்லாத செம் பொன்ஞக்குவன்.

செம்பொன்ஞகும் சிவாயநம வென்னிற்
செம்பொன்ஞக திரண்டது சிற்பரம்
செம்பொன்ஞகும் சிரியும் கிரியும்
செம் பொன்ஞன திருவம்பலமே

மணிவாசக பெருந்தகையார் :

"நானேயோ தவம்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய் இன்னமுதமாய் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்து எனதுள்ளம்புகுந்து அடியேற்கு அருள்செய்தால்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே"

என்று திருவாசகத்தில் சிவாயநம எனப் பெற்றதற்கு என்ன தவம் செய்தேன் என்று சிவாயநம என்னும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தின் பெருமையை உணர்த்துகிறார்.

வள்ளல் பெருமான் இதையொட்டியே,

"நான் செய்த புண்ணியம் யாதோ சிவாயநம எனவே
ஊன் செய்த நாவைக் கொண்டு ஓதப்பெற்றேன்
எனை ஒப்பாரவர்
வான்செய்த நான்முகத்தோனும் நெடுமாலும் மற்றைத்
சென்செய்த கற்பகத் தேவனும் தேவருஞ் செய்யரியதே"

என்ற அருட்பாவில் சிவாயநம எனும் மகா மந்திரத்தின் பெருமையை உணர்த்துகிறார். சம்பந்தர் பெருமானும், அப்பர் பெருமானும், சுந்தரமூர்த்தி பெருமானும் ந ம ச் சி வா ய பதிகங்கள் பாடியுள்ளார்கள். சம்பந்தர் பெருமான், அப்பர் பெருமான் பா டி ய வை நமச்சிவாய பதிகம் என்றே பேர் பெற்றன. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பாண்டி கொடுமுடி பதிகம் நமசிவாய பதிகம் என்று பேர் பெறாவிடினும் அது ந ம சி வா ய பதிகமே. மணிவாசக பெருந்தகையார் "நமச்சிவாய வாழ்க; போற்றியோ நமச்சிவாய", "நமச்சிவாய என்று பணியாப் பேயனாகினும்" என்று பாடுகிறார்.

இவ்வாறு தூல பஞ்சாக்ஷரத்தை பாடியவர்கள் சூ க்ஷ் ம பஞ்சாக்ஷரத்தையும் வைத்து பல இடங்களில் பாடியுள்ளார்கள். இருவகை பாட்டுகளையும் ஊன்றி நோக்கி ஆராயுங்கால் நமச்சிவாய எனப்படும் பாடல்கள் இறைவனைப் போற்றி புகழ்ந்து வாழ்த்தி வணங்கும் பாடல்களாக அதாவது தோத்திர பாடல்களாக விளங்குவதை காணலாம். அதேபோல் சிவாயநம எனப்படும் பாடல்களில் தான்பெற்ற பேற்றை கூறும், அனுபவ பாடல்களாக அமைவதை காணலாம். இதனால் நமச்சிவாய என்பது தோத்திரமாகவும், சிவாயநம என்பது சாத்திரமாயும் அனுபவமாயும் ஆன்றோர்கள் ஆட்சியில் காணப்படுகிறது.

இதுகாறும் கண்டவற்றால்

நமச்சிவாய என்பது வேதமுறை
சிவாயநம என்பது ஆகம முறை

நமச்சிவாய — சமயகுரு உபதேசிப்பது
சிவாயநம — ஞானகுரு உபதேசிப்பது

| | | |
|---|---|---|
| நமச்சிவாய | — | சாதாரண பக்குவிக்குரியது |
| சிவாயநம | — | தீவிர பக்குவிக்குரியது |
| நமச்சிவாய | — | இம்மை மறுமைப் பயன்களை அளிப்பது - கருமசித்தி |
| சிவாயநம | — | முத்தி பயனை அளிப்பது - ஞானசித்தி |

வள்ளல் பெருமான் திருநீறு இடும்போது ''சிவாயநம என்றிடு நீறே'' என்று பல பாடல்களில் பாடுகின்றார். இப்பதிகம் சிவாயநம என்று சொல்லி இடும் நீறு என்னென்ன பேறுகளைத் தரும் என்று அடுக்கிக் கூறுவது இப்பதிகம். சிவாயநம என்றிடு நீறே என்பது பாடல் தோறும் மகுடம். ''நெஞ்சே நீ அஞ்சேல் என்மேல் ஆணை கண்டாய்'' என்று தன்மீது ஆணையிட்டுக் கூறுவது பாடல்தோறும் மூன்றாவது அடியில் இடம் பெற்றுள்ளது.

(தவத்திரு ஊரன் அடிகள் 'திருவருட்பா' நூலில்
அருட்பா 834 முதல் 844 வரை)

மேலும் வள்ளல் பெருமான் :

அருட்பா 1294

'' நாடும் சிவாயநம என்று நாடுகின்றோர்
கூடும் தவநெறியில் கூடியே - நீடும் அன்பர்
சித்தமனைத் தீபகமாம் சிற்பரனை ஒற்றியூர்
உத்தமனை நெஞ்சமே ஓது ''

எனது அருட்பாவில் சிவாயநம என்று நாடின் தவநெறி கூடும் என்று அருளுகிறார்.

அருட்பா 2285

காரேஎனு மணிகண்டத்தினன் பொற்கழலை யன்றி
யாரேதுணை நமக்கேழை நெஞ்சே இங்கிருந்துகழு
நீரே என்னுந்தரற் கஞ்சுவாரோடு நீயுஞ்சென்று
சேரல்இறுகச் சிவாயநம எனச் சிந்தைசெய்யே

என்றும்,

அருட்பா - 2371

கான்போல் இருண்ட இவ்வஞ்சக வாழ்க்கையில்
- கன்னெஞ்சமே
தான்போல் குதித்துக் கொண்டோட்டல் அமுதமதி விளங்கும்
வான்போல் குளிர்ந்த சிவானந்த வாழ்க்கையின்
வாழ்வுறச்செந்
தேன்போல் இனிக்கும் சிவாயநம எனச் சிந்தை செய்யே

என்றும் வள்ளல் பெருமான் சிவாயநமவெனச் சிந்தை செய்ய அறிவுறுத்தி அருள்கிறார்.

அருட்பா - 2400

"மருக்கா மலர்க்குழல் மின்னூர் மயல் சண்டமாருதத்தால்
இருக்கா துழலுமென் ஏழை நெஞ்சே இவ்விடும்பியிலே
செருக்காதுருகிச் சிவாயநம எனத் தேர்ந்தன்பினுல்
ஒருக்கால் உரைக்கில் பெருக்காகும் நல்லின்பம் ஓங்கிடுமே"

பஞ்சாக்கரத்தை (சிவாயநம) ஒருக்கால் உரைக்கின்
பெருக்காகும் இன்பம் என நெஞ்சுக்குரைத்தது இது.

அருட்பா - 2601

பரசிவானந்த பரிபூரண சதானந்த பாவனுதீதமுத்த
பரமகைவல்ய சைதன்ய நிஷ்கௌ பூதபௌதிக தாரயுக்த
சர்வமங்கள சச்சிதானந்த சௌபாக்ய சாம்பவ விநாசரகித
சாஸ்வத புராதர நிராதர அபதவா சாமகோசர நிருபா
துருவ கருணுகர நிரந்தர துரந்தர சுகோதய பதித்வநிமல்
சுத்தநித்திய பரோசஷானுபவ அபரோக்ஷ சோமசேகர சொருபா

அரஹர சிவாய என்று மறை ஒலமிட்டணுவளும் அறிகிலாத
அற்புத சிதாகாச ஞானஅம்பலமாடும் ஆனந்த நடனமணியே

மறைகள் சிவாயநமவென்று ஓலமிடுவதை கூறுவது இது.
அப்படி ஓலமிட்டும் அவை அறிகிலாவாம்

அருட்பா - 3208

ஆவா ஈததிசயம் ஈததிசயம் என்புகல்வேன்
அடியரெலாம் நினைந்து நினைந்து அவிழ்ந்ததகநெக்குருகி
ஓவாமல் அரட்டிடவும் அவர்க்கருளான் மாயை
உலக விடையானந்தம் உவந்துவந்து முயன்று
தீவாய நரகிடை விழக்கடவேன் எனைத்தான்
சிவாயநம எனப்புகலும் தெளிவுண்டையன் ஆக்கிச்
சாவாதவரம் கொடுத்துத் தனக்கடிமை பணித்தான்
தனிந்த சிவகாமவல்லிக்கு இனித்துத நடந்தவனே

சிவாயநம எனப் புகழும் தெளிவுடையனுக இறைவன் தம்மை ஆக்கி
யதை வியந்தோதியது. சிவாயநம எனப் புகழ்வது தெளிவுடைமை

திருமந்திரம் - 952

இயைந்தனள் ஏந்திழை என்னுளமேவி
நயந்தனள்ளங்கே நமசிவ என்னும்
பயந்தனையோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனன் மற்றும் பிதற்றறுத்தேனே

ஸ்ரீபராசக்தி ஆன்மாவாகிய அடியேன் உள்ளத்தை விரும்பி பொருந்தினள். அதனை விரும்பி அங்கேயே அமர்ந்தனள். அதனால் நமசிவ என்று காமியங்கருதிச் செபிக்கும் பற்று நீங்கினேன். வேறு பிதற்றல்களையும் ஒழிந்தேன்.

நம்முதலாக ஓதுபவர்கள் உயர வகரத்தை சிந்திக்க வேண்டும். சிந்தித்தால் வரும் பயனை விளக்குகிறது இப்பாடல். நமசிவ என்பதில் யகரம் இல்லையே எனில் 'என்' என்றதால் ஆன்ம எழுத்தாகிய யகரம் குறிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| தியானிப்பவன் | — | ய |
| தியானிக்கப்படும் பொருள் | — | சிவ |
| கழன்ற பொருள் | — | நமக்களாகிய மலங்கள் |

ஆகவே நிஷ்காமிய இச்சை விளைந்தது.

திருமந்திரம் - 953

ஆமத்தி விருந்தன்ன மயத்தினை
ஓமத்திலே யுதம்பண்ணும் ஒருத்திதன்
நாம நமசிவ என்றிருப்பார்க்கு
நேமத்தலைவி நிலவி நின்றாளே

ஆமம் — அரிசி ஆமத்தினித்திருந்து - அன்னமயத்தினை உணவில் சுவையாக ஒன்றியிருந்த அன்னமயத்தினை

ஓமம் — வயிறு (அன்னுசயம்) சத்தியே வயிற்றில் அக்னியாக இருந்து சீரணிக்கச் செய்து ஆன்மாக்களை காக்கிறாள்

ஒருத்தி தன் நாம் — சக்தியின் அடிமைகளாகிய நாம் (ஆன்மாக்கள் - யகாரம்) அநமசிவ என்றது. ஆன்மாக்களாகிய நாம் (யகரம்) அந்நான்களுள் சித்தினமாக ஒன்றிப்போம்

நேமத் தலைவி - நியதிகட்கு தலைவியாகிய அன்னை நிலவி நின்றாள். ஆன்மாத் தோன்றுதபடி தானே எல்லாமாய் முழுதுமாய் விளங்கினாள். 'பரை உயிரில் யான் எனது என்றற நின்றது திருவடி' என்னும் உண்மை நெறி விளக்கம் பாட்டையும் வைத்து அறிக.

திருமந்திரம் - 952

அகாரம் உயிரே உகாரம் பரமே
மகாரம் மலமாய் வருமுப்பத் தாறில்
சிகாரம் சிவமாய் வகாரம் வடிவமாய்
அகாரம் உயிரென்றறை யலுமாமே

அகரமாகிய பசுவும்; உகரமாகிய பதியும், மகரமாகிய பாசமும் ஆக வருகின்ற தத்துவங்கள் முப்பத்தாறைப் போல பஞ்சாக்ஷரத்துள் சிகாரம் சிவமாய் வகாரம் அவன் திருமேனியாய் யகாரம் ஆன்மா வாகவும் என்று சொல்லப்படுகிறது.

ஓம் என்ற வியட்டி நிலையிலே அகாரம் ஆன்ம தத்துவம் இருபத்தி நாலாகவும், மகாரம் வித்யா தத்துவம் ஏழாகவும், உகாரம் சிவ தத்துவம் ஐந்தாகவும் ஆதல் காண்க.

உயர், பரம், மலம் என்பனவற்றின் தத்துவங்களை உணர்த்திற்று

திருமந்திரம் - 955

ஐந்துகலையில் அகாராதி தன்னிலே
வந்த நகாராதி மாற்றிமகாராதி
நந்தியை மூலத்தேநாடி பரையோடுஞ்
சந்தி செய்வார்க்கு சடங்கில்லைதானே

பஞ்சாக்ஷரம் ஓதுவார்க்கு சடங்குகள் வேண்டும். ஐந்து கலைகளி லிருந்து தோன்றிய அகாராதி அக்கரங்களில் நகார முதலாக மாற்றி நாதத் தலைவனாகிய சிவத்தை மூலாதாரத்தில் தியானித்து பரையோடு கூட வல்லார்க்கு சடங்குகள் வேண்டாம்.

ஐந்து கலைகள்: 1) சாந்தியதீதகலை 2) சாந்திகலை 3) வித்யாகலை 4) பிரதிஷ்டாகலை 5) நிவிருத்திகலை

நகாராதி — நம்முதலா (நமசிவாய) ஓதுவதை மாற்றி சிம்முதலா (சிவாய நம) என ஓதி

மகாராதி நந்தியை — நாம முதல்வனான சிவத்தை

மூலத்தே நாடி — மூலாதாரத்தில் தியானித்து அங்கிருந்து ஏனைய ஆதாரங்களிலும் அமரச் செய்து பரையொடும்

('வ'வோடு) சாந்தி செய்வார்க்கு — ஆக்ஞையில் விளங்கும் பராசக்தி யோடு கூடி தியானிப்பார்க்கு

சடங்கு இல்லை — கிரியை இல்லை. ஞானம் கிடைத்தபின் கிரியைகள் தேவையில்லை

"கிரியை என்னும் யாவும் ஞானம் கிடைத்தல் நிமித்தமாம்" என்னும் சித்தியார் பாட்டைக் கொண்டும், "ஞானத்தால் தொழு வார் சிவஞானிகள்" எனும் அப்பர்பெருமான் வாக்கையும் வைத்து தெளிக.

திருமந்திரம் - 961

நவமுஞ் சீவமும் உயிர்பரமாகும்
தவமொன்றிலா தத்துவ மாகும்
சிவமொன்றியாய் பவராதர வாலச்
சிவமென்பதானும் என்னும் தெளிவுற்றதே

திருவைந்தெழுத்தில் இவை சீவன் [இவை பரம் எனப்பகுத்துணர் தல் வேண்டும். நமய என்பதும் சிவ என்பதும் முறையே உயிரும் பரமும் ஆகும். இது தவமில்லாத தத்துவமாகும். வீடு பேருகிய மெய்ப் பொருளைத் தரும் சிவனோடு ஒன்றியிருந்து ஆய்பவர்கள் அன் பால் அச்சிவமாகும் பொருளும் தானேயாம்.

நவம் உயிராகும் — நகாரம், மகாரம், யகாரம் உயிராம்

நமக்கள் உயிருக்காக இறைவனுல் கொடுக்கப்பட்டு உயிரோடு சம்பந்தப்பட்டதால் நவம் உயிராம் என்று சொல்லப்படுகிறது.

சிவம்பரமாகும் — சிவ என்பது சிவசக்திகளாகப் பரம்பொருளாம்

தவம் ஒன்று இலாத — தவம் ஒன்றும் செய்யாமல்

தத்துவம் ஆகும் — மெய்ப் பொருள் ஆகும்

சிவம் ஒன்றி ஆய்பவர் — சிவய என்பதனுள் யகாரமாகிய உயிர் நம என்னும் மலசார்பைப் பற்ருமல் சிவ சார்பைப் பற்றி ஒருங்கி தியானிப்பவர்

ஆதாவாய் — இடைவிடாத பேரன்பால்

அச்சிவன் தான் ஆம் என்னும் தெளிவுள்ளது — அப்படி 'ந, ம' பற்றை நீக்கி சிவப் பற்றை தியானிக்க

'நம' பற்று நீங்கி யகாரமாகிய உயிர் சிவ சொரூபம் ஆகி தானே சிவமாகிவிளிட நிலையை அடையும்.

திருமந்திரம் - 962

கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள்ளே வைத்து
ஆடிய ஐவரும் அங்குறவர்வர்கள்
தேடி அதனை தெளிந்தறியீரே

திருவடி ஞானத்தால் உயிர் ஈடுபட்டால் விடய போகங்களில் இழுத்துச் சென்ற பொரிகளும் திருந்தும்

கூடிய எட்டும் இரண்டும் குவிந்து அறி (நந்தியை)
நாடிய நந்தியை ஞானத்துள்ளே வைத்து (வைக்க)

ஆடிய ஐவரும் உறவாவர்
அதனை தேடித் தெளிந்து அறியீர்

கூடி-ய — பஞ்சாக்ஷரத்துள் கூடியுள்ள 'ய' என்னும் சிவாக்கரம்
எட்டு — எட்டின் வடிவாகிய 'அ'
இரண்டு— இரண்டு எண்ணின் வடிவாகிய 'உ'
அகரம் — சிவம் உகரம் — சக்தி

எட்டும் இரண்டும் :- எட்டு + இரண்டு = பத்து
தமிழில் பத்தின் எண் வடிவு 'ய'

'ய'கரம் யான், எனது என்ற உணர்வை இழந்து சக்தி
ஸ்வரூபமாக அந்த நிலையில் ஒன்றி நின்று

அதனை குவிந்து அறிதல் — ஒன்றி நின்று நினைத்தல்
ஞானத்துளே வைத்து — கருவி கரணங்களால் உணர்தற்கு
அரிது ஆதலின் ஞானத்தால் அறிக என்கின்றார்

'ஞானத்தால் தொழுவார் சிவஞானிகள்' என்றும்
அப்பர் பெருமான் வாக்கில் காண்க.

'பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பொருளை
பதிஞானத்தேலே...' என்னும் சித்தியார் வாக்கில் காண்க

ஆடிய ஐவர் — உலக இன்பமே பெரிதென்று, அடங்கா பிடாரிகளாக
தம் இஷ்டபடி ஆடிய ஐந்து இந்திரியங்கள்

அங்கு உறவு ஆவார் — பதி ஞானம் மேவி பசு, பாச ஞானங்கள்
அடங்கிய காலத்து பதிஞானம் மேவுவதால்
தாமும் உறவு ஆவார்கள்

திருமந்திரம் - 963

எட்டும் இரண்டும் இனிதறி கின்றலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்கமே

சிவம் - சத்தி - உயிர் இவற்றை அறிதலே சன்மார்க்க நெறி

எட்டும் இரண்டும் இனிதாக அறிகின்லர்
எட்டும் இரண்டும் அறியாத மூடர்கள்
எட்டும் இரண்டும் பத்து என்பதே சிந்தாந்த சன்மார்க்க பாதம்

எட்டும் இரண்டும் — இரு மூன்று (6) + நான்கு (4) = பத்து ஆகும்
பத்து என்பது தமிழில் 'ய'வைக் குறிக்கும் என்று பார்த்தோம்

தன்னையறிதல் சைவ சித்தாந்த ஞான சன்மார்க்கம்
தன்னையறிந்து சிவம் சக்தியை அறிவது

ஆகவே ஓடைகள் அறிந்து (ந ம) அவையினின்றும் நீங்கி இறை சக்தித்னை (சி வ) எய்தும் உபாயம் உணர்த்துவது ஞான பாதமாகும். இவற்றையே சிவயநம என்னும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் உணர்த்துகிறது.

'' தன்னையறிந்து இன்பமுற வெண்ணிலாவே
ஒரு தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே''
என்னும் அருட்பாவில் காண்க

திருமந்திரம் - 54
சிவ முதல் மூவரோடைவர் சிறந்து
அவைமுதல் ஆறிரண் டொன்றோ டொன்றுக
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே

சிவச்சக்கரத்தினுள் அமைக்கப் பெறும் ஐந்தெழுத்துக்களின்
வித்தெழுத்துக்கள் பற்றி கூறுகிறது

சிவ முதல் மூவரோடு ஐவர் — சிவய என்னும் சிவமுதல் மூவரோடு நம சேர்ந்து சிவயநம என்பது ஐவர் ஆகும்

இவையொடு ஆறிரண்டு (12ம்)
ஒன்றோடு ஒன்றுமான் 1 + 1 — (2ம்) ஆக 14

பதினொன்றும் எழுத்தாகிவ 'ஔ' என்பதை முதலாகக் கொண்டு விந்துவும் நாதமும் ஓங்கச் சிறத்த நிற்கும் அவை முதல் ஐந்திற்கு முதலான சிகரத்தின் முதலாகிய 'சி' என்பதனோடு, அவை முதல் ஆறிரண்டு ஒன்றோடு ஒன்று: அகர முதலாக கொண்டு 14ம் எழுத்தான ஔ என்பதனோடு வந்து ஓங்க 'செவும்' நாதம் ஓங்க செள எனப்படும். அவற்றோடு ஓங் அச்சவை முதல் — செவும், செள: சிவாயநம என்று ஓங்கிய அ ச் ச க் க ர ம் திருவம்பலமாகிய சிவசக்கரம் இதைப்பற்றி விவாம பஞ்சாக்ஷர சக்கரங்கள் என்னும் தலைப்பில் காண்க.

திருமந்திரம் - 970
ஆறெழுத்தா லவ்வாறு சமயங்கள்
ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்
சாவித்திரியில் தலையெழுத்து தான்றுள
பேதிக்க வல்லார் பிறவி யற்றார்களே

ஓம் சிவாயநம என்னும் ஆறெழுத்தால் அத்தகை ஆறு சமயங்கள் ஆயின. ஆறெழுத்துக்களும் ஒவ்வொன்றும் நான்கு நான்காக பகுக்க

இருபத்தி நாலு என்பர். காயத்ரி மந்திரத்துக்கு தலையெழுத்து ஒன்றுண்டு. அதனை பிரித்து உணர்பவர்கள் பிறவியை நீக்கியவராவார்.

ஆறெழுத்து என்பது ஓம் சிவாயநம ஆகும். மகர, நகரங்கள் உலகிலே பரந்து செல்லும்படி உயிரை செலுத்தும். அதை மீள விடாமல் தடுக்கும்.

உயிர் அவற்றை சாராது பிணிப்பினின்று 'ம' நீங்கி சிவத்தை சாருவது முத்தி என்பதை உணராது; வகாரம் சிகாரத்தை காட்டும் என்று உணராது அவையவையே முதல் என்று தனித்து நிற்கும்.

பிரணவத்தால் காணுபத்யமும், சிகரத்தால் சைவமும், வகாரத்தால் சாக்தேயமும், நகாரத்தால் சகம்பிரம்மா பாதமும், மகாரத்தால் மாயாவாதமும் ஆகிய ஆறு சமயங்கள் உண்டாயின. இவ்வற்றுள் ஒவ்வொன்றும் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நான்காகிறது

திருமந்திரம் - 988

ஓங்காரம் உந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்ட தாயிடும்
பாங்கார் நகாரம் பயில் நெற்றியுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாத மேலாகுமே

ஓங்காரம் தொப்புழின் கீழ் மூலாதாரத்தில் நிலை பெற்றிருக்கும். எந்நாளும் ஆன்மாவை விட்டு நீங்காத வகாரம் கழுத்தை இடமாக கொண்டு விளங்கும். அழகிய நகாரம் இடைவிடாது இறைவனை நிறுத்தி பழகுவதற்கு இடமாகிய நெற்றியை பொருந்தும் பெருமை தரும் விந்துவும் (வ) நாதமும் (சி) நெற்றிக்கு மேலே ஆணையிலும் (ஆக்ஞை) அதற்கு மேலும் முறை விளங்கும்.

திருமந்திரம் - 989

நமவது வாசனமான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவறவாதி நாடுவ தன்றுஞ்
சிவமாகு மாஞேஞ் சேர்தல் மெய்வீடே

ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை நமவற - நம இல்லாமல் ஓதுதல் ஆன்மாக்கள் நம என்னும் மல திரோதங்களை ஆசனமாகக் கொண்டு இயங்குவன. அவைகளை நீக்கி 'சிவ' என்பதைச் சார்ந்து தியானிக்க அதனுல் சிவமாம் பதியாகும். ஆதியில் நம அற்றும்போம்படி நாடுவது. மந மின்று சிவயநம, சிவயநம என சிந்தித்தே சிவனுகும் மௌன நிலையை தேர்க. அதுவே உண்மையான வீடு. பின் முதல்வனை தேடும் சாதகர்கள் நம என்பதை அறவே விட்டு செபித்தல் கூடாது. சிவயநம எனச் சேர்த்தே

தியானிக்க வேண்டும். அப்படி செய்து கொண்டு வந்தால் ந. ம என்னும் எழுத்துகள் உறங்கியவன் கைப்பொருள் போல் தானே நழுவும். அப்போது சிவமாய் இருத்தலாகிய பெரிய மோன நிலை சித்திக்கும்.அதுவே வீடாம்.

ஆதி நம அற நாடுவது - அவ்விதம் அனுபவ நிலையில் தெளிவு பிறக்குங்கால் ஏற்படும் அனுபவம் பற்றி.

திருமந்திரம்

தெளிவரு நாளிற் சிவ அமுதூறும்
ஒளிவரு நாளில் ஓரெட்டில் உகளும்
ஒளி வரும் அப்பதத் தோரிரண்டாகில்
வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே.

தெளிவு பிறக்குங்கால் சிவாமுதம் சுரக்கும் அப்போது அகாரத்தில் விளங்கும், சிவ நோக்குக்குரிய "அ" என்னும் பதத்தில் ஒன்றிய நிலை மாரி காண்பானும் காணப்படும் பொருளாகிய இரண்டான எய்தில் சிதாகாயத்து விளங்குகின்ற சிதம்பரநாதன் வெளிப்படுவன் இவ்விடத்தில் ஞானசம்பந்த பெருமான் ஞானப் பாலுண்ட காட்சியில் விளக்கியதை காண்க.

சிவ முதூறும் - சிவமுது சுரக்கும் - உச்சந்தலையில்
இருந்து உள்ளங்கால் வரை ஓரின்பம் பரவும்
அப்போது சிவஞானம் உண்டாகும்.

"அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்னும் மணிவாசகப் பெருமாள் வாக்கையும் வைத்து காண்க,

அப்படி இறைவனை கண்டிருக்கும் போது தானும் சிவனும் இரண்டு என்கிற நிலை எய்தும், அப்போது சிதம்பரநாதன் காட்சி வழங்குவன்

திருமூலர் திருமந்திரம் நான்காம் தந்திரம் ஏரொளிச் சக்கர பகுதியில் எழுத்துக்களைப் பற்றி அருளுகிறார். அது

திருமந்திரம் 1240:-

அம்முதல் ஆறும வ்வாதி எழுத்தாகும்
அம்முதல் ஆறும வ்வம்மை எழுத்தாகும்
அம்முதல் நாலும் இருறகு வன்னியே
இம்முதலாகும் எழுத்தவை எல்லசம்.
அகரம் முதல் விந்து வரையுள்ள ஐந்து எழுத்தும்
சிகாரமும் சிவபெருமானுக்குரிய எழுத்தாகும்
அதன் வழித்தாகிய வகரம் சத்யாக்ஷரமாகும்

அம்முதல் நாலாம் எழுத்து வன்னி எழுத்தாகும்
எழுத்துக்கள் யாவும் இவ்வண்ணம் முதன்மை பெறும்
அம்முதல் ஆறு - அ,வு,ம், விந்து நாதம் ஆகிய ஐந்தும்
சிகாரமாகிய ஆறெழுத்தும் சிவாக்கரங்கள் ஆகும்.

திருமந்திரம் நான்காம் தந்திரம் நவாக்கரி சக்கரம் பகுதியில் இறைவன் திருவைந்தெழுத்தாக எழுந்து நமக்கு காட்சி வழங்குவது பற்றி விளக்கம் தரப்படுகிறது.

*திருமந்திரம் - 1381*

மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்
விண்ணில் எழுந்து சிவாய நமவென்று
கண்ணில் எழுந்து காண்பரிதென்று கொல்
கண்ணில் எழுந்தது காட்சி தர என்றே''

மூலாதாரத்தில் எழுந்த அகார உகார ஒலிகள் சமட்டியாகிய பிரணவமே. ஆகாயமாகிய ஆக்ஞையில் சென்று சிவாய நம என்னும் வைகரி வாக்காக கட்டிலஞயிற்று. ஆகவே காண்பதற்கு அரிதன்று. அங்ஙனம் அந்நாதம் ஐந்தெழுத்தாக எழுந்தது ஆன்மாக்களாகிய நமக்கு காட்சி வழங்குதற்காகவே என்க.

சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தின் வடிவம் பயனும் திருமூலர் உணர்த்து நிமுக:-

திருவைந்தெழுத்தின் குறிப்பும் பொருளும் அதனை ஓதுங்கால் நிற்கும் முறைமையும் திருமூலர் கூறுகிறார்:-

திருமந்திரம்:-

சிவன் சத்தி சீவன் செருமல மாயை
அவந் சேர்த்த பாசமல மைந்தகலச்
சிவன் சத்தி தன்னுடன் சீஞர் சேர
அவஞ் சேர்த்த பாசம் அணுகிலாவே.

சிகரம் முதலிய எழுத்துக்கள் முறையே: சிவன், சத்தி, உயிர், மலம் இவைகளை குறிக்கும் என்பதை பஞ்சாக்ஷர பத விளக்கத்தில் விரிவாக காண்க.

உயிர் ஐம்மலங்களும் நீங்கும்படி சிவன் சத்தி என்பவதற்ருேடு சேர்ந்து நிற்பின், வீண் செயல்களில் புகுத்தும் மலமும் அதன் வழி நிற்கும் மாயை வினைகளும் உயிரைப் பற்றி வலி இல்லனவாகும். மலம் ஐந்து-மலம். மாயை, வினை, மாயேயம், திரோதம் என்பன.

சிம்முதலாக (சிவாய நம) ஓதுங்கால் உயிர் அருளையும் அதன் முதலாகிய சிவத்தையும் சார்ந்து ஒழுக வேண்டும். அப்போது நம அகலும். மாயேயமும் ''ந''வில் அடங்கும் எனக்கொள்க.

திருமந்திரம் - 2661

சிவன் அருளாய சிவன் திருநாமம்
சிவன் அருள் ஆன்மாத் திரோதம் மலம் மாயை
சிவன் முதலாகச் சிறந்த நிரோதம்
பவம தகன்று பரசிவன் ஆமே.

திருவருள் உருவத் திருப்பெயரின் பொருள்கள் (சிவாயநம) சிவன், அருள், திரோதம், மலம், மாயை என்பவை. இப்பொருள் பயக்க சிவத்தை முன்னிட்டு சிவாய நம என்று உணர்ந்து ஓதின் சிவ (சிவம், சக்தி) சிறந்து அதன் கண் உயிரை அடங்கி நிற்கச் செய்யும் மறைப்பும் பவத்தைத் தரும் மலமும் நீங்கும். உயிர் முடிவில் பரசிவமாங் விளங்கும்

துரிய அருள் நிலையாகிய சிவயோகத்தைப் பயக்கும். ஆன்ம தரிசனம் ஆமாறு என உணர்த்துகிறது.

திருமந்திரம் - 2662

ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டல்
வாதிதனை விட்டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ்சிவரய மலமற்ற உண்மையே
மேற்சொன்ன பொருள் திரோதத் தரும் நம்மலம்

(ந. ம மலம்) முதலியவற்றை ஒழித்திட்ட பின் ஆதி எனப்படும் அத்திரோதையை விட்டு இறையருளும் சத்தியை சாரின் அதனுல் சிவ ஞானம் ஏற்படும் இது ''வா''வை குறிக்கும். பின் திருவருளோடு ஒன்று தலாகிய சிவயோகம் உண்டாகும் அதற்குரிய ஓதும் முறை ''ந''''ம'' நீக்கி சிவய என்பது. இது ஆன்மாவின் மலம் தீர்ந்த உண்மையை குறிக்கும். இதுவும் இதர

அதிகாரங்களும் ஞான நெறி சாதனைப் பற்றி கூறுவதால் இங்கு சரியை, கிரியை. யோகம் என்னும் தவநெறிகளை இணைப்பது பொருத்த மாக தோன்றவில்லை. இவைகள் முறையே சீலம், நோன்பு, செறிவு நெறியில் கூறப்படும் தசகாரியம் இப்பாட்டில் வந்துள்ள சிவஞான யோகம் ஞான நெறியில் கூறப்படும் தசகாரியங்களுள் ஒன்பதாவதாக உள்ள சிவயோகம் ஆகும். சிவரூபம் சிவதரிசனம் சிவயோகம் என்பதில் ''சிவ என்பது திருவருளையே குறிக்கும். சிவயோகம் என்பதில் அது அருளுக்கு முதலாகிய சிவத்தைக் குறிக்கும்.

பாசம் நீங்கி மலவாதனை நீங்காத நிலையில் தான் முதல் என நிற்றல் ஆன்ம ரூபம். அது திருவருள் உண்மையை உணர்தலாகிய சிவரூபத்தாற் கழியும். கழிந்ததும் சிவன் செயலை தன் செயல் எனக் கொண்டு எல்லாம் செய்தல் என முனைந்து நிற்றல் ஆன்ம தரிசனம். இது

திருவருட் செயலை எனது செயல் என்னும் செருக்காகும். நம் செயல் அன்று திருவருட் செயல் என உணர்தல் சிவதரிசனம். இந்த உணர்வால் ஆன்மதரிசனம் அறியாமையாய் கழியும் பின் திருவருளில் ஒன்றி உடனுதல் சிவயோகம் இது ஆன்ம சத்தியாகும். சிவாய என்னும் வாய்ப்பாடு சிவதரிசனத்தால் உண்மை உணர்தல்.

''தன்னுலே தனையுணர்ந்தால் தன்னையும் தானே கானும்'' என்னும் சிவப்ரகாச தொடரிலும் காண்க. உண்மை நெறி விளக்கம் நூலில் தச காரியம் காண்க.

ந-திரோதான சத்தி-அது மலமெல்லாம் ஒழிந்திட்டு தன் உண்மை இயல்பாகிய திருவருளாகவே விளங்கும் இது திரோதாயி கடுனையாதல் எனப்படும்.

திருவருட்பயன் - குறள் 62

> தித்திக்கும் கைக்கும் பால் தானும் திருந்திடு நாப்
> பித்தத்தின் தான் தவிர்ந்த பின்
> என்பதையும் வைத்து காண்க.

தூலபஞ்சாக்ஷரத்திற்கும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்துக்கும் பயன் வேறுபாடு திருமந்திரத்தில் அருளப்படுகிறது.

திருமந்திரம் - 2664

> நமாதி நனுதி திரோதாயியாகித்
> தமாதியதாய் நிற்க தானந்தத்துற்றுச்
> சமாதி துரியந்த மதாகமாகவே
> நமாதி சமாதி சிவவாதல் எண்ணவே

நமவை ஆதியாக உடையது நமசிவாய)

திரோதான சத்தியாய் (ந) நின்று கேவலசகலங்களில் உள்ள நனவு (ய) முதலியவைகளை பயந்து ஐந்தெழுத்திற்கும் முன் நிற்க,உயிர் அதன் வயப்பட்டு இறுதியில் நிற்கும்.

இது இப்படியிருக்க சிவாய என்னும் தூய ஐந்தெழுந்தை யான் சிவமாகிறேன் (சிவோஹம் அஸ்மி) என்னும் பெருமொழியின் பொருள் பட வைத்துக் கணிப்பின் சம நிலைத்துரிய அரிய அருள் நிலை உயிரின் உட்ம்பர்கும்படி நமவைக் கடப்பாய்

> ந.ம, ஆதி = நமாதி
> நனவு ஆதி - நனவு முதலியவைகள் - நனுதி
> தானந்தம் = யான் எனது என்பது அற்ற இடம்

"பரை உயிரில் யான் எனது என்ற நிற்றல் திருவடி" என்னும் உண்மை நெறி விளக்கம் வைத்தும் குமரகுரு ஸ்வாமிகள் "யான் எனது என்றற்ற இடம் திருவடி" எனும் வாக்கிலும் காண்க (கந்தர்கலி வெண்பா)

திருமந்திரம் - 2752

மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அமைப்பும் அனலுடன் கையும்
கருவின் மிதித்த கமல பாதமும்
உருவில் சிவாயநம என ஓதே

பாடலில் அப்பும் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் 'அப்பும் என்பது தவறு அமைப்பும் என்று இருத்தல் வேண்டும்' என்று என் குரு நாதர் வாக்கு. எனவே அப்பும் என்பதற்கு பதிலாக அமைப்பும் என்று பாடலில் காட்டப்பட்டுள்ளது. கூத்தபிரான் திரு உருவில் துடி மருவும், கையில் சிகரமும், நிலைபெற்ற வீசும் இடது திருக்கையில் வகரமும், அனலுடன் கூடிய இடது திருக்கை திருவை அளிக்கும் நகரமாகும். முயலகன் மேல் ஊன்றிய திருநிலையை உண்டிய சீர்பாதம் மகரம், யகரம், ஆர்க்கும் யகரம், அபயகரம் ஆகும். இவை முறையே சிவாயநம என்னும் ஐந்தெழுத்துக்களாம் என செபிக்க. மேலும் விவரங்களை 'ஆடல் வல்லானும் பஞ்சாக்ஷரமும்' என்னும் தலைப்பில் காண்க.

வள்ளல் பெருமான் பல பாடல்களில் திருநீற்று பெருமையை சொல்லி சிவாயநம என்றிடு நீரே என்று அருளுகிறார்.

அருட்பா 834 - 844 பாடல்களில் காண்க

அப்பர் பெருமான் — (4ம் திருமுறை - 918)

கருவாய்க் கிடந்துன்கழலே நினையுங் கருத்துடையேன்
உருவாய் தெரிந்துன்றன் நாமம்பயின்றேன் உனதருளால்
திருவாய்ப் பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப் புலியூரானே

கருவிற் கிடந்து உன் திருவடியையே நினைக்கின்ற காதல் உடையேன்.

கருதல் என்பதன் மருவே காதல் (என் குருநாதர் உரை)

உருவாய் தெரிந்து — கருவின் நீங்கி வெளிப்படற்குரிய உருவமாய் தெரிந்து

தெரிந்து — தெரிதல் - ஆராய்தல் - தேர்தல்

நாமம் ஆகிய ஐந்தெழுத்தில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு
உருவெனத் தெரிந்து செபிக்கின்றேன்

உருவாய்த் தெரிதல் — செபித்து உணர்தல்
செபித்தலே உருவேற்றுதல் என்பர்

நாவால் சொல்லி பயிலப் பெற்றேன். நாவினுக் கருங்கலமாகவும் படைக்கலமாகவும் ஆக்கிக் கொண்டேன். திருநீறு திருவாகிப் பொலியும்வண்ணம் சிவாயநம என்று சொல்லிப் பயிலப் பெற்றேன். அதனை அழகுற பூசினேன். அடியேனுக்கு சிவகதி தருவாய் திருப்பாதிரிப் புலியூரானே.

திருமந்திரம் :

மருவும் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த யோகமும் ஞானமுமாகும்
தெருள்வந்த சீவனர் சென்றிவற்றாலே
அருள்தங்கி அச்சிவமாவது வீடே

உயிர்கள் சிவனை அடைவதற்கு வாயிலாக உள்ள 'சிவாய' என்ற மூன்றெழுத்துக்கள் உயிர்கட்கு உயிரும் கிடைப்பதற்கரிய யோகமும் ஞானமும் சிறந்து நிற்பன.

இவ்வுண்மையை உணர்ந்து பரிபாகம் பெற்றதால் நகர மகரங்களில் இருந்து நீங்கி யகரமாய் நின்ற உயிர், வகரமாகிய அருளில் தங்கி பின் சிகரமாகிய சிவத்தை அடைந்து அதுவாய் விடுதலே வீடுபேறும்.

'மாய நட்போரையும்... ஏயுவதே நிம்மை' என்னும்
பட்டினத்தடிகள் பாட்டிலும் இதை காண்க.

திருமந்திரம் - 966

சிவாயவொடவ்வே தெளிந்துளத்தோதச்
சிவாயவோடவ்வே சிவனுருவாகும்
சிவாயவோடவ்வும் தெளியவல்லார்கள்
சிவாயவோடவ்வே தெளிந்திருந்தாரே

சிவாய என்னும் மூன்றெழுத்தை 'ஔ' என்னும் வித்தெழுத்தோடு ஒரு மந்திரமாக தெளிந்து அங்ஙனமே ஓதினல் அம்மந்திரமே சிவனது வடிவாய் விளங்கும்.

திருமந்திரம் - 965 :

சிகார வகார யகாரமுடனே
நகார மகார நடுவுறநாடி

ஒகாரமுடனே ஒருக்கால் உரைக்க
மகார முதல்வன் மதித்து நின்றானே

மேற்சொன்ன தூலபஞ்சாக்ஷரத்தில் திருமந்திரம் 659 என்பதின் பொருளே இதன் பொருள் ஆகும். அங்கு நகார மகார முதலாக நிற்கும் ம ந் தி ர த் தை ஓதும் முறை கூறப்பட்டது. இங்கு சிகார வகாரத்தை முதலாக கொண்டு ஓதும் முறையும் பயனையும் சிறப்பை யும் கூறுகிறது.

திருமந்திரம் - 966:

நம்முதல் ஓரைந்தின் நாடும் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முதல் உள்ளே தெளிய வல்லார்கட்கு
தம் முதலாகும் சதாசிவன் தானே

நகார முதலாக நின்ற ஐந்தெழுத்து (நமசிவய) மந்திரத்தால் நினைத்த செயல் கைகூடும். ஏனெனில் ஆன்மாக்களுக்குப் பயனை விளை விக்க கூடிய வினைகள் அதில் அடங்கியுள்ளது.

சிகர முதலாக நிறை 'சிவாய'ல் இவை இல்லாததால் அதனை தெளிந்து ஓதவல்லார்க்கு உண்மை முதல்வனை சதாசிவமூர்த்தி தலைவ னாய் நிற்பன். அபரமுத்தி பெரும் பயன் உளதாகும். உண்மை விளக்கம் "நம் முதலாக ஓதின்அருள் நாடாது சிம்முதலாக ஓது நீ" என்னும் வெண்பாவிலும் காண்க.

திருமந்திரம் - 967:

நவமும் சிவமும் உயிர்பரமாகும்
தவம் ஒன்றிலாதன தத்துவமாகும்
சிவன்ஒன்றி ஆய்பவர் ஆதலால்அச்
சிவம்என்ப தானும்எனும் தெளிவுற்றதே

நவம் — பிரணவம்

பிரணவமும், சிவமந்திரமும் ஆகிய இரண்டுமே உயிர் சிவமாவ தற்குரிய சாதனமாகும். அது அல்லாமல் பிறவற்றோடு பொருந்தி நிற்பனவெல்லாம் கருவிக் கூட்டத்தினுள்ளே நிற்பனவே. சிவத் தொடு ஒன்றிய நிலையில் எல்லாவற்றையும் காண்கின்ற அனுபூதி செல்வர்கள் தமக்குதாம் சிவமேயாய் நிற்கும் தெளிவு உண்டாகும். அது அச்சிவமந்திரத்தாலே என்றே தெளிவுறுவார்கள்.

சிவ மந்திரம் — சிவ என்பது சிவம் — சிவ



அத்தியாயம் – 6

# அதி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம்

இதை மீநுண் ஐந்தெழுத்து என்றும், காரண பஞ்சாக்ஷரம் என்றும், முத்தி பஞ்சாக்ஷரம் என்றும் சொல்லப்படும். உயிரைக் குறிக்கும் யகரம் நடுவில் நிற்க பதி எழுத்தும் அருள் எழுத்தும் ஆகிய சிகரம் வகரம் ( சிவ ) முன்னும் பின்னுமாக நிற்க சிவயசிவ என்று ஓதுவது காரண பஞ்சாக்ஷரம். சிவயவசி என்பதும் ஒருமுறை. சிவயவசி என்பதில் சிகரம் வகரம் முன்னும் பின்னுமாக நிற்கிறது. இக்காரண பஞ்சாக்ஷரம், அதி சூக்கும பஞ்சாக்ஷரம், முத்தி பஞ்சாக்ஷரம் எனப் பெறும் உயிர் நடுவே நிற்க சிவமும் சக்தியும் இருபுறமும் இருப்பதால் இது இருதலை கொள்ளி, இருதலை மாணிக்கம் என வழங்கும்.

இதை கண்ணுடைய வள்ளலார் :

ஒருதலைமாணிக்கம் முன்னர் எனக்கு உபதேசம் செய்தான்
இருதலைமாணிக்கம் பின்னரும் பேசி யிருளறுத்தான்
இரிதலைமற்றை அயன்தலைகுட்டிய கங்கையின் முவெரிதலை
சூலத்தோடு நடிப்பான் கச்சியே கம்பனே

காரண பஞ்சாக்ஷரத்தில் நகர மகரங்கள் (திரோதம் - மலம்) இல்லை. சிகார வகாரங்களே (சிவம், சக்தி, உயிர்) உள்ளன. சிவயசிவவில் உயிர் நடுவில் உள்ளது. சிவமும் சத்தியுமாகிய சிகார வகாரங்கள் அதன் இருதலையும் (இருபக்கமும்) இருக்கின்றன. உயிர் நகரமகரங்களாகிய திரோதம் மலங்களின் நீங்கி வகாரமாகிய அருட் சத்தி மூலம் சிகாரமாகிய சிவத்தை அடைவதே பஞ்சாக்கர அனுபவம். இதை பஞ்சாக்ஷர பதி பசு பாச விளக்கப் பாடலொன்றும், கண்ணுடைய வள்ளலார் பாடலொன்றும் விளக்குகின்றன.

கண்ணுடைய வள்ளலார் :

அஞ்சக்கரமின்றி வேறொரு மந்திரமாயினில்லை
அஞ்சில் இறை அருள் ஆவித் திரோதனசில் ஆணவம்
மற்றஞ்சில் இரண்டைஅருளால் அகற்றிடில் ஆவிஅந்த
அஞ்சில் இரண்டை அணையும் என்றான் கச்சியேகம்பனே

அஞ்சில் இரண்டை அருளல் அகற்றிடில் ஆவி அந்த அஞ்சில் இரண்டை அணையும்

அகற்ற வேண்டிய இரண்டு — நம
அணைய வேண்டிய இரண்டு — சிவ

யகரமாகிய உயிர் ந ம அகற்றி சிவ அணைந்து ''சிவய''வாய்த் திகழ வேண்டும். சிவாய என்னும் இக்காரண பஞ்சாக்கரம் அப்பரால் அருளப் பெற்று அடங்கன் முறையில் தமிழ் வேத ஹிருதயமாக திகழ்கிறது.

அப்பர் - திருப்பாலைத்துறை குறுந்துகை :-

விண்ணிணுர் பணிந்தேத்த வியப்புற
மண்ணிணுர் மறவாது சிவாயவென்று
எண்ணிணுர்க் கிடமாவெழில் வானகம்
மண்ணிணுரவர் பாலைத் துறையாரே

திருமந்திரம் :

ஆறுறு அகன்று நமவிட் டறிவாகி
வேறுன தான யகரமாய் மிக்கோங்கி
ஈறுர் பரையின் இருளற்ற தற்பரன்
பேறுர் சிவாய அடங்கும் பின்முத்தியே

ஓதிய நம்மலம் எல்லாம் ஒழிந்திட்டல்
வாதிதனை விட்டிறை யருள் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதும் சிவாய மலமற்ற உண்மையே

சிவாயநம என்று ஓதுங்கால் மலங்கள் ஒழிந்திடும். ஆதியிருளாகிய நகரமும், அதனுல் செலுத்தப்படும் மகரமும், இவை இரண்டும் நீங்கிய இடத்து சிவ என்பது அதில் அமையும். அப்போது சிவயசிவ என அமையும். இதனுல் குற்றமற்ற சிவ உருவ வாயிலாய் சிவச்செறிவு ஏற்படும். 'சிவயசிவ' என்னும் மறைமலம் அகன்று நலம் ஓங்கும் உண்மை நிலையாகும்.

நம் மலம் — ந - ம - மலங்கள்

திருமந்திரம் - 2664 :

நமாதி நனுதி திரோதாயி ஆகித்
தமாதியதாய் நிற்க தானந்தத் துற்றுச்
சமாதி துரியந் தமதாக மாகவே
நமாதி சமாதி சிவவாதல் எண்ணே

நகராதி ஐந்தெழுத்து நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப் படக்கம் ஆகிய ஐந்தையும் நிகழ்த்தும். திரோதாயி அதை தூண்டி தொழில்படுத்தும். அதுவே அஞ்செழுத்துக்கு ஆதியாய் இருக்கும்.

ஆவி அம்முடியினை எய்தி அகநிலைச் செயலராகி துரியமே தன் உடம்பாக நிற்கும். நிற்கவே சமாதிக்கு சமமாக சிவ முதலாக தோன்றும். தோன்றவே சிவயசிவ எனப்படும். அதுவே சிறப்புடையது ஆகும்.

திருமந்திரம் :

சிவாயநம எனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமைய தாக்கி
சிவாய சிவ வென்றென்றே சிந்தை
அவாயம் கெட நிற்க ஆனந்தமாமே

சிவாய சிவ என்று சிந்தையில் வைத்தால் அபாயங்கள் கெட்டு ஆனந்தமாக நிற்றல் கைகூடும் என்று அருளப்படுகிறது.

திருமந்திரம் - 958 :

சிவாய வொடவ்வே தெளிந்து ளதேோதச்
சிவாய வொடவ்வே சிவனுருவாகும்
சிவாய வொடவ்வுந் தெளிய வல்லார்கள்
சிவாய வொடவ்வே தெளிந்திருந்தாரே

'சிவாய'வில் முதலாய 'சிவ' என்பதையும் கூட்டி சிவாயசிவ என்பது ஆகும்.

ஐந்தெழுத்தின் அருள் முறை :

சிவயநம - சிவ என்ற இரண்டு எழுத்தும் முழு முதற்பொருள் சிவத்தையும், அவனுக்கு திருமேனியாகத் திகழும் திரு அருள் ஆற்றலையும் குறிப்பன. 'ய' ஆவிகளை குறிக்கும் பொருள் மறை. இது வருமொழி. இது நிலை மொழியாகிய சிவத்துடன் புணர்ந்து சிவய என்று ஆகும். பின் 'ந' வருமொழியாக வரும், இது நடப்பாற்றல். இவ்வாற்றல்தான் ஆவிகளை உலகியலில் புகுத்தி ஆட்டும் அருள். இதுவும் சேர சிவயந என்றாகும். இவை நான்கும் நிலைமொழியாக நிற்கும். 'ம' வருமொழியாக வரும், அப்போது சிவாயநம என்று ஆகும். இதுவே உலகியல். ஓவாது உலகியலில் உழலும் உயிர்கள் வீடுபேற்றை எய்துதல் வேண்டும். அதற்கு நடப்பாற்றல் வனப்பாற்றலாக திகழ்தல் வேண்டும். அப்படி திகழும்போது 'சிவயசிவ' என்று ஆகும். இதில் சிவய என்பது மூன்று எழுத்துக்களும் நிலைமொழியாக நிற்கச் சிகரம் வருமொழியாக வரும். அங்ஙனம் வரும் சிவம் (சிகரம்) 'ய'கரத்தைப் புணரும். புணர்ந்து 'ய'கரமாகிய ஆவிக்குத் திருவடிப் பெருவாழ்வைச் சிகரமாகிய சிவமே நல்கி அருளும். 'சி'கரம் - 'ய'கரத்தைப் புணருமாறு செய்வது சிவயசிவ என்னும் திருவைந்தெழுத்து. இது ஈற்றில் காணப்படும். இடம் முன்னுகிய 'ய'கரமேயாம்.

இப்புணர்ச்சியின் முறையை பட்டினத்தடிகள் வேறு அத்யாயத்தில் சொல்லப்பட்ட மாய நட்போரை என்ற பாட்டில் :

'தாயுடன் சென்று பின் தாதையை கூடி பின் தாயை மறந்து ஏயுவதே நிட்டை' என்று அருளுகிறார்.

சிவயநம என்பது இயல்பாம் என்னும் உண்மை வரும்

திருமூலர் பாட்டில் உணர்க :

சிகார வகார யகாரமுடனே
நகார மகாரம் நடுவுறநாடி
ஒகாரமுடனே ஒருகாலு றைக்க
மகாரமுதல்வன் மதித்து நின்றானே

இச் சிவயசிவ என்பது முன் சொல்லியபடி மீநுண் ஐந்தெழுத்து என்றும், அதிசூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் என்றும் அருளப்படுகிறது.

இதை வரும் திருமூலர் பாட்டால் அறிக :

சிவாயநம் எனசித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமையதாக்கி
சிவாயசிவ் என்றன்றே சிந்தை
அவாயம் கெடநிற்க ஆனந்தமாமே

இவ்விதம் சிவாயநம என்பது சிவயசிவ என ஆகிறது.

மேலே சொல்லியபடி சிவயசிவ என்பதில் 'ய'கரமாகிய உயிர் மேற் சொன்னவாறு 'வ'கரமாகிய திருவருளைப் புணர்ந்து நிற்குங்கால் 'சிவ' என்பது ஆகும். பின் திருவருள் (வகரம்) சொரூபத்தோடு சிகரத்தை யகரம் புணர்ந்து சிவமாக நிற்குங்கால் அது 'சி' என்று ஓரெழுத்தில் நிற்கும். திருவைந்தெழுத்தை மேற்சொன்னவாறு உணர்ந்து ஓதினால் அதன் சிறப்பை மட்டும் அல்லாமல் சிவபதவி அடையலாம். அதன் ஆனந்தத்தை பெறலாம் என்பதில் யாதொரு ஐய்யமும் இல்லை.

திருமந்திரம் – 872 :

ஆனந்த மூன்றும் அறிவிரண் டொன்றாகும்
ஆனந்தஞ் சிவாய அறிவார் பலரில்லை
ஆனந்த மோடும் அறியவல் லார்கட்கு
ஆனந்த கூத்தாய் அகப் படுந்தனே

இறவாத இன்ப நிலையும் அகர உகர மகரங்கள் என்னும் மூன்றும், அறிவாற்றல், அறிவு என இரண்டாம்.

| | | | |
|---|---|---|---|
| அறிவாற்றல் | — | ஆணை - சக்தி | (வ) |
| அறிவு | — | சிவம் | (சி) |

இவற்றுடன் யகரம் ஒன்று கூட்ட அறிவு (சிவய) மூன்றாகும். இம் மூன்றையும் அறிவார் பலரில்லை, சிலரேயாவர். இந்த இன்பத்தினை அறிபவர்களுக்கு அந்த இன்பம் வெளிப்பட்டு அகப்படும்.

| | | |
|---|---|---|
| கூத்தாய் அகப்படுதல் | — | இன்பாய் நுகர்தல் |
| ஆனந்தம் மூன்றும் | — | அ, வு, ம் |
| அறிவு இரண்டு | — | சக்தி (வ) - சிவம் (சி) |
| ஒன்றாகும் ஆனந்தம் | — | சி (சிவன்), வா (சக்தி) ய (ஆன்மா) |

திருமந்திரம் - 873 :

படுவதிரண்டும் பலகலை வல்லார்
படுவதோங்காரம் பஞ்சாக் கரங்கள்
படுவது சங்காரத் தாண்டவப்பத்தி
படுவது கோணம் பரந்திடும்வாறே

சேர்ந்திருக்கும் அம்சமந்திரம் (சிவ) இரண்டும் ஓதுவார் பலகலை வல்லவராவார். இந்த இரண்டும் அறிவும், ஆணையுமாக சொல்லலாம். அறிவே சிவம் - ஆணையே சக்தி. இவ்விரண்டின் விரிவே ஓங்கார பஞ்சாக்ஷரங்கள். இம்முறை குறிப்பதே சங்கார தாண்டவம். இத் தாண்டவத்தின் முறைமையால் எல்லா இடங்களிலும் சிவம் பேறு பரவும் என்க.

பரவும் — வியாபகம் ஆகும்
சங்காரம் — பேரொடுக்கம்
படுவது — சொல்லப்படுவது
பத்தி — முறைமை

வாறு — பேறு - சிவப்பேறு
இரண்டும் — இரண்டு ஹம்ச மந்திரங்கள்
கோணம் — புலம் - திசை

திரும்ந்திரம் - 878:

இணையார் திருவடி எட்டெழுத்தாகும்
இணையார் கழலினை யீரைந்தாகும்
இணையர் குழலினை ஐம்பத்தொன்றாகும்
இணையார் சுழலினை ஏழாயிரமே

இணையில்லாத திருவடிகள் இரண்டும் எட்டெழுத்தாகும்.

எட்டெழுத்து : ஓம் - ஆம் - உம் நமசிவாய

அத்தகைய கழலிணைகள் இருவகை ஐந்தெழுத்தாகும்.

இருவகை ஐந்தெழுத்து : 1) சிவாயநம 2) சிவயசிவ

இவையே ஐம்பத்தொன்றெழுத்தாகும்.

ஏழாயிரம் என்பது எழுவகை திருவருளாற்றலாகும்.

ஆற்றல் ஏழு : 1) கலைமகள் 2) அலைமகள் 3) உலைமகள் 4) சலமகள் 5) மலைமகள் 6) நிலைமகள் 7) திலைமகள் என்பது.

அவ்வெழுவகை ஆற்றலின் தொழில்கள் முறையே :
1) படைத்தல் 2) காத்தல் 3) துடைத்தல் 4) மறைத்தல் 5) அருளல் 6) கலப்பித்தல் 7) கணிப்பித்தல் என்பது.

அவ்வெழுவகை ஆற்றல்களும் முறையே :
1) வாணி 2) திரு 3) உமை 4) மகேசை 5) மனோன்மணி 6) விந்து 7) சக்தி எனக் கூறப்பெறும்.

திருமந்திரம் - 958 ;

சிவாய வொடவ்வே தெளிந்துளத்தோதச்
சிவாய வொடவ்வே சிவனுருவாகும்
சிவாய வொடவ்வுந் தெளியவல்லார்கள்
சிவாய வொடவ்வே தெளிந்திருந்தாரே

அவ்வும் சிவாய என ஓதுவார் சிவத்தொடு இரண்டற தெளிந் திருப்பர். சிவாய எனும் மந்திரத்துடன் அவற்றையே இணைத்து சிவய சிவ எனவோத சிவசக்திகளோடு யகாரமாகிய ஆன்மாவும் சிவனுருவம் பெறும். ஆன்மா சிவசக்திகளோடு கலந்திருத்தலை அறியவல்லார்கள் சிவாயசிவ என்பதே மேலான மந்திரம் என தெளிந்தார் ஆவர்.

அவ்வே என்பதற்கு ஹம்ச மந்திரம் எனப் பொருள் கொண்டு சிவாயவொடு அவ்வே என்பதற்கு சி வ ா ய ஹ ம் ச என்று பொருள் சொல்வாரும் உளர்.

திருமந்திரம் - 2665 :

அருள்தரு மாயமும் அத்தனும் தம்மில்
ஒருவனை ஈன்றவள் உள்ளுரு மாயை
திரிமலம் நீங்கி சிவாய என்றோதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வஞ் செழுத்தாமே

அருளாக மாறும் திரோதான சக்தியும், ஐந்தொழில் செய்யும் இறைவனும் தம்மில் கூடி உயிராகிய ஒருவனை இருள் மலமாகிய கருப் பையிலிருந்து வெளிப்படுத்துவதற்கு துணையாக நின்றவள் வைப்பு சக்தி என்ப்படும். மாயை அது நகாரத்தில் உள்ளுறுவது பின் அவ்வுயிர் மும்மலங்களினும் நீங்கிச் சிவாய என்று ஓதும். அப்படி ஓதுங்கால் சிவயோகம் படிக்கும். வினைகள் அருவாய் வந்து எய்தும் போது அதன் விளைவை உயிர் நுகராதபடி தீர்ப்பதும் அத்தூய எழுத்துக்களே ஆம். வரும் வினை தீர்க்கப்படுதலால் ஏறுவினையும் இல்லை என்று வரும்.

திருமந்திரம்:

சிவாயநம எனசித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமையதாக்கி
சிவாயசிவசிவ என்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்தமாமே

சிவாயநம என்னும் நாமத்தை சிந்தித்து மனதை ஒருமைப்படுத்தி தனக்கு ஒரு தீங்கும் வராதபடி தன்னை முதல்வனுக்கு அடிமையாக்கி பின் திரிமலத்தை தீர்த்து திருவருள் மேம்படும் பொருட்டும் கரணங்கள் ஒடுங்குவதன் பொருட்டும் முறையே சிவாய என்றும், சிவ சிவ என்றும் எண்ணி தன் முனைப்பு நீங்கும்படி நிற்பின் அருள் விளக்கமும் பேரின்பமும் உளவாம்.

இந்த முறையை சிவயசிவ எனவும் கொள்வர். குண்டலினி யோகப் பயிற்சியில் உள்ளவர்களுக்கு திருவருளை எய்துவிப்பதும் திருவைந்தெழுத்து என திருமூலர் உணர்த்துகிறார்.

திருமந்திரம் :

செஞ்சுடர் மண்டத்தூடு சென்றப்புற
மஞ்சணவும் முறைஏறி வழிக்கொண்டு
துஞ்சுமவன் சொன்ன காலத்திறைவனை
நெஞ்சென நீங்கநிலைப் பெறல்ஆகுமே

நடுநாடியில் ஞாயிறு மண்டலத்தூடு கடந்து அதன் உச்சியாகிய பன்னிரண்டு அங்குல புவில் தங்கும் யோகி மேற்கூறிய முறையில் சிவய சிவசிவ என்பதை மத்திமை வாக்கு வடிவில் நினைந்த போது அவன் இறைவனை தனக்கு நெஞ்சுபோல் உணர்ந்து நிலைபெறல் ஆகும். மஞ்சு அணவும் முறை ஏறி - மேகம் தன்னை தடவும்படி ஏறி. செஞ்சுடர் மண்டலத்தூடு சென்று ஏறி எனவும் பெறப்படும் என்றதால், அம்மலை மேரு அல்லது ஆதாரவேற்பு எனப்படும் - நடுநாடி எனப்படும்.

மஞ்சு அணவும், மலையின் உச்சியாதலால் நடுநாடியின் முடிவாகிய பன்னிரண்டு அங்குல முடிவு என்பதாகும். உயர்ந்த நூல்களின் குறிக்கோள் உயிரை சிவத்தோடு ஒன்றுவிப்பது என்பதை உணர்த்துகிறது.

பஞ்சாக்கரத்தை விட வேறொரு மந்திரம் இல்லை. சிவாயநம என்னும் பஞ்சாரம் முறை : இறை, அருள், ஆவி, திரோதம், ஆணவம் என்பவற்றை குறிக்கும் என்பதை முன்னமே பார்த்தோம். இந்த பஞ்சாக்கரத்தில் (சிவாயநம) ந, ம என்னும் இரண்டை (வா) அருளால் அகற்றினால் உயிராகிய யகரம் அஞ்சில் இரண்டாகிய 'சிவ' வை அணையும், அப்படி அணைந்து சிவயவாக திகழ வேண்டும்.

சிவய என்னும் இக்காரண பஞ்சாக்ஷரம் அப்பரால் அருள் பெற்று அடங்கண் முறையின் நடுவில் வேதத்திருநியமாக நிகழ்கிறது.

விண்ணினார் பணிந்தேத்த வியப்புறு
மண்ணினார் மறவாது சிவாயவென்று
எண்ணினார்க் கிடமாவெழில் வானகம்
பண்ணினா ரவர் பாலைத் துறையரே

— 5ம் திருமுறை - அப்பர் பெருமான்
திருப்பாலைத்துறை குறுந்தொகை

இதையே திருமூலர் கூறுகிறார் :

ஆறாறகன்று நமவிட் டறிவாகி
வேறானதானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார்ப்பணியின் இருளற்ற தற்பரன்
பேறாச்சிவாய அடங்கும் பின்முத்தியே

ஆறாறு அகன்று — 36 தத்துவங்கள் அகன்று

நம விட்டறிவாகி — அதனால் ந, ம விடப்பட்டு அறிவு பிரகாசமேயாகிறது

வேறானதானே யகாரமாய் மிக்கோங்கி — அறிவு பிரகாசம் ஆகி ஆன்ம சொருபம் மிக்கோங்கி

ஈறார் பணியின் இருளற்ற தற்பரன் — அதன்பின் அது திருவடிக் கீழ் அடங்கும்

இந்நிலையில் முன்னும் பின்னும் சிவ என்னும் ஈரெழுத்து நிற்கையில் யகரம் (சிவயசிவ) என்று நடுவுள் நிற்கும். இதுவே சிவயசிவ என்னும் செறிவு மந்திரமாகும். இதுவே 'உடையாளுன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதனால்' என்னும் திருவாசகத்தில் குறிப்பாகும். இது சிவயசிவ பஞ்சாக்ஷரத்தின் விளக்கம். சிவாய என்று நின்று பின் சிவயசிவ என்பது அத்திருவடியினால் பொறுத்தமுற ஆரா இன்பம் நுகர்ந்திருத்தல். இது திருவடி பேறென்க.

திருமந்திரம் :

ஓதிய நம்மலம் எல்லாம் ஒழிந்திட்டவ்
வாதிதன் விட்டிரையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ்சிவாய மலமற்ற உண்மையே

சிவாய நம என ஓதிவருங்கால் நகர மகாரமாகிய மலங்கள் ஒழிந் திடும். ஒழியவே, அவ்வாதி அருளாகிய நகரமும் அதனால் செலுத்தப் படும் மகரமும் ஆகிய இரண்டினையும் நீக்கிய இடத்து அங்கு திருவரு ளாற்றலுடன் கூடி சிவ எழுத்துக்கள் அமையும். அப்போது சிவயசிவ என ஆகும். இம்முறையே கணிக்கில் சிவயோகம் சித்திக்கும், சிவ னுருவாகலாம். சிவச் செறிவு கைகூடும். சிவயசிவ எனனும் மறை மலம் அகன்று நலமோங்கி நிற்கும் நிலையாகும்.

நம்மலம் எல்லாம் — நகர மகரங்களால் குறிக்கப்பட்ட எல்லா மலங்களும்

அவ்வாதிதனை — அந்த முதலில் உள்ள எழுத்துக்களாகிய ந, ம என்பவைகளை

## திருவம்பல வித்தையும் பெரும் பெயர்ப் பொருளும்

திருவைந்தெழுத்தே எல்லா மந்திரங்களுக்கும் மூலம் என்பது தெளிவு. அதன் விரிவே 15 எழுத்து வித்தையென்பதும்; சிவசக்தி யான்மகமாயுள்ள அம்மூல மந்திரங்களின் சம்மேளனமே திருவம்பல வித்தை என்பது. இங்கு வித்தை என்பதை ஏதோ ஜாலவித்தை என்று பொருள் கொள்ளக்கூடாது. வித்தை என்பது அறிவு. அவைகளைப் பற்றி அறிந்து தெளிவது. பெரும் பெயர் என்பது மகா வாக்கியம் இது ஒரு சொல், ஒரு மொழி, ஒரு வார்த்தை, மௌன மந்திரம், மோன வித்தை, சும்மா இருத்தல் என்றும் சொல்லப்படும்.

'பிரக்ஞா நம் பிரம்மம்' – அஹம் பிரம்மாஸ்மி, தத்துவமசி அய மாத்மா, பிரம்மம் என்பன முதலாகவரும் வேதாந்த மகா வாக்யமும்; சிவயோகம், சிவதத்துவமசி, சிவோகம் (ஸோகம்) என்பன முதலாக வரும் சித்தாந்த மகா வாக்யங்களும் பொருளால் ஒன்றேயாகும்.

சாந்தோக்கியம் முதலான உபநிடதங்களிலே உபதேசிக்கப் பெற்றுள்ள தத் த்வம் அசி என்னும் மகா வாக்கியமானது :

தத் — அது

த்வம் — நீ

அசி — ஆகின்றாய் அல்லது அதுவாக இருக்கின்றாய்

அது மூன்று பதங்களையுடையது.

1) முதல்வனுடைம தடத்தலக்கணம் எனப்படும் பொது வியல்பாகிய பதித்தன்மையும்

2) உயிர்களுடைய தடத்தலக்கணமாகிய பசுத்தன்மையும்

3) அவ்விரு பொருள்களுடைய சிறப்பிலக்கணம் எனப்படும் சொரூப நிலையாகிய அத்துவிததன்மை உணர்த்துவதாகும்.

அவ்வாறே அதி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் நிற்கும்.

1) சிகாரம் — தத்பத பொருளாகிய பதியையும்

2) வகாரம் — துவம்பத பொருளாகிய பசுவையும்

3) வகாரம் — அசிபதப் பொருளாகிய அவ்விரு பொருள்களின் அத்துவிதத்தை அறிவிப்பது ஆகும்

இந்த அதிசூக்ஷ்ம பஞ்சாக்ஷரமானது காரண பஞ்சாக்ஷரமெனவும், முத்தி பஞ்சாக்ஷரமென்றும் சொல்லப்படும்.

இங்ஙனமே பஞ்சதசாக்ஷரி வித்தையுள் நிற்கும் பொருள்கள் மூன்றும் முறையே 1) தத்பதம், 2) த்வம்பதம், 3) அசிபதம் ஆகிய மகா வாக்கியத்தின் பொருளைக் குறிக்கும். திருவைந்தெழுத்துள் சிகாரத்தையும், மகா வாக்கியத்துள் தத்பதத்தையும், அவற்றின் பொருளாயுள்ள பதியை (சிவம் - பிரம்மம்) உணர்த்தும்.

மூன்று பதமாவது அது என்றும், நீ என்றும், ஆனாய் என்றும் கூறும் பதங்களாகும். அவை பரமும், சீவனும் அவ்விரண்டும் ஒன்றுதலும் ஆதலின் இம்மூன்று பதத்தின் கண்ணே தத்துவங்களைக் கடந்த பொருளை உணர்த்தும் ஆகமங்கள் எல்லாம் விரியுமாறு உணர்ந்து கொள்க. (தொல்காப்பியம் - 1133 - நச்)

''விந்து தானமாகிய புருவ நடுவில் சிகார வகார யகாரங்கள் மூன்றும் முறையே தத்பதம் பொருளும், த்வம்பதம் பொருளும், அசிப் பதப் பொருளுமாம் முறைமையின் அவ்வஞ்செழுத்தால் சிவோகம் பாவனை செய்யின்'' சிவ-வெண்பா - 59

இதை நாம் ஞானசம்பந்தர் பெருமான் வாழ்க்கையில் வைத்துப் பார்ப்போம். பெருமான் ஞானப்பால் உண்ட காட்சியை நினைவு கூர்ந்து பார்ப்போம். சிவபாத ஹிருதயர் பெருமானை தான் குளிக்கும் போது குளக்கரையில் நிற்க வைத்துச் சென்றார். அப்போது சம்பந்தர் பெருமானுக்கு பசி அதிகம் ஆகியது - அழுதார் அதற்கு செவிசாய்த்து உமையம்மை இருவரும் காட்சி தந்து பெருமானுக்கு பசி தீர ஞானப்பால் கொடுத்து அருளுகிறார் என்பது புராணம். இதைச் சற்று ஆராய்வோம். சிவபெருமான் 'சி' ஆகவும் உமையம்மை ''வ'' ஆகவும், சிவபாத ஹிருதயரை ந. ம ஆக எண்ணவும், ந, ம நீங்கி பெருமான் தனியாக நிற்கின்றார். ''ய'' ந, ம நீக்கம் ஆகியுள்ளது. அப்போது பெருமானுக்கு பசி அதிகம் ஆகிறது. அதுதான் ஞானப்பசி.

நம நீக்கம் பெற்றதும் ஞானம் உண்டாகிறது. அப்போது சி, வா உடன் "ய" ஒ சேருகிறது. அந்த நேரத்திலே சிகாரத்தின் தரிசனம் ஏற்படுகிறது. அப்போது சிகாரம் மட்டும் நிற்கிறது. சிகாரத்தை வகாரத்தின் மூலம் தான் அடைய முடியும். ஆகையால் தான் பெருமானுர் தனக்கு பால் தந்தது யார் என்று அவர் தகப்பனுர் கேட்க தனக்கு பால் கொடுத்தது சுட்டி அறிய முடியாத இறைவனை "தோடுடைய செவியன்" என்று சுட்டிக் காட்டுகிறுர். ஞானப்பால் கொடுத்ததோ அம்மை ஆனுல் எம்பெருமானுர் தோடுடைய செவியன் என்று இறைவனை சுட்டிக்காட்டுகிறுர். அது வகாரத்தால் சிகாரத்தை "ய" அடையும். அந்த நிலையில் (சி) சிவம், வா (உமையம்மை, ய (பெருமானுர் ஆகிய மூன்றும் சேர்ந்து உள்ளுமட்டாமல் சூழ்ந்தும் உள்ளது சிகாரம், வகாரம், யகாரத்தின் இருபக்கமும் சூழ்ந்தது சிவய சிவ என்று சிவய சிவ என்று அமைகிறது.

இதை இன்னும் கீழ்வரும் கருத்துக்களிலும் விளக்கம் காணலாம்.



அத்தியாயம் - 7

## மகா காரண பஞ்சாக்ஷரம்

சிவ சிவ என்பது மகாகாரண பஞ்சாக்ஷரம் எனப்படும். தூல பஞ்சாக்ஷரம் நமசிவாய என்பதை பொருள் உணர்ந்து ந, ம – க்களின் ஆதிக்கத்தை குறித்து அதை கடைசியில் வைத்து ஒதினுல் சிவாயநம என்ற சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் ஆகிறது. பின் சிவாயநம என்பதை ஓதி வந்து ந - ம க்களில் இருந்து நீங்கினுல் சி - வ உயிராகிய 'ய'வவின் இருபுறமும் சூழும், அப்போது சி வ ய சி வ காரண பஞ்சாக்ஷரம் ஆகிறது. 'ய'காரமாகிய உயிர் பின் அருள் சொரூபமாகி விடுகிறது. அப்போது யகரமாகிய உயிர் அருளோடு (வ) இணைந்து விடுகிறது. இதை சிவசிவ என்ற மகாகாரண பஞ்சாக்ஷரம் உணர்த்துகிறது.

திருமூலர் திருமந்திரத்தில்;

சிவசிவஎன்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவவாயுந் தேர்ந்து அடங்கச்
சிவசிவவாய தெளிவி னுள்ளார்கள்
சிவசிவ வாகுந் திருவருளாமே

பக்குவமற்றவர்கள் சிவ சிவ என்று தெளிய மாட்டார்கள். சிவ சிவவென்று இரேசகம், கும்பகம் இவைகளோடு இடையறாது கணித்தால் அடங்கா மனமும், ஒடுங்கா உயிர், ஒடுங்கா உயிர்ப்பும் அடங்கி ஒடுங்கும் என்று அருளுகிறார்.

சிவசிவ என்னும் மறை உயிர்ப்பும், மனமும் அடங்க கணிப்பார்க்கு ஐம்புலக் கதவை அடைத்து கருவிகளை ஒடுங்குவிக்கும். பின் அதன் வாயிலாக சிவயோகம், சிவபோகம் என்னும் திருவருட்பேறு சிவபேறுகளை முறையே நுகர்விக்கும். வேறு உபாசனைகளை பின்பற்றுவோரை ஊமர் ஆவர்.

மேலும் திருமூலர் திருமந்திரத்தில் சிவசிவ என எண்ணியிருப்பதன் பயனை உணர்த்துகிறார்.

> சிவசிவ என்கிலர் தீவினையாளர்கள்
> சிவசிவ என்றிட தீவினைமாளும்
> சிவசிவ என்றிட தேவருமாவர்
> சிவசிவ என்றிட சிவகதிதாமே

என்று மகாகாரண பஞ்சாக்ஷரத்தை பற்றி பேசுகிறார். மற்றும் திருமூலர் பஞ்சாக்ஷரம் ஓதும் முறையையும், சிந்தித்து நிற்கும் முறையையும் உணர்த்தி அதன் பயனையும் அருளுகிறார்.

மேலும் திருமூலர் திருமந்திரத்தில் :

> நமஎன்னும் நாமத்தை நாவில் ஒடுக்கிச்
> சிவம்என்னும் நாமத்தை சிந்தையுள்ள ஏற்றப்
> பவமது தீரும் பரிசு மதற்றால்
> அவமதி தீரும் அறும் பிறப்பன்றே

சிவம் (சிவ) என்னும் நாமத்தை சிந்தையில் அழுத்தமாக பதித்தல் வேண்டும். நமவை நாவில் ஒடுக்க வேண்டும். அதனால் அவமதி (அஞ்ஞானம்) தீரும் - பிறப்பும் அறுமன்றே. சிவசிவ என்று சதா காலமும் சிந்தித்து வந்தால் அஞ்ஞானம் நீங்கும் - பிறப்பும் அறும். எனவே பஞ்சாக்ஷரத்தில் நம அழுத்தி வைக்கப்பட வேண்டும். உயிரை கண்டத்தில் தேக்கி வைக்க வேண்டும்.

வள்ளல் பெருமான் அருட்பா :

> நாடும் நமசிவாய நில்ல சிவாயநம
> கூறும் சிவயசிவ கூறிமேல் - நாடும்
> சிவசிவ என்றுண்ணுவர் சீலம் முதல்நான்கில்
> தவநெறி சார் செந்தமிழர் தாம்

அருட்பா: வகார வெளியில் சிகார உருவாய்
மகாரத் திருநடம் நான்காணல் வேண்டும்
விகார உலகை வெறுப்பாயோ தோழி
வேறுகி என்சொல் மறுப்பாயோ தோழி

வகாரவெளி — அருள்வெளி சிகார உரு — சிவ வடிவு
மகார நடனம் — சங்கார நடனம்

அருட்பா: அகரமும் உகரமும் அழியாச் சிகரமும்
வகரமும் ஆகிய வாய்மை மந்திரமே

அகரமும் உகரமும் — ஓங்காரம்
சிகரம் வகரம் — சிவ - மகாகாரண பஞ்சாக்ஷரம்

திருமந்திரம் - 951 : பட்டம் பரிசே பரமஞ் செழுத்ததின்
இட்ட மாறிந் திட்டிரவு பகல்வர
நட்டம தாடுநடுவே நிலையங் கொள்
அட்ட தேசப் பொருளாகி நின்றுனே

பட்டங்கள் அதற்காக பரிசுகள், இவையாவற்றிலும் மேலானது பஞ்சாக்ஷரம் பஞ்சாக்ஷரத்தில் நடுவாய் உள்ள யகாரத்தை இடமாகக் கொண்டு அட்ட மூர்த்திகளின் ஒளிவடிவாய் நிற்கும் அன்னை நடனமாடுவாள்.

" எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே நட்டம் "
என்னும் உண்மை விளக்கம் வெண்பாவில் காண்க.

இரவு பகல் வர — இருள் நீங்கி ஒளியுண்டாக.
அறியாமையாகிய இருள் நீங்கி ஞானமாகிய ஒளி உண்டாக

நடுவே நிலையம் கொண்டு — சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் நடுவே நிற்கும் யகாரத்தை தமது நிரந்தர நிலையாகக் கொண்டு ஆன்மாவை கலந்து நின்று நட்டம் ஆடுவாள்

அட்ட தேசப் பொருள் — பூதம் ஐந்தும், யமானன், சூரியன், சந்திரன் ஆகிய எட்டு மூர்த்திகளுமாகி நிற்பன

திருமந்திரம் : தானே தனக்குத்தகு நட்டந் தானுகும்
தானே அகாரம் உகாரமதாய் நிற்கும்
தானே இரீங்கார தத்தவ கூத்துக்குத்
தானே உலகில் தனி நடந்தானே

சிவ என்னும் ஈரெழுத்தும் ஒப்பில்லாத சிறந்த கூத்தாகும். அவையே அகர உகரங்களாக நிற்கும். மேலும் உலகத் தோற்ற ஒடுக்கங்களுக்கு முதற் காரணமாயுள்ள மாயைக்கு அடிப்படை மந்திரமாயுள்ள இரீங்கார (ஹ்ரீம்) மந்திரமும் அதுவேயாம்.

ரீம் - ஹ்ரீம் — மாயையின் பீச மந்திரம்

அத்தியாயம் – 8

## மகாரமனு - மாமுதல்

மாமுதல்-மகாமனு பஞ்சாக்ஷரம் என்பது சிகரம் மட்டும் உள்ளது. மகாகாரண பஞ்சாக்ஷரமாகிய சிகரம் வகரம் இரண்டினுள் வகரமாகிய அருளையும் தன்வயப்படுத்தி அடக்கி கொண்டு சிகரம் மாத்திரம் தனித்து நிற்பது மகாமனு.

திருமந்திரம் - 2671 :

அங்கமும் ஆகம வேதம் ஓதினும்
எங்கள் பிரான் எழுத்தொன்றில் இருப்பது
சங்கை கெட்டவ்வெழுத் தொன்றையும் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங் கலமாகுமே

சிவயநம என்ற ஐந்தெழுத்தில் ஒப்பில் ஒன்றாகிய சிகாரத்துள் சிவ பெருமான் (சி) அமைந்துள்ளது. இவ்வுண்மையில் சிறிதும் ஐயுறாது அதனை மேற்கொண்டு ஒழுகி உறுதியுடன் நிலை நிற்றல் வேண்டும். அப்படி நின்றால் இவ்வுடம்பாகிய அருங்கலம் திருவடிபேறாகிய கரையினை சேரும்

சி — பேசா எழுத்து
வவுடன் சேர்ந்து சிவ — பேசும் எழுத்து
ச — மெய்யும் மாயை
இ — உயிரும் ஆருயிர்
அ — உயிர்க்குயிர் — பேருயிர்

ஒரு எழுத்தின்கண் முப்பொருள் உண்மை தேறப்படும்.
இவ்வுண்மை எந்த மறையிலும் காண்பது அரிது.
இதை தொல் எழுத்து — ''சகார, இகார இடைநா அண்ணல்
அ இ உ இவை மூன்றும் சுட்டு''
இம்முறையில் நடுவிலிருக்கும் ஆருயிர்க்கு ஒப்புடையதாகும்.

அ — அன்பி - அன்பே வேட்பது — இறை
இ — இன்பி - இன்பை கேட்பது — உயிர்
உ — உண்பி - உண்பிப்பதை கேட்பது — இறையருள் ஆகும்

இந்த மகாமனு பஞ்சாக்ஷரத்தை திருமூலர் திருமந்திரத்தில் :

நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாதன் இருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த ஜோதி
நாயோட்டு மந்திரம் நாம் அறியோமன்றே

நாம் நாயை துரத்தும் போது 'சீ' என்று துரத்துகிறோம். எனவே நாயோட்டு மந்திரம் என்பது 'சி'யை குறிக்கிறது. ஆதலின் சிகரம் நாயோட்டு மந்திரம் என்று பரிபாஷையில் குறிப்பிட்டுள்ளது. எனவே திருமூலர் சிகர மந்திரம் நான்முறை வேதம் என்றும், நாதன் (சிவன்) இருப்பிடம் என்றும், நாதத்தின் முடிவில் ஜோதிஸ்வரூபன் என்றும் அருளுகிறார். அந்த மந்திரத்தை நாம் அறியாமல் இருக்கிறோமே என்கின்றார்.

உண்மை விளக்கம் வெண்பா - 39ல்

"பரையிடமா நின்றுமிகு பஞ்சாக்கரத்தால்
உரை உணர்வுக் கெட்டா ஒருவன்"

என்று பேசப்படுகிறது.

மிகு பஞ்சாக்ஷரம் என்பது 'சி' கரத்தை குறிக்கும்.

இப்போது இந்த இந்துவித பஞ்சாக்ஷரங்களை கொண்டு கீழ்வரும் உண்மை விளக்கம் வெண்பாவை ஆராய்வோம்.

உண்மை விளக்கம் :

எட்டும் இரண்டு உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம என்னும் திருவழுத்தஞ்சாலே
அவாயம் அற நின்றுடுவான்

லிங்கம் - அடையாளம் நட்டம் - கூத்து அவாயம் - அபாயம்
சிட்டன் - வால்லறிவன் சிவன் - சி

சிட்டன் நின்றுடுவான் எழுத்தஞ்சாலே என்பது சூக்ஷ்ம நடனம் உணர்த்துகிறது. இந்த பஞ்சாக்ஷர நட்னம் என்பதில் விரிவாக காண்லாம்.

1) தோற்றம் 2) நிலை 3) இறுதி 4) மறைப்பு 5) அருள் என்னும் ஐந்தொழிலும் — ஸ்தூலம் - சூக்குமம் - அதி சூக்குமம் (பருமை - நுண்மை - மீநுண்மை) என மூவகைப்படும்.

பருமைத் தோற்றமும், பருமையிறுதியும் பிரபஞ்சத்தினுடையது. நிலை என்பது தோன்றிய பிரபஞ்சம் ஒடுக்கம் வரும் அளவும் நிலையுறுதல்

மறைப்பு — பெத்தம் அருள் — வீடு
இவை இரண்டும் பிரபஞ்சத்தில் நிகழ்வன.
அவை உயிருக்கு எய்துவன

தம்தம் நிலைக்குத் தக்கவாறு திருவைந்தெழுத்து வாயிலாக சிவ நிலையை நினைவு கூறுதல் வேண்டும். திருவைந்தெழுத்தின் திருமேனி யாக கொண்டு அவற்றின் வாயிலாக தன்னை உணர்வார் உணர்வில் இருந்து கட்டு நீக்கி வீடு நல்கி வருகின்றார். இது சிவபிரானுக்கு திருக் கூத்து. அப்படி உணர்ந்திவருக்கே அது சிவனுக்கு திருமேனி எனத் தெரியவரும்.

1) அத்திருமேனி கட்டு பந்தம் நல்கும் முறையில் — தூல பஞ்சாக்ஷரம் — நமசிவாய

2) வீடு தவும் முறையில் — சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் — சிவாயநம

3) அதிலும் மும்மலம் நீங்கிய முறையில் உற்ற பஞ்சாக்ஷர திருமேனி நகாரம், மகாரம் நீங்கிய மூன்றும் உள்ளது } அதி சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் காரண பஞ்சாக்ஷரம் — சிவாய / சிவயசிவ

4) ஜீவபோதம் நீங்கிய நிலையில் யகரம் அருள் சொரூபமாக மாறி, யகரம் அல்லாத இரண்டும் உள்ளது } மகா காரண பஞ்சாக்ஷரம் — சிவ (துரியநிலை)

5) சிவாமான நிலையில் சிகார திருமேனி உள்ளது } மகாமனு — சி (துரியாதீதநிலை)

இத்தனை நிலைகளில் நின்று உயிர்களை தன்னிலை அடைவிக்கும் சிவ பெருமானுக்கு அவ்வுயிர்களை அந்தந்த நிலையில் முதல்வனை வழிபட நினைவூட்டும் குறியாயுள்ள திருவைந்தெழுத்து திருமேனியாகும். அந்த திருமேனியில் நின்றுடுவது திருக்கூத்து. இக் கூத்து வகைகளை 'ஆடல் வல்லானும் ஐந்தெழுத்தும்' என்னும் அத்யாயத்தில் விரிவாக காண்க.

இறைவன் கொள்ளும் நிலை வேறுபாட்டை நினைவூட்டும் வகையில் திருவைந்தெழுத்தும் திருமேனியாதலையும், முக்தி பஞ்சாக்ஷரத்தின் இயல்பையும் உணர்ந்த அந்த உபாய நிட்டையால் உண்மை நிட்டையை தலைபடல் வேண்டும்.

இவைகளை பட்டிணத்தார் பாடலையும், வள்ளல் பெருமான் அருட் பாவிலும், திருமூலர் பரிபாஷையில் சொன்ன திருமந்திரத்தையும் ஆராய்வோம்.

பட்டிணத்து அடிகள்:

> மாயை நட்போரையும் மாயா மலமெனும்
> மாதரையும் வீயவிட்டோட்டி வெளியே புறப்பட்டு
> மெய்யருளாம் தாயுடன் சென்று
> தாதையைகூடி தம்மைமறந்து ஏயுவதே நிட்டை

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| தாதை - தந்தை | தாய் | உயிர் | நண்பன் | மாதர் |

1) மாயை, கன்மம், திரோதம் முதலியவைகள் — நண்பன் — நகரம்
2) ஆணவ மலமாகிய மாயர் மலம் — மாதர் — மகரம்
3) அருள் — தாய் — வகரம்
4) சிவம் — தந்தை / தாதை — சிகரம்

நண்பர்களாகிய மாயை, கன்மம், திரோதம் முதலியவைகளை (ந) ஆணவ மலமாகிய மாயா மலம் (ம) ஆகிய இரண்டையும் விட்டு வெளியேறுதல். அதாவது உயிரானது மாயை, கன்மம், திரோதம், ஆணவம் இவைகளை நீங்கி வெளியே வருதல் இது ந, ம நீக்கம்.

பஞ்சாக்ஷரத்தில் ந, ம நீக்கினுல் பாக்கி 'சிவாய' என்று உள்ளது. உயிரானது இவைகளை நீங்கி அருள், சிவம் இவற்ருேடு கூடுகிறது. இதைத்தான் மெய்யருளாம் தாயுடன் சென்று, அந்த அருளாம் தாயுடன் சென்று அருள் சொரூபமாகி விடுகிறது. அதன்பின் தந்தையாகிய சிவத்துடன் கூடி தன்னை மறந்து சிவமாகி விடுகிறது. அதுதான் நிட்டை என்று அருளுகிறுர்.

வள்ளல் பெருமான் :

> "ஒரெழுத்தில் ஐந்துண்டென்பர் வெண்ணிலாவே
> அதுஊமைஎழுத்து ஆவதென்ன வெண்ணிலாவே"

ஊமை எழுத்து — பேசா எழுத்து சி — ஒரெழுத்து

அதில் ஐந்து எழுத்து — விந்து + நாதம் + ச் + அ + இ

> "ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
> ஈசான மேலன்றீர் வாரீர்
> ஆசாதி இல்லீரோ வாரீர்"

வள்ளல் பெருமான் மேலும் பரிபாஷையில் :

" ஆவியீரைந்தை அபாதத்தில் வைத்தோதிவ் "
என்ற அருட்பாவில் இந்நிலைகளை பேசுகிறார்.
அதன் விளக்கம் மற்றொரு அத்தியாயத்தில் காண்க.

கண்ணுடைய வள்ளலார் பஞ்சாக்ஷர பதிபசுபாச விளக்கத்தில்:

" நகரமாகிய சேரியை நஞ்செனவெறுத்து
மகரமாகிய மயலெலாம் வேரொடு அறுத்து
வகரமாகிய வனத்தினிலிருந் திளைப்பாறிச்
சிகரமாகிய நகரினை யடைந்தனன் சிவன் "

என்று அருளுகிறார்.

நகரமாகிய திரோதமலம், கன்மம், மாயை முதலிய மலங்களாகிய சேரியை வெறுத்து நீங்கி ('ந'கர நீக்கம்), மகரமாகிய ஆணவமலத்தை வேரொடு அறுத்து (மகர நீக்கம்), வகரமாகிய அருள் வனத்தினை பற்றி இளைப்பாறி - (அருளிலே திளைத்து) சிகரமாகிய சிவன் என்னும் நகரை சீவன் அடைந்தனன்.

திருமந்திரம் - 864 ;

போற்றுகின்றேன் புகழ்தும்பல் ஞானத்தைத்
தேற்றுகின்றேன் சிந்தைநாயகம் சேவடி
சாற்றுகிறேன் அறையோ சிவயோகத்தை
ஏற்றுகின்றேன் பிரான் ஓரெழுத்தே

நீங்கா புகலிடமாக உள்ள திருவடியுணர்வை தமிழாகம வழிப் போற்றுகிறேன். தனிப்பெரும் தலைவராம் சிவபெருமான் திருவடியை உள்ளத்துணர்வால் தெளிகின்றேன். அதனால் திருவடியை கூடுதலாகிய சிவயோகத்துக்கு வேண்ட தக்க சக்கரத்தையும், ஓங்காரமாம் ஒன் மறையிலினையும் அருளா ல் கூறுகின்றேன். எம்பிரானது கணிக்கப் படாத பேசா எழுத்தாம் 'சி'காரத்தை கணியாது உணர்வால் ஓது கின்றேன். அஜபை என்பது ஜபிக்கப்படாதது என்று பொருள்படும்.

பேசும் எழுத்து — வா - எனவும்
பேசா எழுத்து — சி - எனவும் கூறுவது தமிழாகம மரபு
அறை + ஓர் — சக்கரமும் பிரணவமும்
ஓரெழுத்து — சி - பேசா எழுத்து - அஜபா மந்திரம்

திருமந்திரம் - 865 :

ஓரெழுத்தாலே உலகெங்கும் தானாகி
ஈரெழுத்தாலே இசைந்தங் கிருவராம்
மூவெழுத்தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத்தாலே மயக்கம் உற்றதே

ஓ என்னும் எழுத்தால் உலகெலாம் கலப்பால் தானாகி நிற்கும். ஓ என்பதை பிரித்தால் அ + உ என்பது ஈரெழுத்தாகும். இவ்விரண்டும் சிவன் (சி) சிவை (வ) என்னும் பொருளைக் குறிக்கும்.

எழுத்தின்படி பார்த்தால் அறிவோன், உடையாள் என்ற பொருள் வரும். இவற்றை உயிர்க்குயிர் (சி - பரமான்மா); உயிர் (சீவான்மா) எனவும் உரைப்பர்.

மூன்றெழுத்தாகிய அ + உ + ம் என்பனவற்றால் தோன்றுகின்ற பேரொளியினை, ம ர் மை யி னை குறிக்கும் 'ம' என்னும் எழுத்தால் உயிருக்கு மயக்கம் வந்து பொருந்தும்.

திருமந்திரம் - 868 :

தாண்டவமான தனியெழுத் தோரெழுத்து
தாண்டவமான அனுக்கிரகத் தொழில்
தாண்டவகூத்து தனிநின்ற தற்பரம்
தாண்டவகூத்து தமனியந் தானே

திருக்கூத்துக்கள் திருவைந்தெழுத்தின் அருள் கூத்து ஆகும். இவை அனைத்தும் அருளும் பொருட்டே: இக்கூத்தினை அருளுபவன் முழுமுதற் கடவுள் சிவபெருமானே. இவைகள் நிகழும் இடம் ஆருயிர்களின் நெஞ்சம். பொன்னம்பலம் தாண்டவமான தனியெழுத்து.

ஓரெழுத்து ஐந்தெழுத்து நடனம் — சிகார நடனம்
- ஐந்தெழுத்து நடனம்
தொழில் அது — ஐந்தொழில் நடனம்
தற்பரம் — தற்பரக் கூத்து தமனியம் — பொன்

அப்பர் பெருமான் :

கார்முகிலாய்ப் பொழிவானை பொழிந்தமுன்னீர்
காப்பானைக் கடியநடை விடையொன்றேறி
ஊர்பலவும் திரிவானை ஊரதாக
ஒற்றியூருடையனாய் முற்றும் ஆண்டு
பேரொழுத் தொன்றுடையானைப் பிரமனோடு
மாலவனும் இந்திரன்மந்திரத்தால் ஏத்தும்
சிரெறும்பியூர் மலைமேல் மாணிக்கத்தை

பேரெழுத்தொன்றுடையானை; இது பஞ்சாக்ஷரத்தின் (சிகரம்) சிவனைக் குறிக்கும். அதை பெருவெழுத்து பேசா எழுத்து எனப்படுகிறது. 'சி' என்பது ஓரெழுத்து, ஊமை எழுத்து எனப்படும். அதில் ஐந்தெழுத்துக்கள் உள்ளன.

1) விந்து — (ஒளி - சக்தி) தோன்றி நின்று அசைதல்
2) நாதம் — அதன் இடப் பெயற்சி - ஒலி
3) ச் — அதன் வண்ண வடிவம்
4) அ — அதன் குணங்களை வெளியிடுவது - இது மூலாங்க பிரணவம்
5) இ — இதைத் தன் வண்ண சுபாவத்தோடு வெளியில் விளக்கும் அருள் பிரணவம்

இந்த ஐந்தும் ஐந்தொழிலை குறிக்கின்றன. இந்த எழுத்துக்களின் அனுபவப் பொருள் சுத்த சன்மார்க்க அனுபவத்தில் தான் வெளிப்படுகிறது. உ ள் ள து வி ள ங் க இன்பம் நிறைகின்றது. திருவடிச்சேர் நொடி எக்கணமும் நமக்கு வரும்.

- வள்ளலார் அருளுரை இதழ் கட்டுரை - வமுரா



அத்தியாயம் – 9

# பஞ்சாக்ஷர வகைகள் ஓதும் முறையும் - அதன் பயனும் அதின் எழுத்து வகைகளும்

ஐந்தெழுத்து ஐந்து வகைப்படும். அது கீழே குறிப்பிட்டுள்ளது. பருமையாகிய (தூலம்) ந ம சி வ ா ய என்பதன் மேல் நுண்மையாக (சூக்ஷ்மமாக) அறிகின்ற சிவாயநம என்றும், அதன்மேல் மீநுண்மை (அதிசூக்ஷும்) அறிகின்ற சிவயசிவ என்றும், அதன்மேல் மகாகாரண பஞ்சாக்ஷரம் (முதல்) அறிகின்ற சிவ என்றும், அதன்மேல் மகாமனு (மாமுதல்) அறிகின்ற 'சி' என்றும் ஐந்து வகைப்படும்.

1) தூல பஞ்சாக்ஷரம் — நமசிவாய — தூலம் — பருமை
2) சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் — சிவாயநம — சூக்ஷ்மம் — நுண்மை
3) அதிசூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் — சிவயசிவ — அதிசூக்ஷ்மம் / காரணம் — மீநுண்மை
4) மகா காரண பஞ்சாக்ஷரம் — சிவ — மகா காரணம் — முதல்
5) மகாமனு — சி — மாமுதல் — மகாமனு

பஞ்சாக்ஷரம் பிரணவத்தோடும் பீஜாக்ஷரங்களோடும் ஓத வேண்டும் என்பது மரபு. அதற்கு தக்கவாறு பயன் கிடைக்கும். அப்படி பிரணவம், பீஜங்கள் இவைகளோடு பஞ்சாக்ஷரங்கள் சேரும்போது இதனை எழுத்துக்கள் என்று சொல்லப்படுகிறது. இதைப் பற்றி சற்று ஆராய்வோம்.

உமாபதி தேவநாயனார் கொடிக்கவியில் :

அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்து நாலெழுத்தும்
பிஞ்செழுத்து மேலைபெருவெழுத்து — நெஞ்சழுத்திப்
பேசும் எழுத்துடனே பேசாஎழுத்து நினையுங்
கூசாமற் காட்ட கொடி — கொடிக்கவி - 4ம் பாட்டு

சிவாயநம என்னும் அஞ்செழுத்தும், ஓம் ஹாம் ஹௌம் சிவாய நம எனும் எட்டெழுத்தும், ஓம் சிவாயநம என்கிற ஆறெழுத்தும், ஓம் சிவாய என்கிற நான்கெழுத்தும் ஆக இப்படி உச்சரிக்கிற விதிப் படியே உச்சரித்து, விதிப்படி உச்சரிக்கிற முறைமையை விட்டுப் பஞ்சாக்ஷரத்தினுடைய சொரூபத்தை அறிந்து பிஞ்செழுத்தாகிய சிகரத்தையும் தன்னுடைய இதயத்திலே வைக்கில் பேசும் எழுத்தாகிய வகரமாகிய சக்தி, பேசாத எழுத்தாகிய சிகரமாகிய சிவத்தை இரண்டறக் கூசாமல் அழுந்துவிக்கக் கொடி காட்டினேன்.

| | | |
|---|---|---|
| 5 எழுத்து | — | சிவாயநம - நமசிவாய |
| 8 எழுத்து | — | ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம |
| 6 எழுத்து | — | ஓம் நமசிவாய - ஓம் சிவாயநம |
| 4 எழுத்து | — | ஓம் சிவாய |
| பிஞ்செழுத்து | — | வா |
| பெருவெழுத்து | — | சி |
| பேசும் எழுத்து | — | வா |
| பேசா எழுத்து | — | சி |

என்பது மேல்கண்டவற்றால் நன்கு புலப்படுகிறது.

இதே வரிசையிலேயே வள்ளல்பெருமான்
அருட்பெருஞ்ஜோதி அகவலில் :

"ஐந்தென எட்டென ஆறென நான்கென
முந்துறு மறைமுறை மொழியு மந்திரமே"

என்று எழுத்துக்களைப் பற்றி கூறுகிறார்.

ஆறெழுத்து :

பஞ்சாக்ஷரத்தை ஓங்காரத்தைச் சேர்க்க ஓங்கார பஞ்சாக்ஷரம் ஆகிறது. [ஓம் சிவாயநம அல்லது ஓம் நமசிவாய என்பது ஆறெழுத் தாகிறது. ஆறெழுத்து என்றதுமே பலர் சரவணபவ என முருகப் பெருமான் ஷடாக்ஷரத்தைதான் என்று எண்ணுவர். சரவணபவ

என்பது முருகப் பெருமான் ஆறெழுத்து, அது கௌமார வழக்கு. சித்தாந்த சைவ வழக்கு அல்ல. வள்ளல் பெருமான் முருகப்பெருமானை வழிபட்ட காலத்தில் முதல் திருமுறையில் ஆறெழுத்தையே பாடியுள்ளார். ஆறுக்கரப் பொருளே என்றும் உச்சரித்து வெண்ணீரிட்டால் என்று பலவாறாக பாடியுள்ளார். இளமையில் முருகப் பெருமானை வழிபட்ட காலத்தில் சரவணபவ என்று முருகப் பெருமானை பாடிய காலத்தில் சரவணபவ என்று முருகப் பெருமான் ஆறெழுத்தை கூறிய வள்ளல் பெருமான் பின்னாளில் ஆறெழுத்தாக ஓங்கார பஞ்சாக்ஷரத்தையே உபதேசித்துள்ளார். இதை இறுக்கம் இரத்தின முதலியார்க்கு வரைந்த திருமுகத்தில் (தவத்திரு ஊரன் அடிகள் எழுதிய புத்தகம் பக்கம் 62) காண்க.

எட்டெழுத்து :

எட்டெழுத்து என்றதுமே ''ஓம் நமோ நாராயணா'' என்றுதான் பலரும் எண்ணுவர். அது வைணவ வழக்கில் எட்டெழுத்து. கொடிக் கவியிலும், அருட்பெருஞ்ஜோதி அகவலிலும் சொல்லப்பட்ட எட்டெழுத்து ''ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம'' அஷ்டாக்ஷரம் ஆகும்.

இதை அருட்பெருஞ்ஜோதி அகவலில் :

ஓம் என்பதற்குமுன் ஆமென்று ரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர்
நாமென்று நாட்டினீர் வாரீர் — அகவல் 4453

என்று அருளுகிறார்.

ஆம் என்பதும், ஊம் என்பதும் (உ-ஹீம்) ஹௌம் என்பதாம். ஓம் என்பதற்கு முன் — ஓங்காரத்து எதிரில் நின்ற பொருள். ஓம் என்பதற்கு முன் ஆம் என்று உரைத்து ஊம் (ஔம்) என்று காட்டியது. ஓம் ஹாம் என்னும் பீஜ மந்திரங்களை குறிப்பது.

சிலப்பதிகாரம் காடுகாண் காதையில் :

"அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமுறை எழுத்தின் மந்திரம் இரண்டும்
ஒரு முறையாக உளங் கொண்டோதி "

ஐந்தெழுத்து எட்டெழுத்து மந்திரங்கள் குறிக்கப் பெறுகின்றது.

திருமூலர் திருமந்திரம் - 910

ஆறெட்டெழுத்தின் மேலாறும் பதினாலும்
ஏறெட்டதன் மேலேவிந்துவும் நாதமும்
சீறிட்டுநின்று சிவாய நமவென்னக்
கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப்போமே

1) உம், 2) அ + ஔ இம்மூன்றும் சேர்ந்து ஹௌ, 4) விந்து சேர்ந்து ஹௌம். ஓ போல் ஹௌ - ஓம் போல் ஹௌம். இவற்றை ஒலிப்பது நாதம்.

ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம எனக் கூற மும்மலம் அறும். இது எட்டெழுத்து எனப்படும். அஷ்டாக்ஷரம் எனப்படும். திருக்களிற்றுப் படியார் - 25ல் காண்க.

திருமூலர் திருமந்திரம் - 926

பரமாய அஞ்செழுத்துள் நடுவாகப்
பரமாய நமசிவ பார்க்கில் மவயநசி
பரமாய சிவநமண அப்புறத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே

ஐந்தெழுத்தில் நடுவாய் விளங்குவது 'ய'

இது :- 1) ய ந வ ம சி
2) ம வ ய ந சி
3) சி ய ந ம வ
4) வ சி ம ய ந என்று நான்கு வகைப்படும்.

இப்படி நிலைமாறி கணித்தால் பொருளுண்மை நன்கு புலப்படும் என்று திருமூலர் ஓதி தெளியும் முறையை அருளுகிறார். திருமூலர் மற்றொரு பாட்டில் ஓதி கணிக்கும் முறையை அருளுகிறார்.

திருமந்திரம் - 903

ஆயுஞ் சிவாயநம மசிவாயந
வாயு நமசிவாய யநமசிவாய (பாடம் மசிவாய மந)
வாயுமேவ நமசியெனும் மந்திரம்
ஆயுஞ்சிகாரந் தொட்டந்தத் தலைவிலே

சிவாயநமவை நான்கு முறை எழுத்துக்களை மாற்றி அமைக்கும் முறை, அந்த நான்கும் ஈற்றிலிருந்து முறையே ஒவ்வொரு எழுத்தும் முதலெழுத்தாக எழுத வேண்டும், அங்ஙனமே எழுதின் திருவம்பல சக்கரம் 25லும் திருவைந்தெழுத்து அமைந்திருக்கும் உண்மை புல னாகும். மேலும் தொடக்கத்திலும் முடிவிலும் சிகரம் தோன்றும்.

ய - உயிர் ந - திருவருள் துணை நடப்பாற்றல்

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| ம | சி | வா | ய | ந |
| ந | ம | சி | வா | ய |

ய நம சி வா
வா ய ந ம சி

முதலிலும் ஈற்றிலும் 'சி' இருப்பதை காண்க.

திருமந்திரம் - 931

அகார உகார சிகார நடுவாய்
வகாரமோ டாறும் வலியுடன் கூடிச்
சிகாரமுடனே சிவன் சிந்தை செய்ய
ஒகார முதல்வன் உவந்து நின்றானே

அகார உகாரம் — ஓங்காரத்தை குறிக்கும்
சிகரம் வகரம் — திருவைந்தெழுத்தை குறிக்கும்
சிகாரம் நடு — நமசிவாயத்தை குறிக்கும்

இரண்டும் சேர்ந்து 'ஓம் நமசிவாய' என்பது ஆகும். இடை இடை பிங்கலை ரூபமாக உச்சரித்தால் நலம். (சிந்தை - இடையறாது எண்ணுதல்) அப்படி செய்தால் ஓங்கார முதற் பொருள் ஆன சிவன் தோன்றும். இது 6 எழுத்து ஷடாக்ஷரம் எனப்படும்.

திருமந்திரம் - 950

நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவில வல்லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே

சிவாயநமவில் 'ந' 4வது எழுத்து. இதுவே உலகை உருவாக கொண்டு இயக்கும். அவ்வெழுத்தினுள் உலகம் அடங்கி அதன் ஆணை வழி நடக்கும். நாலாவது எழுத்தை (ந) முதலில் வைத்து நமசிவாய என்று ஓதுபவர்கள் நன்னெறி செல்லும் செல்வராவர்கள். ஸ்தூல பஞ்சாக்ஷரம் ஓதுவதையும் அதன் பயனையும் இப்பாட்டு குறிக்கிறது.

திருமந்திரம் - 953

நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஒகார முதற்கொண்டு ஒருகால் உரைக்க
மகார முதல்வன் மனத் தகத்தானே

நகார மகார சிகார நடுவாய் — நமசிவாய
இரண்டு வளி — இடப்பால், வலப்பால் மூச்சு

இதை ஓம் முதற்கொண்டு ஓதினால் மகாரமாகிய நாதமெய்க்கு தலைவனாகிய சிவன் ஓதுவார் மனத்தை இடமாக கொள்வான்.

திருமந்திரம் - 956

மருவும் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த யோகமும் ஞானமும் ஆகும்
தெருள் வந்த சீவனார் சென்றிவற்றாலே
அருள் தங்கிய சிவமாவது வீடே

சி - வ - ய என்பது அறிவு, செறிவு, ஆவி முறையே ஆகும்
யோகம் — உயிர் திருவருளுடன் கூடுவது

உயிர் இதை உணர்ந்து வழிபட உயிர் திருவருளுடன் கூடிய நிலையில் சிவம் என்றே அழைக்கப்படும். இதுவே வீடுபேறு ஆகும். தூல பஞ்சாக்ஷரம் 'நமசிவாய' ஓதி உணர்ந்தபின் முன்னிற்கும் ந-ம என்பது உயிரின் மறுபக்கம் ஒதுக்கப்படும். அப்போது சிவம் முன்னால் வரும். நம முன்னால் ஓதும்போது உயிர்கள் மலங்கள் நீக்கம் பெற தகுதி உடையதாக ஆகி முன்னே சொல்லியபடி நன்னெறி செல்வர் ஆவார்கள். நம நீக்கம் பெற்றதும் சிவாய (சிவன், அருள், உயிர்) என்பதே நிற்கும். பின் 'ய' (உயிர்) 'வ' (அருள்) மயமாகி 'வா' உடன் அழுந்திவிடும். அப்போது சிவா மட்டுமே என்பது மட்டும் உள்ளது. உயிர் அருள் சொரூபமாகி (வா) சிவத்தோடு கலக்கும். அப்போது 'சி' மட்டும் இருக்கும். உயிர் பேரின்ப வெள்ளத்தில் அழுந்திவிடும். எனவே மும்மலங்கள் நீங்கு ஐந்தெழுத்தின் பொருள் உணர்ந்து ஓத வேண்டும்.

திருமந்திரம் - 957

அஞ்சுக அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
நெஞ்சத்துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சகமில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்சம் இதுவென்று சாற்றுகின்றேன்

அஞ்செழுத்துண்மை அறிந்தபின் நெஞ்சகத்துள்ளே அது நிறையும். மனைக்கும் (உடலுக்கும்) அழிவில்லை. அதுதான் தஞ்சம் என்று திருமூலர் அருளுகிறார். ஐந்தெழுத்து பொருள் உணர வேண்டும்.

திருமந்திரம் - 960

நம்முதல் ஓரைந்தின் நாடும் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முதலுள்ளே தெளிய வல்லார் கட்குத்
தம் முதலாகும் சதா சிவந்தானே

நமசிவாய ஓதினால் ஐந்தொழில் நிகழ்வன அதை வல்வினை என்பர். சிவாயநம என்று தெளிய வல்லார்க்கு சதாசிவன் என்று சொல்லப்படும் அறிவாற்றலினை சிவன் முதலாக வெளிப்படுவான்.

திருவருட்பயன் - 84

விரிய மநமேவியிலை மீள்விடா சித்தம்
பெரிய வினை தீரிற்பெறும்.

மகாரம், நகாரம் இரண்டும் யகாரத்தை விரிய மேவி அது தம்மின் நீங்கி மீளும்படி விடா. அதாவது (ம) ஆணவம், (ந) மாயை கன்மம், திரோதம் ஆகிய இரண்டும் (ய) உயிரை மேவி அவைகளை விட்டு மீளும் படி விடா. உயிர்கள் பெரிய வினை (வல்வினை) தீர்ந்தால் சிகாரத்தை (சிவத்தை) யகாரம் (உயிர்) பெறும்.

திருவருட்பயன் - 85

மாலார் திரோத மலமுதலா மாறுமோ
மேலா சி மீளாவிடின்

மால் — மாயா காரியத்துள் உயிர்க்குண்டாகும் பற்று

யான், எனது என்னும் அகப்பற்றும் புறப்பற்றும் மாயா காரியம் பற்றி உண்டானவையே.

யான் — தனு — கரணம் — உடல், கரணங்கள்
தனு, கரணம் (யான்) இரண்டிலும் அகப்பற்றும்.

எனது — புவன, போகங்கள், புவன போகங்கள் (எனது) இரண்டிலும் புறப்பற்றும் உயிர்க்கு தோன்றும்.

சி - சிகரம் — சிவம்; மேல் ஆ — முன்னாகும்படி

மீளாவிடின் — யகரம் (உயிர்) ந (திரோதம்; கன்மம், மாயை)

ம (ஆணவம்) நாடாவிட்டால் — அதாவது திரோதனமான நவ்வையும், ஆணவமான மவ்வையும் முதலாக ஓதினால்

மாறுமோ கட்டு — கட்டு நீங்க கருத்து மாறுபடுமோ

ஆசிரியர் சிகாரத்தை முன் வைக்காமல் நமசிவாய என்று ந-மவை முன் வைத்து ஓதினால் கட்டு மாறாது என்ற கருத்தை தெரிவிக்கிறார். திருவருட் பயன் - 87ல் இதே கருத்து தெரிவிக்கப்படுகிறது.

திருவருட்பயன் - 87

சிவமுதலே ஆமாறு சேருமேல் தீரும்
பவமிது நீ ஓதும்படி

இச் சிவாயநம என்னும் நுண்ணைந்தெழுத்தை நீ ஓதும்படி.

நமசிவாய என்பதில் ந - ம முன்னாக உள்ளது.

சிவ முதலே ஆகுமாறு சிவ (சிவம் - அருள்) இவைகளை முன்னாக வைத்து சிவாயநம என்று ஓதினால் பிறப்பு அறும்.

இதையே திருமூலர் அருளுகிறார்.

திருமந்திரம் - 2661

சிவன் அருள் ஆயசிவன் திருநாமம்
சிவன் அருள் ஆன்மா திரோதமலா
சிவன் முதலாகச் சிறந்த நிரோதம்
பவமத கன்று பரசிவனாமே

சிவன் - அருள் - ஆய — சிவசக்தியாகிய சிவன் திருநாமம்
அஞ்செழுத்து — சிவன் — அருள் — ஆன்மா — திரோதம் — மலம்
(சி) (வா) (ய) (ந) (ம)

இதில் சிவம் முதலாக — சி முதலாக ஓதினால்
பவமதகன்று — பிறப்பறும்

சிவாயநம என்னும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் சிவ என்னும் மறை மொழியை முதற்கண் வைத்து 'சிவாயநம' என நற்றவம் புரிதல் வேண்டும். அப்படி புரிந்தால் அத்தவப் பயனாய் மலமாயை கன்மங்கள் அகன்று அடங்கும். அவை அடங்கவே பிறப்பறும். பிறப்பறவே திருவடிப்பேறு உண்டாகும். அது உண்டாகவே அவ்வுயிர் சிவனாகி மீளா அடிமையாய் வாழ்ந்திருக்கும்.

நிரோதம் — ஒழித்தல் - அடக்கம்

உண்மை விளக்கம் - 42

சிவன் அருள் ஆவி திரோத மலம் ஐந்தும்
அவன் எழுத்தஞ்சின் அடைவாம் - இவனின்று
நம்முதலா ஓதின் அருள்நாடாது - நாடும் அருள்
சிம்முதலா ஓது நீ சென்று

சிவன் (சி) அருள் (வா) ஆவி (ய) திரோதம் (ந) மலம் (ம) இவை ஐந்தெழுத்தின் அடைவு. இதில் நம முன் வைத்து நமசிவாய என்னும் தூல பஞ்சாக்ஷரத்தை ஓதினால் அருள் நாடாது. எனவே சிம் முதலாக வைத்து சிவாயநம என்னும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் திருவருட் பேற்றிற்கு உடையது. எனவே சிம் முதலாக ஓத வேண்டும். நம் முதலாவது அதற்குரியதன்று எனப்பட்டது. அருள் நாடாது என்பது சிவப்பேரின்மை கூறிற்று. அருள் நாட்டமும், தீராத மும்மலமும் தீர்க்கும் நாட்டமும் உடையோர் சிம்முதலாக ஓத வேண்டும் என்று அருளப்படுகிறது. அருள் நாட்டமும், மும்மலமும், மோசிக்கும் நாட்டமும் ஒருசேரக் கொள்வதே சிவப்பேறும் பாசவீடும் எய்தும் வழி.

நம் முதல் — ந + முதல்
சிம் முதல் — சி + முதல்

உண்மை விளக்கம் - 13

அண்ணல் முதலா அழகாரெழுத் தைந்தும்
எண்ணில் இராப்பகல் அற்றஇன்பத்தே - நண்ணி
அருளானது சிவத்தே ஆக்கும் அணுவை
இருளானது தீர இன்று

சிம் முதலாக ஓதுவதன் பயன் ஆகிய திருவருட்பேறும், இரு பொரு ளும் காட்டா. இருளொழியும் எய்து மாற்றினை கூறுகிறது.

அண்ணல் முதலா — சிம் முதலாக    அழகு — சிவதத்துவம்
எண்ணில் — கணித்தால்
மாநதம், மந்தம், உரை என கணித்தல் மூவகைப்படும்.

அவற்றில் சுத்தமானதம் எனப்படும் அறிவால் கணித்தலே உச்சரித்தல் எனப்படும். ஆனால் வெண்பாவில் உச்சரிக்க என்று சொல்லாது, எண்ணுக எண்ணுக என்று சொல்லப்படுகிறது. எண்ணுக எண்ணுக என்றால் தியானிக்க என்ற பொருள் கொள்ளலாம்.

சிவப்ரகாசம் என்னும் நூலிலும் இதே கருத்து வலியுறுத்தப்படுகிறது.

சிவப்ரகாசம் - 91
திருவைந்தெழுத்தில் ஆன்மாதிரோதம் ஆசுஅருள் சிவம்சூழ்
தரநடுநின்ற தொன்றுந் தன்மையும் தொன்மையாகி
உருமந மிகுதியாலே வாசியில் ஆசையின்றிக்
கருவழி சுழலுமாறும் காதலர்க்கு காதலாமே

மும்மலம் நீங்கிய பின்னும் பண்டை பழக்கத்தால் அவற்றின் வாசனை எப்படி பெருங்காயம் வைத்த பாத்திரம் காலியானாலும் பெருங்காய வாசனை இருக்குமோ அப்படி தாக்கும். எனவே அவ்வாசனை தாக்காமல் இருக்க இறைவன் நாமத்தை எண்ணுதல் வேண்டும். கட்டு நீங்கிய பின்னும் உலகியற் செயல்களாலே பழகும் காலத்து மலவாசனை தாக்காதிராது. எனவே எடுத்த உடம்பால் நுகர்தலுக்குறிய வினை மெல்லெனத் தாக்கும். அப்போது முதலும் முடிவும் இல்லாத திரு வைந்தெழுத்தின் உண்மை பொருளை, அறிவாசான் அறிவித்த உண்மை பொருளை அறிவாசான் உபதேசித்த முறையில் எண்ணுபவரை அவ் வாசனை தாக்காது. திருவைந்தெழுத்தில் மறைப்பு சக்தியும், மலமும் பின்னாகவும், சிவமும் அருளும் முன்னாகவும், உயிர் நடுவே இருக்கின்ற முறையும், மலமும் மறைப்பு சக்தியும் மேலிடுவதால் உயிர் அருளிலும் சிவத்திலும் விருப்பமில்லாமல் பிறந்திறந்து உழலும் வகையும், வீடு காதலித்தவர்களுக்கு உணர்த்தும்.

மற்றும் சிவப்பிரகாசம் செய்யுள் - 92ல்

> ஆசுறுதிரோதம் மேவாத கலுமாசில் முன்னுகை
> ஓசைகொள் அதனில்நம்மேல் ஒழித்தருள் ஓங்கும்மீள
> வாசியை அருளும்மாய மற்றதுபற்றுறுது உற்றங்கு
> ஈசனில் ஏகமாகும் இது திருவெழுத்தின் ஈடே

என்று அருளப்படுகிறது.

மலத்திலேனுடு சார்ந்த மறைப்பு சக்தி மேலிடாதவண்ணம் சிவத்தையும் அருளையும் குறிக்கும் எழுத்துக்களை (சிவா) முதற்கண் வைத்து எண்ணில் அல்லது ஓதில் மறைப்பு சக்தியானது மலத்தை நீக்கி அருட்சக்தியாய் விளங்கும். அவ்வருட் சக்தியே சிவத்தினை எய்துவிக்கும். அறிவு விரியப் பெற்ற உயிரானது அருளை பற்று கோடாக நிலை நின்று அருளிலே அடங்கி அருள்மயமாய் நின்றவிடத்து சிவத்தினில் கலக்கும். இதுவே திருவைந்தெழுத்தின் பெருமை - பயன்.

இதையே உண்மை விளக்கம் வெண்பா 44ல் காணலாம்.

உண்மை விளக்கம் - 44:

> ஆதிமலம் இரண்டும் ஆதியா ஓதினுல்
> சேதியா மும்மலமும் தீர்வாகா - போதம்
> மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
> விதிப்படி ஓது அஞ்செழுத்துமே

ஆதிமலம் இரண்டும் — ந, ம என்னும் ஈரெழுத்தின் பொருளாகிய மாயை, திரோதம், கன்மம், ஆணவம்

ஆதியா ஓதினுல் — இவைகளை முன்வைத்து நமசிவாய என்று ஓதினுல்

சேதியா — அழியாது, சேதமாகாது.

மும்மலமும் தீர்வாக — ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலமும் தீராது.

ஆனுல் மாறி விதிப்படி ஓது அஞ்செழுத்துமே — குரு உபதேசப்படி விதிப்படி மாறி சிவாயநம என்று ஓதினுல் நமசிவாய என்பதில் நம 'ய'வுக்கு மறுபுறம் வருவது.

அப்போது மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் — மதிப்பிட முடியாத பெரும் இன்பத்தில் வாழலாம் - பேரின்பத்தில் வாழலாம்

திருவருட்பயன் - 188

> வாசிஅருளி அவை வாழ்விக்கும் மற்றதுவே
> ஆசில் உருவமாம் அங்கு

வகாரம் (அருள்) சிகாரத்தை (சிவத்தை பேரின்பத்தை) அருளி யகாரத்தை (உயிரை) வாழ்விக்கும்.

அதுவே — அச்சக்தியே

ஆசு இல் உருவமுமாம் — மலாகித ரூபமும் ஆகும்.
அங்கு என்பது வீடு பெற்ற நிலையில் சிகாரத்தை சுட்டிற்று

அதுவே உருவமும் ஆம் — அங்கு என்றது வீட்டில் சிவமே உருவம்

சிவப்ரகாசம் 75 — சுத்தமாஞ்சக்தி அத்தனை ஆகும் அருளும்

சிவப்ரகாசம் 92 — வாசியை அருளுமாறு 'ய' மற்று அது
பற்று உற்று அங்கு ஈசனில் ஏகம் ஆகும்

உண்மை விளக்கம் 42 — அருளானது சிவத்தே ஆக்கும்
என்பதிலும் காண்க

பஞ்சாக்ஷரம் ஓதி அதில் நிற்கும் முறைமையை திருவருட்பயனில் உணர்த்தப்படுகிறது.

திருவருட்பயன் - 89

ஆசிநவா நாப்பண் அடையாதருளினுல்
வாசியிடை நிற்கை வழக்கு

சிமுதலையாமாறு ஓதும்படி என்றும், பரமுத்தர்களுக்கும் வாசி வேண்டும் என்றும் உணர்த்தப்பட்டது. மாலார் திரோத மலம் இரண்டிற்கும் வாசிக்கும் இடைநிற்றல் வேண்டாம் என்று வாசியிடை நிற்றல் வழக்கு என்கிறார் ஆசிரியர். சிவாயநமவில் யகாரம் இச் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தே 'வாயந' என இடை அடைவு புலப்படும்.

நவா நாப்பண் என்பது 'ய'காரம் (உயிர்), வகாரம் (அருள்), நகாரம் (மலம்) இவைகளுக்கு இடையில் உள்ள நிலையைக் குறிக்கும். நவாநாப்பண் அடைதற்கு காரணம் (ம - ஆணவ மலம்)

திருமந்திரம் - 883

செம்பு பொன்னுகும் சிவாயநம வென்னிற்
செம்பு பொன்னுகத் திரண்டது சிற்பரம்
செம்பு பொன்னுகும் சிரீயும் கிரீயுமென
செம்பொன்னை திருவம்பலமே

சிவாயநம என்னும் தமிழ் மந்திரமாகிய திருவைந்தெழுத்தை இடையறுது நாடினுல் செம்பு பொன்னுவது போல் உயிர் சிவமாகும்.

சிவமாதல் - சிவனுல் ஆட்கொள்ளப்படுதல்

சிவனருள் மந்திரவித்து சிரீயும் கிரீயும் (ஸ்ரீம் ஹ்ரீம்) ஆகும்.

இதுவே திருவம்பலம்.

திருமந்திரம் - 2659

எளியவாது செய்வார் எங்கள் ஈசனை
ஒளியை யுன்னி உருகு மனத்தராய்
தெளிய ஓதி சிவாயநம வென்னும்
குளிகையிட்டு செம்பொன்னுக்குவன் கூட்டையே

முழு முதற் கடவுளாகிய சிவபெருமானை உண்மை உணர்வில்லாதவர்கள் எளியனாக கருதி வாதங்கள் செய்வார்கள். அவன் எல்லா ஒளிக்கும் ஒளி கொடுத்துக் கொண்டும், தான் இயல்பாக ஒளிர்ந்து கொண்டு இருக்கும் அறிவு பேரொளியானவன். அவனை பேரன்புடன் நினைத்து இடையறாது உருகு மனத்தராய் இருப்பவர் சிவனடியாராவர். அவர் சிவகுருவின் திருவருளால் தெளிந்து சிவயநம என்னும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தை இடைவிடாது கணிப்பர். அப்படி கணித்தலால் சிவ பெருமான் அப்பஞ்சாக்ஷரத்தையே நற்குளிகையாகக் கொண்டு அவ் வுயிரையும், அவ்வுயிரின் உடலையும் செம்பொன்னுக்குவன். அதாவது உயிரையும், உடலையும் சிவமாக்கி அருளல். அவ்வுண்மையை ஆளுடை நம்பியார் திரு உடம்பினையும், சேரமான் நாயனார் திருஉடம்பையும், சண்டேசநாயனார் உடம்பினையும் முறையே, ஊனுடம்பு வேறு செய்தான் எனவும், சூழ்ந்த ஒளியில் தோன்றினன் எனவும் ஆரூராரும், சேக்கிழார் பெருமானும் கூறியருளியதில் காண்க.

குளிகை - செம்பை பொன்னுக்கும் சீரிய பொருள் சிவாயநம என நோன்பு நெறியில் நிற்பார் மேற்கொள்ள வேண்டிய நுண் முறை. தகரவித்தை சித்திப்பதை கூறுகிறது.

தகர வித்தை — தேக சித்தி

உடம்பை பொன் தேகமாக்குதல் (ஸ்வர்ண தேகம்) வள்ளல்பெருமானும் இந்த வகரவித்தை தகரவித்தைகளை கூறும்போது இவைகளை ஆதாரமாக எடுத்துக் கூறுகின்றார்.

இதையே ஔவைப் பிராட்டியார் :

சிவாயநம என சிந்திப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை - உபாயம்
இதுவே மதியாகும் அல்லாதவெல்லாம்
விதியே மதியாகி விடும்

வள்ளல் பெருமான் :

'' நான்செய்த புண்ணியம் யாதே சிவாயநம எனவே
ஊன்செய்த நாவைக் கொண்டோதப் பெற்றேன்
எனை ஒப்பாராவர் '' என்று அருளுகிறார்

நமசிவாய - தோத்திரம் சிவாயநம - சாத்திரம் (அனுபவம்)
என்று கையாளப்படுகிறது.

மணிவாசக பெருந்தகையார் :

''நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்''
என்று திருவாசகத்தில் அருளுகிறார்

திருமந்திரம் - 2661ல் இதே கருத்தை

''சிவன்முதலா சிறந்த நிரோதம் பவமதகன்று பரசிவனுமே''
என்று திருவாசகத்தில் அருளுகிறார்

சிவன்முதலாக அதாவது 'சிம்' முதலாக அதாவது சிவாயநம என்று ஓதினால் பவமது அகன்று பரசிவனுக்கும்.

மேலும் திருமந்திரம் - 2662ல்

ஓதியநம்மலம் எல்லாம் ஒழித்திட்டு அவ்
வாதிதனை விட்டிறையருட் சத்தியாய்
தீதில் சிவஞானயோகமே சித்திக்கும்
ஓதுஞ்சிவாய மலமற்ற உண்மையே

சிவாயநம என ஓதுங்கால் நகர மகரமாகிய இரண்டு மலங்களும் ஒழிந்திடும். அவ்வாதியாகிய நகரமும், அதனால் செலுத்தப்படும் மகரமும் ஆகிய இரண்டினையும் நீக்கிய இடத்து அங்கு திருவருளாற்றலுடன் கூடிய சிவ என்னும் சிறப்பு எழுத்துக்களை அமைத்தல் வேண்டும். அமைக்கவே சிவயசிவ என அமையும். இம்முன்றயே கணித்தால் சிவ உருவாயிலாக சிவச்செறிவு கைகூடும்.

திருமந்திரம் - 2663

தெள்ளமுதூறச் சிவாயநம வென்று
உள்ளமுதூற கால் உரைத்திடும்
வெள்ளமுதூறல் விரும்பி யுண்ணுதவர்
துண்ணிய நீர்போற் சுழல்கின்றவாறே

தெளிந்த திருவடியமது இடையறுது எப்போதும் இன்பத்தில் திளைக்கும் பொருட்டு சிவாயநம என்னும் திருமந்திரத்தை அல்லது மறையை உள்ளத்துள் திருவடியின்பம் அமுது பெருகி ஊறக் காதலால் ஒருகால் உரைத்தல் வேண்டும். உரைக்கவே புருவ நடுவில் தோன்றும் வெள்ளம் போல்வரும் திங்கள் மண்டலத் திருவமுது அளவின்றி ஊறும் அதனை அருளால் விழைந்து உண்ணுதல் வேண்டும். அங்ஙனம் உண்ணுதவர் பிறப்பிறப்பிற்பட்டு நீர்த்துளி சுழலுவது சுழன்று துன்புறுவர்.

இதை ஞானசம்பந்தர் பெருமான் :

காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தம்மை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப் பொருளாவது
நாதன் நாம நமச்சிவாய என்று அருளுகிறார்

திருமந்திரம் - 2665ல்

அருள்தரும் மாயமும் அத்தனும் தம்மில்
ஒருவனை ஈன்றவர் உள்ளுரு மாயை
திரிமல நீக்கிச் சிவாய என்று ஓதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத்தாமே

திருவருளைப் புரியும் அம்மையாகிய வனப்பாற்றலும் (வா). அந்த ஆற்றலின் துணை அத்தனாகிய சிறப்பும் (சி) தம்மில் ஒன்று கூடி ஆருயிர்க்கு துணைப் புரிந்து பேணி ஈன்றவராவர். அதனால் உள்ளுறும் மாயை நடப்பாற்றல், ஆணவம், கன்மம், மாயை, ஆக்கம் ஆகிய ஐந்து மலங்களும் நீங்கும். நீங்கவே சிவயசிவ என்று ஓவாது கணிக்கும் நற்றவம் கைகூடும். அவ்விதம் கைகூடவே அருவினையகலும். அவ்வரு வினையை அகற்றுவதும் அச்சிவயசிவ என்னும் திருவைந்தெழுத்து மறையாகும்.

திருமந்திரம் - 2668

நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவமென்னு நாமத்தை சிந்தை புள்ளேற்றல்
பவமது தீரும் பரிசு மதற்றால்
அவமதி தீரும் அரும் பிறப்பன்றே

சிவாயநம என்னும் திருமறையினை ஓதும் முறை 'சிவ' என்னும் இரண்டு எழுத்தினையும் ஒன்றாக சிந்தையினுள்ளே அழுத்தமாக பதித்தல் வேண்டும். 'ய' என்னும் எழுத்தை மிடற்றின்கண் நிறுத்தல் வேண்டும். ந - ம என்ற இரண்டு எழுத்தினையும் நாவின்கண் அடங்கி ஒடுங்குமாறு ஒடுக்குதல் வேண்டும். அவ்விதம் மூவிடங்களிலும் பயிற்சியால் முறை முறை ஓதுதல் ஓதுமுறையாகும். அங்ஙனம் ஓதி வர இருவினை பாவம் நிச்சயமாக அகலும். இருவினையாவது நல்வினை, தீவினை அல்லது எஞ்சுவினை, ஏறுவினையாகும். இது இம்முறையின் உண்மையான தன்மையாகும். அதனால் அறியாமை இருள் அகலும். அறியாமை அகலவே அப்போதே பிறப்பறும்.

அவமதி — அஞ்ஞானம் — அறியாமை

திருமந்திரம் - 2669

சிவாயநம எனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே அடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயம் கெட நிற்க ஆனந்தமாமே

சிவாயநம என ஓதி நம் சித்தத்தை சிவனுர்க்கு சிறந்த உறையுளாக்குதல் வேண்டும். அதாவது நீங்கா நினைவாய் சிவ சிவ என எண்ணிக் கொண்டிருக்க வேண்டும். அந்நிலை சித்தம் ஒருக்கும் நிலையாகும். அப்படி இருப்பதால் பேரிடர் அறும். அறவே அடிமை நிலை கைகூடும். அது கூடவே நுண்மை ஐந்தெழுத்தின் மேல்நிலை மீநுண்மை திருவைந்தெழுத்தாகும். அதுவே சிவாயசிவ என்பது அத்தகைய இடுக்கண்களும் அகலும் பொருட்டு இத்திருமுறையினை நாள்தோறும் கணித்து வரவேண்டும் இதுவே திருவைந்தெழுத்து வழிநிற்கும் முறையாகும். அப்படி நிற்கவே திருவடி பேற்றின் இயற்கை உண்மை அறிவு, எழில் நல உணர்வு கைகூடும். அதுவே பேரின்ப பெருவாழ்வு என்பது.

திருக்களிற்றுபடியார் என்னும் நூலில் :

அஞ்செழுத்துமே அம்மையப்பரை காட்டுதலால்
அஞ்செழுத்தை ஆருக பெற்றறிந்தே - அஞ்செழுத்தை
ஓதப்புக்கு உள்ளமதியம் கேடிலுமைக்கோன்
கேதயற வந்தளிக்கும் கேள்

என ஐந்தெழுத்து, ஆறெழுத்துப் பற்றியும் பேசப்படுகிறது.

திருமந்திரம் - 888

சொல்லுமொரு கூட்டிற்புக்கு சுகிக்கலாம்
நல்லமடவார் நடந்துடனே வருஞ்
சொல்லிலும் பாசச்சுடர் பாம்புநீங்கிடுஞ்
சொல்லும் திருக்கூத்தின் சூக்குமந்தானே

திருவைந்தெழுத்தை கணிக்கும் சிறப்பால் மற்றோர் உடம்பில் புகுந்து அவ்வுடம்பின் சார்பால் உணர்ந்து துன்புறும் சிற்றுயிர்கட்டு துன்பம் நீங்கி இன்புறும் வழியை ஆக்கலாம். திருவருள் துணையும் விருப்புடன் வந்து சொல்லிலும் செயலிலும் கைகூடும். குண்டலியானது நடு நாடியினை விட்டு நீங்கும். இவை ஐந்தெழுத்தருட்கூத்தின் அருமறையாகும். சூக்குமம் — அருமறை - இரகசியம்

திருமந்திரம் - 889

சூக்குமம் எண்ணுயிரம் செபித்தால் உம்மேல்
சூக்குமமான வழியிடை காணலாம்
சூக்குமமான வினையைக் கெடுக்கலாந்
சூக்குமமான சிவனது ஆனந்தமே

சூக்கும பஞ்சாக்ஷரத்தை எண்ணுயிரம் தடவை செபித்தால் நுண்ணுடல் வினையை நீங்கச் செய்யலாம். மேலும் உச்சித்தொளை வழியையும் காணலாம். உணர்வுக்குணர்வாய் திகழும் சிவன் திருவடியின்பமும் சிறந்து விளங்கும்.

சூக்குமமான வழி — உச்சித்தொளை வழி - பிரமரந்திரம்

மேற்சொன்ன மந்திரத்தை இடைவிடாது செபித்தால் உங்கள் தலைமேல் உள்ள நுண்ணிய வழியை அச்செபத்திற்கு இடையே காணுதல் கூடும். முன்னமேயே ஏற்பட்டதனுல் நுண்ணியதாய் பொருந்தி நிற்கின்ற பிராரப்த வினையையும் அழிக்க இயலும். அதனை அழிக்கவே உயிரிடத்தில் விளைவதாகிய சிவானந்தம் வெளிப்படும்.

குறிப்பு : வழி — பிரம்மரந்திரம்

பிரம்மரந்திரம் என்பதன் இடம் தலை உச்சியைக் குறிக்கும். இது ஆதார யோகத்தினின்று நிராதாரத்திற்கு செல்லும் வழியாதல் பற்றி 'வழி' என்ப்பட்டது. தலையின் உச்சிக்கு மேல் 12 அங்குலம் வரை நிராதாரம். அதற்கு மேல் மீதானம் எனப்படும்.

இதை திருஉந்தியார் வெண்பா:
'' ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று மீதானம் சென்றடைக
அது விமலர்க்கிட மென்றுந் தீபர '' - வில் காண்க.

திருமந்திரம் - 890

ஆனந்தம் ஒன்றென்ற றைந்திடம் ஆனந்தம்
ஆனந்தம் ஆஈஊஏஓ மென்றைந் திடம்
ஆனந்தம் ஆனந்தம் அஞ்சு மதாயிடம்
ஆனந்தம் ஆம் அம் ஹ்ரீம் அம் க்ஷம் ஆகுமே

அஞ்செழுத்து முறையில் ஆவி சிவனுக்கு அடிமை என்று உணர்ந்து சிவ நிறைவில் அடங்கி சிவனே எனும்படி நிற்பதாகிய ஒன்றென்று சொல்லப்படும் நிலை எய்தினுல் திருவடிப் பேற்றின்பம் ஆகும்.

திருமந்திரம் - 927

நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தரு வண்ணமும்
நின்ற எழுநதுக்கள் நேர்தர நின்றிடில்
நின்ற எழுத்துக்கள் நின்றனன் தானே

பஞ்சாக்ஷரம் பூதங்களும், வண்ணங்களுமாக பொருந்தி நின்றது.

திருமந்திரம் - 928

நின்றது சக்கரம் நீரும் புவியெல்லாம்
மன்றதுவாய் நின்ற மாயை நன்றுடனே

கன்றது வாக கறந்தனன் நந்தியுங்
குன்றிடை நின்றிடும் கொள்கையனுமே
திருவைந்தெழுத்து ஓதியே அருள் நந்தி
அகம்படிமைத் தொழில் பூண்டான்.

திருமந்திரம் - 930

அகார உகார மகார சிகார நடுவாய்
வகார மோடாலும் வளியுடன் கூடிச்
சிகாரமுடனே சிவன் சிந்தை செய்ய
ஓகார முதல்வன் உவந்து நின்றானே

பிரணவ சொரூபமாகிய இறைவன் பிரணவ சகிதமாகிய பஞ்சாக்ஷரத்தை செபிக்க மகிழ்வன் என்பது உணர்த்தப்படுகிறது. ஓம் நமசிவாய என்னும் சடாக்ஷரத்தை இடகலை, பிங்கலைகளோடு கூடி செபித்தும் சிகாரத்தோடு வைத்து சிவனை தியானிக்க பிரணவ நாதனாகிய பெருமான் மகிழ்ந்து நிற்பன்.

அகார உகார சிகார நடுவாய் :

ஓம் நமசிவாய என்பதில் சிகாரம் நடுவாய் உள்ளதை காண்க.

வகாரமோடு ஆறு ஓம் வசியநம என்பது, சிவாயநம என்று சிவ எழுத்தை முதற்கண் நிறுத்தி திருவைந்தெழுத்தின் பொருளாகிய சிவனை தியானிக்க என்பது.

ஓகார முதல்வன் — பிரணவநாயகனாகிய இறைவன்

ஆகவே ஓம் நமசிவாய, ஓம் வசியநம, ஓம் சிவாயநம என்று தியானிக்கில் இறைவன் மகிழ்ந்து வெளிப்படுவான் என்பது.

திருமந்திரம் - 940

அருவினில் அம்பரம் அங்கெழுநாதம்
பெருகு துடியிடை பெருகுவிந்து
மருவியகார சிகார நடுவாய்
உருவிட ஊறுமுறு மந்திரந்தானே

திருவைந்தெழுத்து உச்சரிக்கும் முறைமையும், அதனாலுறும் பயனும் உணர்த்துகிறது. அருவாய் இருக்கின்ற ஆகாயத்தில் எழுகின்ற நாதமும், கருணை பெருகிற உடுக்கை போலும் இடையுடைய உமாதேவியார் விரும்பி அமர்ந்த விந்துவும் கூடிச் சிகாரத்தை நடுவாக அமைத்து ஆன்மாவானது உருவேற்றச் சிவானந்த தேன் ஊறும்.

அருவினில் அம்பரம் — ஆகாயம் அருவாய் ஏனைய பூதங்களுக்குவிரிந்து இடங்கொடுத்து நிற்பது. ஆதலால் அருவினில் அம்பரம் என்று அருளியது.

அங்கு எழுகின்ற நாதம் — இயல்பாகவே எழுகின்ற நாதம் - அகாரம்
பெருகு துடியிடை பேணிய விந்து — உகாரமாகிய புள்ளி சிவசக்திக்கு இருப்பிடமாதலின் இவ்வாறு கொள்ளப்பட்டது

அம்பரம் — சிவமும் நாதம் அதன் தத்துவம், துடியிடை சக்தியும், விந்து அசன் தத்துவமுதாய் அமைதல் காண்க

மருவி சிகாரம் நடுவாய் — நாத பிந்து சேர்க்கையாகி பிரணவத்தோடு கூடி சிகாரத்தை நடுவாகக் கொண்டு உச்சரிக்க.
ஓம் நமசிவாய என்று உச்சரிக்க.
உருவிடுதல் — செபித்தல்

யகாரம் உருவிட — ஆன்மா உருவேற்ற ஊறும் மந்திரம் அதனுள் உற்ற தேன் சுரக்கும்

திருமந்திரம் - 941

ஆறெழுத்தோதும் அறிவார் அறிகிலார்
ஆறெழுத்தொன்றாக ஓதி உணர்வார்கள்
வேறெழுத்தின்றி விளம்ப வல்லார்கட்கு
ஓரெழுத்தாலே உயிர் பெறலாமே

திருவைந்தெழுத்தை ஒன்றில் ஒன்றடக்கி சிவாக்கரத்தை மட்டும் ஓதவல்லார் உறுபயன்றுதலிற்று. பிரணவத்தோடு கூடிய பஞ்சாக்ஷரமாகிய ஆறெழுத்தையும் ஓதும் ஞானத்தை அறியமாட்டாதவர் யார்? ஆனால் ஆறெழுத்தையும் ஒன்றாகவே ஓதி உணரமாட்டார்கள். வைகரியாக அன்றி அதிசூக்குமமாக ஓதவல்லார்க்கு சிவ எழுத்தாகிய ஒன்றினாலேயே ஆன்மா ஆக்கத்தை அடையலாம்.

ஆறெழுத்து — ஓம் நமசிவாய - ஓம் சிவாயநம என்பது. இவைகளை ஓதுவது எல்லோராலும் இயலும்

ஆறு எழுத்து ஒன்றாக ஓதியுணரார்கள் —

அங்கணம் நகாரம் மகாரங்களை மாயையுள் அடக்கி மாயை வகாரமாகிய சக்தியுள்ளடக்கி யகாரமாகிய உயிர் மலம், மாயை, கன்மங்கள் அற்றதும் அதனை சிவாக்கரங்களாகிய சிவசக்தியிடம் அருக்கன் ஒளியில் விளக்கொளிபோல் கலக்கச்செய்து சக்தியையும் சிகாரமாகிய சிவத்துள் அடக்கி 'சி' மட்டும் எல்லாம் அடங்கி நிற்கும். பரசிவ நிலையை ஆராய்ந்து தெளிதல் இவை எல்லோருக்கும் கூடாது. எனவேதான் உணரார்கள் என்று அருளப்பட்டது.

விளம்ப வல்லார்கட்கு —

முயற்சியாலும் இடத்திலும் எழுத்தொலிகள் வேறுபடுகின்றன. அதனுல் வினையும் வைகரி வாக்கு தன்செவிக்கு கேளாவண்ணம் நுணிகி தியானிக்க வல்லார்க்கு என்பதை குறிப்பிடுகிறது.

ஓரெழுத்தாலே உயிர் பெறலாமே —

ஓரெழுத்து - சி - உயிர் எய்த வேண்டிய உறுதியை பெறுதல் ஆகவே மல மாயைகளை நீங்கிய உயிர் சக்தி சிவத்தில் ஒடுங்கு சக்தியும் சிவத்தில் ஒடுங்கி நிற்கும் நிலையை தியானிக்கில் உயிர் எய்துவதற்கான இன்ப நிலையை எய்தும்.

ஆரெழுத்து — ஷடாக்ஷரம் :

முருகப் பெருமானுக்கும் மூலமந்திரம் ஆறெழுத்து. அதை உரைப் பவர்களுக்கு வல்வினையும், தொல்வினையும் தேயும். பிறவிப் பெரும் பிணி நீங்கும். இம்மை நலமும், மறுமை இன்பமும் உண்டாகும்.

அருணகிரி பெருமான் திருப்புகழில் :

வசனமிக வேறறி எனும் திருப்புகழில்

"இசைப் பயில் சடாக்ஷரமதாலே
இகபர சௌபாக்யம் அருள்வாயே" என்று அருளுகிருர்

வள்ளல் பெருமான் இந்த ஆரெழுத்தை ஓதி வெண்ணீர் அணிந்து கொண்டால் இம்மை மறுமை நலன் எய்தும். துன்பம் ஒருபோதும் உண்டாக மாட்டாது என்று அருளுகிருர்.

நீராலும், நெருப்பாலும், பூமியினுலும், காற்ருலும், ஆகாயத் தாலும், இரவிலும், பகலிலும் உண்டாகும் சங்கடங்களைத் தீர்த்து அடியார்களுக்கு அருள் பாலிப்பது அவ்வாறக்கரங்களே. மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணி பூரகம், அனுகதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களிலும் விளங்குவது ஆறு அக்கரங்களே.

துய்யமூலமும் குய்யமும் தொப்புளும்
மெய் அநாகதமும், மின்விசுத்தியும்
மையமான லலாடமுமாய் நிற்கும்
ஐயனுர் பெயர் ஆறக்கரங்களே - பாம்பனடிகள்

ஆறெழுத்துண்மை யறியார்கள் கன்மமலக்கலப்பால்
வேறெழுத்தில்
வெண்ணீறில்லை மால்சிவ வேடமில்லை தேறெழுத்தேதயன்
கையுங்களுக்குழி சேறலும் பின்மாறெழுத் தந்தகன்தன்
புலத்தேயென்றும் வௌவுவதே - ஆறெழுத்தந்தாதி

வேத ஹிருதயமாகிய எம்பெருமானுடைய ஆறெழுத்தை முறைப் படி குருமூர்த்தியிடம் உபதேச வழியாக பெற வேண்டும். பெற்று காதலாகி, கசிந்து, கண்ணீர் மல்கி ஓதுதல் வேண்டும்.

பஞ்சாக்ஷரத்தின் மந்திர வகைகள் :

1) மூல பஞ்சாக்ஷரம்
2) தூல பஞ்சாக்ஷரம்
3) சூக்கும பஞ்சாக்ஷரம்
4) காரண பஞ்சாக்ஷரம்
5) மிசிர பஞ்சாக்ஷரம்
6) தார பஞ்சாக்ஷரம்
7) முத்தி பஞ்சாக்ஷரம்
8) மாயாக்ய பஞ்சாக்ஷரம்
9) பிராசாத பஞ்சாக்ஷரம்
10) நின்மல சாக்கிர பஞ்சாக்ஷரம்
11) நின்மல சொப்பன பஞ்சாக்ஷரம்
12) நின்மல சுழுத்தி பஞ்சாக்ஷரம்
13) நின்மல துரிய பஞ்சாக்ஷரம்
14) நின்மல துரியாதீத பஞ்சாக்ஷரம்

என்னும் பதினன்கு வகை பஞ்சாக்ஷர மந்திரங்களாகும்.

" எல்லா மந்திரங்களிலும் மிகச் சிறந்தது திருவைந்தெழுத்தே. அதற்கு ஒப்பானதும் உயர்வானதும் ஆன மந்திரம் ஒன்றுமில்லை. அதன் வகைகள் பலவற்றுள் மேலானது நின்மல பஞ்சாக்ஷர மந்திரமேயாகும். இது மேலுரைத்தவாறு ஐந்து வகைப்படும். இவை நள்ளிரவில் செபிக்கில் மிக்க பலனையளிக்கும். இவற்றை அனுஷ்டித்து செபித்தவர் சர்வ சக்திகளையும் பெற்று அத்துவித முத்தியடைவர் "

— காமிகம் - நிசானுபோக சாரம் - சைவ பூஷண சந்திரிக்கை

இரண்டோரிரண்டு மூவிரண்டை யிரண்டாறிரண்டு மீமிசைஎண்
இரண்டோரிரண்டு கொண்டிருந்த இதழ்பங்கயங்கள் கடந்துபோய்
இருந்த குளத்தின் மேலோராயிந் தோட்டமல் கமலமிசை
இருந்த சோதிதனைக் கண்டம்எண்ணம் முடிப்போம் எனஎழுந்து

- பிரபு - விமலை - 23

அருமறை மருங்கின் ஐந்தினும் எட்டினும்
வருமறை எழுத்தின் மந்திரம் இரண்டும்
ஒருமுறையாக உளங்கொண்டு ஓதி - மந்திரத்தை
ஒருமதன்மைத்தாக மனத்தால் நினைத்து வாக்கால் துதித்து

— சிலப் - 128 - 130 - அடியார்க்

வாசிவாவென்ன வழங்கும் மூன்றெழுத்தும்
பேசுதன் முதிர்ந்தபேறென மொழிந்தான்
இன்பமாம் வாசிஎன்னும் ஈரெழுத்தில்
அன்புறுமகிமை அதிசயம் என்றான்
சிஎழுத்தென்றே சிந்தையில் கருதத்
தூயநற்சுடராய்த் தோன்று வையென்றான்

— திருச்செந்தூர் அகவல்

திருமந்திரம் - 2673

பழுத்தன ஐந்தும் பழமறைக்குள்ளே
விழித்தங் குறங்கும் வினையறிவாரில்லை
எழுத்தறிவோ மென்றுரைப்பார்கள் ஏதர்
எழுத்தை யழுத்தும் எழுத்தறியாளை

பழமறைக்குள்ளே பழுத்து முதிர்ந்தன சிவயநம என்னும் திருவைந்தெழுத்தாகும். அதனை நம் செயலற்று நாமற்றுப் பின் நாதன் செயலாகவே நின்று நாடுதல் வேண்டும். இந்நாட்டத்தினை விழித் துறங்கும் நிலை என்பர். இதனை அறிதுயில் எனவும் கூறுவர். இந்த உண்மை நிலையை உணர்ந்ததில்லை அறியாமை உள்ள மூடர்கள். சிவய நம என்னும் எழுத்தை வன்மை, மென்மை, இடைமை கலந்தனவே யாம், இவற்றை நாங்கள் அறிவோம் என்று கூறுவர். அவைகளை எழுத் தாக மட்டும் கருதுவர். அது பிறப்பினுக்குரிய எழுத்தை அழுத்தும், படைக்கலமாகிய எழுத்தென என்றும், விதியை மாற்றும் எழுத்து என்று அறியார். அறிந்தவர்கள் உண்மை அறிந்தவர் ஆவர். அதை நடைமுறையில் கைக்கொண்டு பெரும் பயனும் எய்துவர்.

திருமந்திரம் - 1984 - தருமையாதீன வெளியீடு
அருணை வடிவேல் முதலியார் உரையாசிரியர் நூலிலிருந்து
கீழ்க்கண்டவை கொள்ளப்பட்டது.

திருமந்திரம் - 875

ஆனந்தம் மூன்று அறிவு இரண்டு ஒன்றுகும்
ஆனந்தம் சிவாய அறிவார் பலர் இல்லை
ஆனந்தமோடும் அறிய வல்லார்களுக்கு
ஆனந்த கூத்தாய் அகப்படுந்தானே

திருவைந்தெழுத்தில் துன்பத்தை தரும் பாச எழுத்துக்களாகிய நகாரம், மகாரம் இரண்டும் நீங்க, எஞ்சிய மூன்றெழுத்தும் நின்றவழி உளதாவது இன்பமே. அம் முன்றெழுத்துக்களில் சிகாரம், வகாரம் ஆகிய இரண்டெழுத்துக்கள் அறிவெழுத்துக்கள் ஆகும்.

சிகாரம் — அறிவை செலுத்துவது ;
வகாரம் — செலுத்தியவாறிலே சென்று அறிவது

அதிலே அறிவதாகிய வகாரம் தன்னை செலுத்துவதாகிய சிகாரத்திலே அடங்க சிகாரம் வகாரம் ஆகிய இரண்டு எழுத்துக்களும் ஓர் எழுத்தாய் விடும். அதுதான் 'சி' அதுவே ஆனந்தாதீத நிலை.

இவ்வாறு சிவாய என்னும் மூன்றெழுத்து ஆன்மாக்களுக்கு ஆனந்தப் பேற்றினை வழங்குவது என்பதை அறிபவர் மிகச் சிலரே.

அவற்றை அன்போடு அறிய வல்லார்க்கு ஆனந்தம் அம்பலத்தில் கண் கூடாக காணப்படும் அருள் நடனத்திலேயே எளிதில் உண்டாகும். இது அசபா யோகத்தின் முதிர்ந்த நிலையாகிய சிவ மந்திர யோகத்தினது சிறப்பு கூறப்பட்டது.

திருமந்திரம் - 886

செம்பு பொன்னாகும் சிவாயநம என்னில்
செம்பு பொன்னாகத் திரண்டது சிற்பரம்
செம்பு பொன்னாகும் சிரீயும்கிரீயும் எனச்
செம் பொன்னான திருவம்பலமே

செம்பு பொன்னாவது போன்ற அதிசய பயன் ஞான நடனத்தின் வடிவாய் அமைந்த சிவாயநம என்பதை ஓதினால் கிடைக்கும். ஸ்ரீம் ஹ்ரீம் என்பன அவ்வடிவம் நிற்கும், செம்பொன் மயமான திருவம்பல மாகிய சத்தியின் எழுத்துக்கள். ஆதலால் அவற்றை ஓதினாலும் மேலை மந்திரத்தின் பயன் விளையும். செம்பு பொன் உவமைகள் முறையே உயிர்க்கும் சிவத்திற்கும் கொள்ளலாம்.

திருமந்திரம் - 888

வாறே சிவாய நமச்சிவாய நம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே அருளால் வளர்கூத்து காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே

மேற்கூறிய ஞான நடனத்தின் வடிவாகிய சிவாயநம என்னும் மந்திரத்தை பலகாலும் ஓதி உணர்ந்து, பயின்று வந்தால் இறப்பும் பிறப்பும் இல்லையாகும். மரணமிலாப் பெருவாழ்வு கிடைக்கும். அதற்குமுன்னே அப்படி ஓதுவதனாலே ஞான நடனத்தை நேரே காணுதல் கூடும். முன்னே சொன்ன செம்பு பொன்னானது போன்ற பயனாகிய சிவமாந்தன்மை பெருவாழ்வும் கிடைக்கும்.

பிரணவ முதலாய் சிவாய என்பதுபின்
பிணைந் துறக்கிளக்கும் ஆறெழுத்தும்
விரவும் அந்நூலின் எவ்வகை மனுக்கு
மேலதாம் அவைத்தரு பொருள்கள்
பரனோடு பஞ்ச சக்திகள் இரண்டு
பயனுமாய் பயின்ற வர்க்காதி
பருவிய பதத்தின் ஆல் என்ன
மறைமுத லனைத்தும் தோன்றினவால்

என்னும் தணிகை புராண செய்யுளால் திருவைந்தெழுத்துடன் முன் பிரணவம் சேர்த்துக்கிளப்பது ஆறெழுத்து மந்றமென்பபடும்.

அவ்வெழுத்துக்களால் குறிக்கப்படும் பொருள்கள் :

பரன், மூர்த்தி, வானம், ஆர்த்தி, பூரணி, ஈசானி என்பன. இதில் பின் ஐந்தும் ஐந்தொழில் செய்யும் ஐந்து சக்திகள் ஆகிறது. இதை ''மேலைச் சொரூபப் பெண்'' என்னும் திருமந்திரத்தை ஒப்பிட்டு விளக்கம் காண்க.

மேலும் திருமூலர் ஓங்காரம் எல்லாவற்றையும் அடக்கி நிற்பது. அதன் வயிற்சி பிரதித்து முக்திகளைத் தரும் என்று அருளுகிறார்.

திருமந்திரம் : நாடும் பிரணவ நடுவிருபக்கம்
ஆடுமமர்வாய் அமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண்முக நமசிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத்தாயதே

பிரணவம் — ஓங்காரம்

இதன் விவரத்தை கீழே விவரமாக காண்போம்.

சிவப்ரகாசம் :
திருவைந்தெழுத்தில் ஆன்மா திரோதம் ஆசுஅருள்சூழ்
தரநடுநின்ற தொன்றுந்தன்மையுந் தொன்மையாகி
வரநமமிகுதியாலே வாசியில் ஆசையின்றிக்
கருவழிசுழலும் வறுங்காதலார்க்கு ஓதலாமே

இதில் ஓங்கார நடுவில் சிவமும், நடு வட்டத்தில் நமச்சிவாய முகமாக ஓதப்படுகின்றது. சிவபெருமான் ''ஒரு சுடராய் உலகேழு மானாய் கண்டாய், ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் கண்டாய்'' எனத் திருத்தாண்டகத் திருப்பதிகத்தில் காண்க.

பிரணவநடு இருபக்கமும் — பிரணவ நடுவில் இருபக்கமும்
அவர் — அந்த சக்தி சிவத்தின்
ஆடும் வாய் — பேசும் வாய் நடுவின் — நடு வட்டத்துள்
முகம் நமசிவாய — நமசிவாய என்பது முகமாக
புறவட்டம் — மேல் வட்டம்

திருமூலம் 'ந'வை முன்வைத்து ஓதுவார்கள் நன்னெறி செல்வ ராவர்கள் என்று அருளுகிறார். மேலே நமசிவாய என்று தூல பஞ்சா க்ஷரம் ஓதினால் ஐந்தொழில் நிகழும், அருள் நாடாது என்றெல்லாம் பார்த்தோம். அப்படியானால் அதை வைத்து ஏன் ஓத வேண்டும் என்ற வினா எழும்.

திருமந்திரம் : நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று

நாலாம் எழுத்தே நவில வல்லார்க்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே

சிவாயநமவில் நாலாவது எழுத்து 'ந'. இது உலகை உருவாகக் கொண்டு இயங்கும். இதனுள் உலகம் அடங்கி அதன் ஆணை வழி நடக்கும் 'ந'வை முன் வைத்து ஓதுவார்கள். அதாவது நமசிவாய என்று ஓதுபவர்கள் நன்னெறி செல்வராவார்கள்.

எனவே தூல பஞ்சாக்ஷரம் ஓதுவது நன்னெறிக்கு அழைத்துச் செல்லும். அது முதல் படியர்கும் என்பது தெளிவாகிறது. பெரிய படிப்பு படித்தவர்கள் எல்லாம் முதல் வகுப்பிலிருந்து தானே சென்றவர்கள். எனவே நாம் முன்னேற்றத்திற்கு முதல் படியாக நமசிவாய எனும் தூல பஞ்சாக்ஷரத்தை ஓதி அதன் பொருள் தெரிந்து தெளிதல் வேண்டும்.

வள்ளல் பெருமான் இதே கருத்தை பரிபாஷையில் கூறுகின்றார் :

ஆவியீரைந்தை அபரத்தே வைத்தோதில்
ஆவியீரைந்தை அகற்றலாம் - ஆவியீர்
ஐந்துறலாம் ஆவியீரைந்தரலாம்; ஆவியீ
ரைந்திடலாம் ஓரிரண்டோடய்ந்து

ஆவி — ஆன்ம அக்கரம் என்னும் ஈரைந்து (10) – யகரம் - ஆன்மா
அரலாம் — களைந்து விடலாம்
ஐ — சிவத்திற்கு (ஆவியீரைந்தை — ஆவி - ஈரைந்தை - ஐ)
அபரத்தே — பின்னுக வைத்து — பொருத்து
ஆயிரைந்து - ஆபத்துக்களையும் வியீரைந்து - விபத்துக்களையும்
அகற்றலாம் — நீக்கிக் கொள்ளலாம்

ஆவி - ஈர் - ஐந்து — ஆவி — ஆன்மா இயற்கையை
ஈர் — ஈர்க்கும் - கெடுக்கும்
ஐந்து — ஐந்து மலங்களையும்

ஆவி — ஆன்மாவிற்குறுதியாக ஈரைந்து — பத்தியை
உறலாம் — பொருத்தலாம் ஆய்ந்து — சேர்க்கும் வகை தெரிந்து
ஆவினு — பிராணனது கலைகள் ஈரைந்து — பத்துடன்
ஓர் — ஒரு இரண்டோடு — இரண்டையும் கழியாமல்
இடலாம் — சேர்த்துக் கட்டிக் கொள்ளலாம்

சி (சிவம்) வா (அருள்)-வை சேர்த்து கட்டிக் கொள்ளலாம். 'ய'கரத்தை 'சி'கரத்திற்கு பின்னுல் பொருத்து என்பது நமசிவாய என்பதை குறிக்கிறது. அப்படி நமசிவாய என்று ஜெபிக்கில் ஆபத்து விபத்துக்களையும் நீக்கிக் கொள்ளலாம்.

ஆவியை (ய)வை கெடுக்கும் ஐந்து மலங்களையும் (ந - ம) நீக்கலாம். அப்படி நீக்கினால் சி - வ வோடு சேரும்.

— திருவருட்பா (அண்ணாமலை பல்கலைக் கழக வெளியீடு ஔவை துரைசாமிபிள்ளை உரை)

அஞ்செழுத்தோதி உய்ந்திடா பிழையை
ஐயநின் திருவுளத்தெண்ணி
வெஞ்சன் என்றையோ கைவிடின்சிவனே
வேறு நான் யாது செய்வேனே
கஞ்சன்மான் முதலோர்உயிர்பெற விடத்தைக்
களத்திருத்திய அருட்கடலே
சஞ்சிதமறுக்கும் சண்முகம் உடையோன்
தந்தையே ஒற்றிஎம்தவமே

பிரமனும், திருமாலும், பிறரும் உயிருடன் நெடிது வாழ்தல் வேண்டிக் கடல் விடத்தைக் கழுத்தில் இருத்திக் கொண்ட அருட் கடலே, வினைத்திரளை எஞ்சாமல் கெடுக்கும் ஆறுமுகப் பெருமானுக்கு தந்தையே, ஒற்றிநகர்கண் எழுந்தருளும் தவப்பயனே, ''திருவைந் தெழுத்தை முறைப்பட ஓதி உய்தி நாடாத'' என் பிழையை நின் திருவுளத்திற்கொண்டு கொடியன் என்று என்னை கருதி கைவிடுவாயேல் சிவனே யான் வேறு ஒன்றும் செய்தற்கில்லேன்.

திருவைந்தெழுத்தை ஓதி உய்திப் பெறாப் பிழையை பொருத்தருள வேண்டி விண்ணப்பம். இதிலிருந்து நாம் அறிவது திருவைந்தெழுத்தை ஓதி உணர்ந்தால் உய்தி பெறலாம் என்பது.

திருமந்திரம் 943

அருவினில் அம்பரம் அங்கெழும் நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவிய யகாரம் சிகாரம் நடுவாய்
உருவிட ஆறும் உறு மந்திரமே

சிவம் சூக்ஷ்மமான நிலையில் பரவெளியாய் நிற்கும்; அதனின்று நாதம் தோன்றும். பின்பு சக்தி அச்சிவத்தை விட தூலமாய் அவ் வெளியினுள் தோன்ற, அதனிடத்து விந்து தோன்றும் அவ்விதத்தில் நாத விந்துக்களின் நடுவில் சிகார யகாரங்கள் பொருந்தி நிற்க, நின்ற ஆறெழுத்துக்களும் உயர்ந்த மந்திரமாய் விளங்கும். அதனால் அம் மந்திரத்தை மேற்கொண்டு செபிக்க ஆறு எழுத்தாய் நிற்கும் மந்திரம் 'ஓம் நமசிவாய' என்பது. முன்னர் நின்ற விந்துவை அடுத்து நிற்பது யகாரமாதலால் அதனை முன்னர் கூறப்பட்டது.

*திருமந்திரம் 963*

> அஞ்சுக அஞ்செழுத்துண்மை அறிந்தபின்
> நெஞ்சகத்துள்ளே நிறையும் பராபரம்
> வஞ்சகம் இல்லை மனைக்கு அழிவும் இல்லை
> தஞ்சம் இது என்று சாற்றுகின்றனே

அஞ்செழுத்தின் பொருள் அறிந்தவர்களுக்கு ஐந்து மலங்களும் நீங்கிப் போகும்படி இறைவன் அவர்கள் நெஞ்சத்தில் நிரம்பி விளங்குவான். அவர்கள் உறைவிடத்திற்கும் அழிவு என்பது உண்டாகாது. ஆகையால் இந்த மந்திரமே யாவர்க்கும் புகலிடமாகும். நான் உண்மையாகவே சொல்லுகின்றேன். இதில் சிறிதும் பொய் இல்லை.

ஐந்து மலங்கள் :
ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி என்பன.



## அத்தியாயம் - 10

# பஞ்சாக்ஷர வழிபாடு
# உபாசனக்ரமம்

*காழிக்கண்ணுடைய வள்ளலார் பஞ்சாக்கரமாலை என்னும் நூலில்:*

**பஞ்சாக்ஷர ஞானபூசை கிரமம் :**

*செய்யுள் - 37*

> ஒன்றே சிவானுபவம் ஓரெழுத்தா லுற்றிடுவ
> தொன்றே கொடுத்திடுவ தோரெழுத்தங் - கொன்றேதான்
> ஓரெழுத்தின் பேறொன்றே ஓரெழுத்துதான் மறைப்பது
> ஓரெழுத்துப்போம் போக்கொன்றே

சிகரம் அனுபவத்தை தருவது, ஒருவகையாக அமைவு பெறுதாகியும்
வகரம் அனுபவத்தை கொடுப்பதொரு தன்மைத் தல்லதாகவும்
நகாரம்தான் அனுபவத்தையும் இவனையும் தெரியாமல் நிறுத்த லொருத் தன்மைத்தல்லதாகவும்
மகாரம் தான் கெட்டு மேன்மேலும் அனுபூதி விளைத்து கதற்கேடே நித்தமாப் போவதொரு தன்மைத்தடல்லவாகவும்
ஞானவான்கள் இம்முறையே உபாதி சூன்யம் பிறந்தவிடத்திலே அனுபவிப்பார்கள்.

38) வர்க்கிழந்த பேரின்ப வாசகமாம் அஞ்செழுத்து
நோக்கி யனுபோக நுகர்வார்கள் – நீக்கிய ஆறு
அத்துவாவின் மந்திரங்களன்றி அருள் அஞ்செழுத்தால்
நித்த முதலா சரிப்பர் நின்று

வாக்குமனுத்தமாகிய அஞ்செழுத்தும் தரிசித்து அனுபூதியிலே நிற்பார்கள். வாசனு போதம் அறும் வகைக்கு நித்திய கன்மம் முதலானவை யாசரிக்கும் போது சத்தியோ நிருவான தீக்ஷையும் சுத்தி செய்த ஆறு அத்வாக்களுக்கு ஒன்றுகிய பஞ்சப்ரம சடாங்கங்களை உபாதியாக்கிச் சுத்த பஞ்சாக்கரத்தால் நித்திய கன்மம் முதலானவை ஆசரிப்பார்கள்.

41) தத்துவங்கள் மூன்றில் தரணி முதலாமாயை
சுத்தம்முதன் மூன்றிரண்டு சுத்தியாய்ப் - பெத்தநிலை
அஞ்செழுத்தால் ஆசமனம் செய்து பிராணுயாமம்
அஞ்செழுத்தால் செய்திடுவதாய்ந்து

ப்ருத்வி முதலான ஆன்ம தத்துவங்கள் 24ம், மாயை முடிவான வித்யா தத்துவம் ஏழும், சுத்த வித்தை முதலான சிவ தத்துவங்கள் ஐந்தும் ஆகிய முப்பத்தாறும் சுத்தி வரத் தக்கதாக சுத்த பஞ்சாக்ஷரத்தால் ஆசமனம் செய்து பிரணவத்துடன் அஞ்செழுத்தை பிராணுயாமம் செய்க' இவ்விதம் இரேசகத்தில் பிரணவத்தையும், பூரகத்தில் பஞ்சாக்கரமும் சேர்த்து பிரணுயாமம் செய்யின். பிரணவமாய் அதற்கு அதீதமாய் உள்ள சிவத்தை இரண்டறக் கலப்பது கும்பகம் ஆகும்.

42) அத்திரங்கள் அஞ்சுமாம் அஞ்செழுத்தாலே கரங்கள்
சுத்திசெய்து ஈசானுதிசூழங்க முய்த்து எழுத்தஞ்சால்
கரங்களுடன் அங்க நியாசம் செய்தல்
அஞ்சாலே சந்தி நியாங்கும்

ஐவகை அத்திரங்களுக்கும் ஆதாரமான இச்சா ஞான கிரியைகளைக் கொண்டு பஞ்சாக்ஷரத்து முறையே கரசுத்தி பண்ணி, ஈசானுதியும் அங்கங்களும் பெத்த பஞ்சாக்ஷரத்தில் நின்ற முறைமையை சுத்த பஞ்சாக்ஷரமாக மாறிக் கரநியாசம் அங்க நியாசங்களை செய்து காலங் கடந்த பஞ்சாக்ஷர நிலையைச் சந்திகளாக தியானிப்பன்.

43) சந்திகண் மூன்றற்றேகசந்தி பரையே கரியாய்ப்
புத்திசெய் தெக்காலுமொரு போதக - வந்த
நியாத முதலஞ்செழுத் திளிர்கொண்டு கும்ப
தியான கரத்தான் மேற்றெளி

மூன்று காலங்களில் நின்ற சந்தி தேவதைகளின்றியே போக்குவரவற்றுப் பூரணமாய் நின்ற பரையாகிய சிவசக்தியே ஏகசக்தியாக சாக்ஷியாக நினைந்து, எப்போதும் ஒருகாலமாக தியானித்து, அங்க நியாசம் செய்து பஞ்சாக்கரமாகிய அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்தாலாகிய கும்ப சலத்தால் கும்பாபிஷேகம் பண்ணிக் கொள்வாயாக.

44) மாற்சன்மாக நகார மறைப் பற்று
மேற்சன்னந் தீரிருளை வீட்டியதன் - பாற்செல்
லகம குடணஞ் செய்யருண் மண்டலத்திற்
தகுசிவற்க் கஞ்சலி செய்தாழ்ந்து

திரோபாவ மறைபோகிய நகாரத்தையொழித்து அருளிலே நிற்பது மாற்சனமாகவும், சென்ன ஏதுவான ஆணவத்தைச் சிவ உதயத்தாற் கெடுத்தது அகமயடன் ஸ்நாநமாகவும் கொண்டு அருள் மண்டலமாகிய பரையிலே உதயமாயுள்ள சிவனுக்கு அர்க்கியாஞ்சலியாக தான் கீழ்பட்டு அந்த சிவன் மேற்பட்டு நிற்பது சிவனுக்கு கொடுக்கும் முறைமையென்பதாம்.

45) ஆசில் அருள் வடிவேயான சகளீகரணம்
பூசைதனக் கஞ்செழுத்தால் போற்றிசெய்து - பேசாப்
பிரணவம்சேர் அஞ்செழுத்தால் பின்பு அர்க்யஞ்செய்து
அரன் அருளாக தெளிப்பாயாங்கு

தூல தேகமும், சூக்கும தேகமும், மந்திர தேகமும் அற ஞானமே சகளீகரணம் செய்து சிவார்ச்சனை செய்வான். பிரணவத்தில் பெத்த பஞ்சாக்ஷரம் மாறி முத்தி பஞ்சாக்ஷரம் நின்ற நிலையே அர்க்கியம் தாபித்து அந்த ஞன ஜலத்தாலே அவ்விடமும் சிவ பரிபூரணமாக புரோட்சிப்பான்.

46) அவனிமுதல் நாதாந்தம் அஞ்செழுத்தால் நின்ற
சுவடுதுவாரமதாய் தோன்றும் அவைதரிசித்து
அவைசிவமாம்
எங்கும் பரையாம் துவாரத்தில் எய்திடுவார்
அங்கு நமவிக்கினங்களற்று

பிருதிவி முதல் நாத மீறுக பஞ்சாக்ஷரத்துள் அடங்கி நின்ற நிலையைத் தானமாக்கி, இந்த தத்துவங்களை நாட்டிக் கழற்றியே துவாரத்துப் பிரவேசிப்பதாக நினைத்து பரையாகிய துவாரத்தில் புகுந்து பஞ்சாக்கரம் நிறைந்த கும்ப ஜலத்தால் கும்பாபிஷேகம் பண்ணிக் கொள்வதனுல் திரோபாவமும், மலமுமாகிய (ந - ம) விக்கினங்களைப் போக்கி நிற்பார்கள்.

47) முத்தி நிலையளிக்கு முற்பரையாம் வாயிலிடை
அத்திரமா இச்சா ஞானக்கிரியைச் - சத்திகளை
ஏத்தி நமவாத்து பதிப்பிரமற்கு எட்டாத
வாத்துப் பதியை பணிந்துவாழ்

மோட்ச வாயிலை தந்த பரையாகிய வாயிலுள் இச்சா ஞான கிரியா சக்திகளை வழிபட்டு நகார மகாரமாகிய திரோபாவத்தையும் ஆணவத்தையும் பிரியாத வாத்துபதி பிரமனுக்கும் எட்டாத ஞானபூமியாகிய வாத்துபதியை அர்ச்சிப்பாய்.

48) சித்தாந்தம் ஓரிருபத் தெட்டும் சிகாரமுதல்
வைத்தாரை அஞ்செழுத்தால் வந்தித்துச் - சுத்தமாம்
அஞ்சாம் எழுத்தால் நிவிர்த்தி கலையாதிகழித்து
அஞ்சா நடம் போயிறைஞ்சு

சிவாகமம் இருபத்தி எட்டையும் ஈசானுதி பஞ்ச முகங்களிலும் அருளி செய்தும், சிகார முதலாகிய சூக்கும பஞ்சாக்கரத்தை அனுக்ரகித்தவனுமான ஆதி குருவாகிய சதாசிவ மூர்த்தியை சுத்த பஞ்சாக்கரத்தாலே நியசித்து நிவிருத்தியாதி பஞ்சகலைகளில் சஞ்சித கன்மத்தை சுத்த பஞ்சாக்ஷரத்தாலே தரிசித்து பூதசுத்தி பண்ணி முன்சொன்ன பஞ்சாக்கரமான திருக்கூத்தில் இரண்டற நிற்குமதே அந்தர்யாக பூசையாம்.

49) தூயவெழுத்தாலாடுந் தூக்கியதன் நோக்கிய தேயான
நிலை அந்தர்யாகம் செய்தே - மெய்யெழுத்து
அஞ்சால் விசேடார்க்யம் செய்திர வியங்கள்
அஞ்சாலே சுத்தி செய்வாயங்கு

சுத்த பஞ்சாக்கரத்திலே முதல் எழுத்தாம் சிகாரமாகிய அனுபூதியே திருக்கூத்தாக கண்டு பூசை செய்வதே அந்தர்யாக பூசையாக்கி அச்சுத்த பஞ்சாக்கரத்தாலே விசேடார்க்கியம் கற்பித்துப் பிரபஞ்சம் முழுவதும் சுத்த பஞ்சாக்ஷரமாக்கி காணுமதுவே திரவிய சுத்தி.

50) ஆனந்த மூலத்தே அன்பெழுத் தேவல்புரிய
வானத்தி பூஜைசெய அவ்விரண்டும் - தானந்த
மாக அதில்ஓவாத அர்ச்சனையால் ஆன்மாவுக்
காக வருசுத்தி செய்வதாங்கு

ஆனந்த மூலமாகிய சிவனை (சி) இரண்டாம் எழுத்தான அருளாலே (வ) ஏவல் செய்ய ஆனந்தியாகிய ஆன்மா ஐக்கியம் பிரவேசிப்பதே சிவ பூஜையாக, நகார மகாரங்களாகிய விக்கினங்களை கெடுத்து, ஒழியாத ஐக்கியமாகிய சிவோகம் பாவனையே ஆன்ம சுத்தி.

51) மூவைந்து தூலத்தின் மூவைந்து சூக்குமத்தின்
மேலைந் தெழுத்தின் விதிப்படியே - நாவொன்றச்
சொல்லாத ஐந்தெழுத்தின் சுத்தியென ஐந்துமற
நில்லா நிலையாகி நில்

பதினைந்து வகையாகிய தூல சூக்கும பஞ்சாக்ஷரத்தின் பொருளா கவே வேறுபடற உணர்ந்து நாவாற் சொல்லாமல் அறிவால் பஞ்சா க்ஷரத்தை அனுபவிப்பதே மந்திர சுத்தியான நில்லா நிலையில் நிற்பாயாக.

52) ஒன்றுமிலான் இச்சை உருவாக்கி ஐந்தொழிலில்
நின்றநின் மாலியத்தை நீக்கியவன் - என்றும்
பரையால் அனுபவத்தைப் பண்ணு நமபாழாம்
உரையா லிங்க சுத்திபோது

நின்மலன் சிவன் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு பஞ்ச கிருத்தியங் களை பண்ணினன். சிவனுக்கு இந்த பஞ்ச கிருத்தியமே நின்மால்யம் என்று பூசையாக சிவனுடன் ஐக்கியம் பண்ணி நின்மால்யத்தை நீக்கியவன் பரையிடத்தே வைத்து அனுபவத்தை தருவதே நகார மகாரங்களுக்கு கேடாவது லிங்க சுத்தியே.

53) அங்கு அஞ்செழுத்தாறு மானைஞ்ச முதஞ்சு
தங்குமழிவா மஞ்சனஞ் செய்து - மங்கியிடும்
தன்வாதனை மாற வொற்றுடை சாத்தியுவ்வா
மென் மாசிலாசனத்தில் ஏற்று

சுத்த பஞ்சாக்ஷரத்தால் பஞ்சகவ்வியம் பஞ்சாமிர்தம் இவைகளை யும் தன்னழிவே திருமஞ்சனமாகவும் செய்து பிரபஞ்ச வாதனை தனக்குக் கெட திருஒற்றுடை சாத்தி உகாரமாகிய ஆன்மாவிலே

54) ஆதார சத்திமுதல் நாதர்ந்தம் அஞ்செழுத்தின்
மீதான வாசனத்தை வெவ்வேறு - சோதனையில்
தன்னுணர்வார் கண்டேயும் தானுர்ந்த ஞானத்தை
உன்னுமதே தாம யோது

ஆதார சக்தி முதலாக நாதமிறுதியாக கீழ்படுத்தின ஆன்ம வாசனமாகிய பஞ்சாக்ஷரத்தின் அனுசந்தானத்துடனே நிற்கின்றதான இவைகள் யாவையுங் கண்டு சேடமென்று நீக்கி தன்னிடத்தில் உதய மாகிய ஞானத்தை சிவமூர்த்தியாக கர்ப்பிப்பன்.

55) முன்னெழுத்தாம் ஆனந்த மூலத்தை யாவாகித்து
துன்னுநிலைதானைக்கம் ஒன்றுபடல் — என்னவருந்
தாபனமே ஆதிசெய்து தானந்த மாகிமல
ராபரணமாதி களாயாக்கு

முன்னெழுத்தாகிய சிகரத்தை (ஆனந்த மூலத்தை) எவ்விடமும் பூரணமாக இரண்டறக் காண்பதே, ஆவாகனமாகத் தியானித்து அவனுடன் கூடிய இரண்டற்ற ஐக்யத்தை தாபனம், சன்னிரோதனமும் ஆக செய்து தன்னையே சுகந்தம், புஷ்பம், வத்திரம், ஆபரணம் முதலானதாகவும் தூப தீபாதிகளாகவும் பஞ்சாக்கரத்தால் கொடுப்பன்.

56) தன்னறிவே நைவேத்யம் தன்னறிவே பானீயம்
தன்னறிவே தாம்பூலம் தானக — முன்னருளே
வாய்த்த முகவாச மணிசிவமாய் தூபாதி
தீர்த்த நம என்றுணர்வார் செய்

ஆன்ம நிவேதன்மே நைவேத்யம், பாணீயம், தாம்பூலம் ஆக நிவேதித்து அருளாகிய முகவாச உண்டையால் திருவாய் மாற்றி சிகாரம் மணியாக்கி, வகாரமும் யகாரமும் தூபாதியாகவும், நகார மகாரமான தீர்த்தத்தையும் சேர்ப்பாய்.

58) பாத்திய நீதானாய் பரை ஆசனமாய்
மூர்த்திசிவம் அர்க்கியமாய் முன்னைநம — நீத்திறைஞ்சி
பெண்ணிஉரு அஞ்செழுத்தும் எண்ணிஇறைக் கீய்ந்துவலம்
பண்ணருளில் வீழ்ந்துபணி

ஆன்மபாவம் கெடத் திருவடியிலே அயிக்கியம் பண்ணுதல் பாத்தியமாகவும், பராசத்தி நிலையே ஆசனமாசவும், சுகசோருபமே அர்க்கியமாகவும் கொடுத்து, நகாரம், மகாரம் கெட நமஸ்காரம் செய்து, நூறு நூறுயிரம் உருவாகவே பஞ்சாக்ஷரத்தை செபித்து, செபத்தையும் தன்னையும் சிவனுக்கு கொடுத்துப் பிரதக்ஷணம் பண்ணி நமஸ்கரிப்பாய்.

60) அஞ்செழுத்தால் அட்டமலரிட் டிறைஞ்சிப் பூரணமாம்
அஞ்செழுத்தால் மூர்த்திசெய்தே ஆதரித்து — நெஞ்சுருகி
ஞானகுருதாள் இணையிருன் மலரிட்டு அர்ச்சித்தல்
ஞானநெறி அர்ச்சனையாகும்

பஞ்சாக்கரத்தால் அஷ்டபுஷ்பம் சாத்தி நமஸ்கரித்து சுத்த பஞ்சாக்கரத்தாலே சிவனை மூர்த்தி பண்ணி பக்தியினல் உள்ளமுருகி ஞானசிரியனை நமஸ்கரித்து அர்ச்சிப்பது ஞான பூஜையாம்.

வழிபாடு: அப்பர்பெருமான் தேவாரம் - 4ம் திருமுறை - பாட்டு 926

தீத்தொழிலான் தலைதீயிலிட்டுச் செய்த வேள்விசெந்நீர்
பேய்த்தொழி லாட்டியைப் பெற்றுடையீர் பிடித்துத்திரியும்
வேய்த்தொழிலாளர் மிழலையுள்ளீர் விக்கி அஞ்செழுத்தும்
ஒத்தொழிந்தும்மை மறக்கினும் என்னை குறிக்கொள்மினே

தீத்தொழில் — தீயோம்பும் வேள்வி - அக்நி காரியம்
தீத்தொழிலான் — வேள்வி செய்த தக்கனை குறிக்கும்
தீயில் இட்டு செய்த வேள்வி செற்றீர் — அவன் செய்தவேள்வியில்
அவன் தலையை அவியுணவாக இட்டு அதனை அழித்தவரே
பேய்த் தொழிலாட்டியைப் பெற்றுடையீர் — பேய்த் தொழிலை
ஆள்பவளைப் பெற்றவரே
வேய்த் தொழிலாளர் — அந்தணர்
பிடித்து திரியும் வேய் — திரிதண்டு - அது மூங்கிற் கொம்பு
விக்கி — தொண்டை விக்கி
அஞ்செழுத்தும் ஒத்து — திருவைந்தெழுத்து ஓதுதல்
அது சிவனை மறவாமைக்கு உபாயமாவது

அப்பர் பெருமான் — 4ம் திருமுறை - பாட்டு 995

தூமென்மலர்க் கணைகோத்துத் தீவேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபட காய்ந்தகடனைகக் காரோணநின்
நின்நாமம் பரவிநமச் சிவாயஎனும் அஞ்செழுத்தும்
சாமன்றுறைக்கத் தகுதிகண்டாய் யெங்கள் சங்கரனே

தூய மெல்லிய பூங்கணையைக் கோத்து எரியோங்கும் தொழிலை யுடைய மன்மதனை சுட்ட கடல் நாகைக்காரோண உன் திருநாமத்தை வாழ்த்தித் திருவைந்தெழுத்தாகிய ந ம ச் சி வ ா ய என்னும் திரு மந்திரத்தை யான் உடலின் நீங்கும் அந்நாளில் வரைக்கும் ஆற்றலை தந்தருள்வாய் எங்கள் சங்கரனே.

**உபாசனுக்ரமம் :**

ஸ்ரீ பஞ்சாக்ஷர விளக்கம் - பிரஹ்மாரிஷ்ட பண்டித
ஸ்ரீலஸ்ரீ பிரம்மானந்த ஸ்வாமிகளால் இயற்றப்பட்டது

ஐந்தெழுத்து அதன்கணன்கே யமைந்திடு மனைத்துமென்று
மந்திரமறையி னேடம்மறை வழிப்புராணம் சைவ
தந்திரமாதி நூல்கள் சாற்றிடு மாதலாலே
ஐந்தெழுத்துண்மை கண்டோர் அனைத்துமே கண்டோராவர்

பஞ்சாக்ஷரத்தில் யாவுமுளதாகப் பஞ்ச ப்ரம்மோபனிஷதம், பஸ்ம ஜால பாலம், சூக்ஷ்மாகமம் முதலியன கூறும்.

அதன் விவரம் காட்டும் அட்டவணை வருமாறு :

## பஞ்சாக்ஷரத்தின் கண்ணே யாவுமுளதென விபரங் காட்டும் அட்டவணை :

| பஞ்சாக்ஷர எழுத்து | 1 அங்கம் | 2 கிருத்தியம் | 3 சாதாக்கியம் | 4 தேவதை | 5 சந்தசு | 6 சக்தி | 7 முகம் |
|---|---|---|---|---|---|---|---|
| ந | அங்கியேந்திய கரம் | சங்காரம் | கர்ம சாதாக்கியம் | மகேஸ் வரன் | ருக் | கிரியா சக்தி | சத்யோ ஜாதம் |
| ம | ஊன்றிய பாதம் | திரோபவம் | கர்த்திரு சாதாக்கியம் | சிவன் | யஜுர் | ஞான சக்தி | வாமம் |
| சி | துடியேந்திய கரம் | சிருஷ்டி | மூர்த்தி சாதாக்யம் | வித்தை | சாமம் | இச்சா சக்தி | அகோரம் |
| வா | தூக்கிய பாதத் தோடு வீசியகரம் | அனுக்ரகம் | அமூர்த்தி சாதாக்யம் | ஆத்மா | அதர்வணம் | ஆதி சக்தி | தத்புருஷம் |
| ய | அமைந்த கரம் | ஸ்திதி | சிவசாதாக்யம் | பரமசிவம் | சர்வவேதம் | பராசக்தி | ஈசானம் |

| 8 பொருள் | 9 தத்துவம் | 10 விஷயம் | 11 நிறம் | 12 கலை | 13 மூர்த்தி | 14 மூர்த்த சக்தி |
|---|---|---|---|---|---|---|
| மலம் | பிருத்வி | கந்தம் | மஞ்சள் | நிவிருத்தி | பிரம்மா | சரஸ்வதி |
| திரோதாயி | அப்பு | இரசம் | வெண்மை | பிரதிஷ்டை | விஷ்ணு | லக்ஷ்மி |
| சிவம் | தேயு | உருவம் | சிகப்பு | வித்தை | ருத்ரன் | ருத்ரகாளி |
| அருள் | வாயு | பரிசம் | புகை | சாந்தி | மகேஸ்வரன் | மகேஸ்வரி |
| ஆன்மா | ஆகாயம் | சத்தம் | நீலம் | சாந்தியதீதை | சதாசிவன் | மனோன்மணி |

## தணிகை புராணம் :

### குமரேச படலம் — ஐந்தெழுத்தர்ச்சனை

குருமணியி னொளிப்பிழம்பு கொழுந்தோடிப் பல்கணியாய்
மருவுகதவெனத் தோற்றுமணி வாயிலிரு புடையும்
பொருவில் பரமபரம் எனப்புகன் ஞானமிரண்டினையும்
அருணிலையும் திருவெழுத்தின ருச்சனைசெய் தமைந்திட்டான்

நிறத்தோடு கூடிய அரதனங்களின் ஒளி பிழம்பானது கொழுந்து விட்டோடிப் பல கண்கள் உடையதாகி பொருந்துகின்ற கதவு என்று சொல்லும்படி தோற்றுகின்ற அழகிய வாயிலின் இருபக்கங்களினும் ஒப்பில்லாத பரஞானம், அபரஞானம் என்று சொல்லுகின்ற ஞான மிரண்டினையும் அருள் நிலைத்தற்கேதுவாகிய திருவஞ்செழுத்தால் அர்ச்சனை செய்து துவார பாலகனை அமைத்தான். பரஞானம், அபர ஞானம் இரண்டினையும் துவார பாலகராக அஞ்செழுத்தால் அமைத்தான் என்க.

### உச்சரிக்கும் முறை :

பூதமுதற் கரணமெலாம் புறமாகவே கம்புறமற்
ருதரவினிடை மூழ்கியமைந்த பொருளவை யனைத்தும்
வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொரு ளிறைவாக்கித்
தீதனுக்கும் அஞ்செழுத்தும் செயிர்விரவா முறைமாறி

பிருதிவி தத்துவ முதலிய கரணங்களெல்லாம் புறத்ததாக அகப் பற்றும் புறப்பற்றும் நீங்க. அன்பினிடத்தே மூழ்கிப் படைத்த பொருளெல்லாவற்றையுக் வேதங்களின் முடிவையும் கடந்து விளங்கு கின்ற சிறந்த பொருளிற்றுனும் நிறைந்திருப்பதாக பாவித்து பிறவித் துன்பத்தீதை போக்கும் திருவஞ்செழுத்தினையும் குற்றங்கலவாத முறைப்படி மாறியுச்சரித்து.

பூதமுதல் கரணங்களெலாம் புறமாக...மூழ்கி — பூத சுத்தி சொல்லப்படுகிறது

அமைந்த பொருளவையனைத்தும் நிறைவாக்கி — திருவிய சுத்தியை குறிக்கிறது

வேதமுடி கடந்தொளிரும் விழுப்பொருளிறைவாக்கி — இலிங்க சுத்தியைக் குறிக்கிறது

### அர்ச்சித்தல் :

பாதமுக முடிக்குதவு பாத்தியமாதி கனெல்லாம்
பேதமுறு மருள்கடந்த பேரெழுத்தினி னிதமைந்தங்
காதன மூர்த்தியும் மூலமும்அந்த திருவெழுத்தால்
ஏதமறஉயி ரெல்லாமினர் மலர்கொண் டர்ச்சித்தான்

திருவடி, திருமுகம், திருமுடியாகிய மூன்றுக்கும் முறையே கொடுக்கின்ற பாத்தியம், ஆசமனம், அருக்கிய முதலியவைகளை எல்லாம் அபேதமாகிய அருளையும் கடந்த பெரிய மூலதனத்தினுல் அமைத்து அவ்விடத்து ஆசனம், மூர்த்தி, மூலாமென்னும் மூன்றினையும் அத்திருவெழுத்தினுலே அமைத்து ஆன்மாக்கள் எல்லாம் ஆணவமாகிய குற்றத்தினின்றும் நீங்க கொத்துக்களோடு கூடிய மலர்களால் அர்ச்சித்தல்.

பேரெழுத்து — சி - முத்தி பஞ்சாக்ஷரம்

## நந்தி உபதேசப்படலம் (தணிகை புராணம்)

### ஜபிக்கும் முறை :

ஒன்றுகேவலத் தினையைத் துறைழந்து சகலத்தொன்று
மூன்றவில் சகலத்தைந்து முதிரொளி சுத்தந்தன்னில்
என்றரு ளெழுத்தின் பேதமிசைந்துறு முறைபும்காட்டி
நன்றெனக் கருளியாண்ட நலத்தகு பெருமைபோற்றி

தன்னுண்மை எனப்படும் பொருந்துகின்ற கேவல நிலையிலே வருந்தற்கு காரணமாகிய ஐந்தெழுத்தெனவும், சகல நிலையிலே திரோதனம் மன்னுமிரண்டு மாறிப் பின்னிடத்தமைந்த ஐந்தெழுத்தெனவும், சிவஞான முதிர்தின்ற சுத்த நிலையிலே கேவலத்தின்கண் முன்னின்ற திரோதம், மலம் இரண்டும் நீங்கிச் சகல நிலைக்கு கூறிய ஐந்தெழுத்தெனவும், இங்ஙனம் அருள் விளங்கும் குறிவடிவாகிய ஐந்தெழுத்தின் வேறுபாட்டினையும் அவற்றை அவ்வவந்நிலைகளில் நிற்கும் நிலைமை யினுக்கேற்ப மாறி மாறி ஒலிக்கும் முறைமையினும் உணர்த்தி நன்முக எளியேனுக்கு அருளிச் செய்து அடிமைக் கொண்ட நன்மை பொருந்திய பெருந்தன்மை வணங்கப்படுகிறது.

## தணிகை புராணம் - அகத்தியன் அருள்பெறு படலம்

ஓதுதல் :

ஐந்துசுத்தி அமைந்தருள்
ஐந்தொழிற்படும் அர்ச்சனை
ஐந்தடக்கி அமைந்தபின்
ஐந்தனுந்துகி அமர்த்தினுன்

பூதசுத்தி முதலிய ஐவகை சுத்திகளையும் செய்துகொண்டு வழங்கும் ஐவகை உபசாரத் தொழிலும் நிகழ்த்திற்கிடமான வழிபாட்டினை மனம் பொறிகளாற்பால் செல்லாமல் தடுத்து இறைவன் திருவடியிலேயே அதனை நிறுத்திச் செய்த பின்னர் திருவைந்தெழுத்தாலாகிய வாழ்த்தினை ஓதினன்.



அத்தியாயம் - 11

# பஞ்சாக்ஷரத்தில் யோகம், வேள்வி - அதன் பயன்

## ஐந்தெழுத்து வேள்வியும் - பயனும்

சிவஞான சித்தியார் செய்யுள் - 299

அஞ்செழுத்தால் ஆன்மாவை அரன் உடையபரிசும்
அரன்உருவும் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு
அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி
ஆன்மாவில் அஞ்செழுத்தால் இதயத்து அர்ச்சித்து
அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதிஅருக்கன்
அனை அரவம்போல் தோன்றும் ஆன்மாவில்அரனே

அரன் உருவம் அஞ்செழுத்தால் அமைந்தமையும் அறிந்திட்டு சிவனுடைய திருமேனி (வடிவம்) திருவெழுத்தஞ்சால் அமைந்திருக்கும் தன்மையும் அறிந்து அஞ்செழுத்தால் ஆன்மாவை அரனுடைய பரிசும், திருவஞ்செழுத்தாலே ஆன்மாவை சிவன் அடிமையாக உடைய தன்மையையும், இந்த செய்யுள் சிவோகம்பாவனை உறைந்து நிற்குமாறு சாதிக்க வேண்டிய திருவைந்தெழுத்து தியானமாகிய பாவனை நிஷ்டையை கூறுகிறது. இதில் நித்திய கர்மானுஷ்டான விதிகளையும் அதன் கிரியைகளையும் விளக்கப்படுகிறது.

இதயம், உந்தி, புருவநடு என்ற மூன்றனையும் முறையே மண்டபம், குண்டம், தம்பம் ஆகிய ஸ்தானங்களாக கற்பித்து அவ்விடத்தில் நீரால் அர்ச்சித்து அனலோம்பி பிராண வாயுக்களை தம்பித்து பசு போதத்தை தவிர்த்து தியானிப்பதாகிறது. எனவே அது திருவைந்தெழுத்து கணிப்பு அல்லது வேள்வி என உய்த்துணர வைத்தது.

| சிவன் | அருள் | உயிர் | திரோதம் | மலம் |
|---|---|---|---|---|
| சி | வ | ய | ந | ம |

என்ற முறையாலே அமைந்துள்ள சூக்கும பஞ்சாக்ஷரத்தை வந்து உச்சரிக்கை மகாரமாகிய மலத்தினாலே ஏற்பட்ட நகாரமாகிய உயிர் வகாரமாகிய அருளால் சிகாரமாகிய சிவத்தோடு ஐக்கியமாகும்.

அதனை அறிந்து திருமூல மந்திரத்தையே உச்சரிக்க வேண்டும். அதுவும் குருவினிடம் உபதேசம் கிரமமாகப் பெற்றே உச்சரிக்க வேண்டும். எனம்வதான் விதிப்படி உச்சரிக்க என்று அருளப்பட்டது.

— உண்மை விளக்கம் 42 — 45லும் காண்க

அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி, அங்கசர நியாசம் இரண்டும் சேர்ந்து சகளீகரணம் எனப்படும். விவரங்கள் சந்தியா வந்தனம் அனுஷ்டானத்தில் காண்க.

அதில் சம்பந்தப்பட்ட அனைத்து கிரியைகளால் மாயா சம்பந்தமான தூல சரீரம் ஒழிந்ததாக பாவித்து மேல் சிவ சொரூபம் உண்டாவதாகச் செய்யும் கிரியையாம். சகளீகரணம் பஞ்சப்ரம்ம சடாங்க மந்திரங்களாலே பாவித்து செய்வதாக இருந்தும், அஞ்செழுத்தால் அங்ககர நியாசம் பண்ணி என்றது. மேற்சொன்ன ஈச்ஞதி ஆகிய மந்திரங்களும் சேர்ந்து ஒடுக்கம் விரிவு முறையலமைந்து அதிதூலத் திருவஞ்செழுத்தாம் என்று கொள்ளல் வேண்டும். திருவஞ்செழுத்தின் எழுத்துக்களை பீஜமாகக் கொண்டு ஒவ்வொன்றினோடும் கூடி உச்சரிப்பதனுலும் காண்க. ஆன்மாவில் அஞ்செழுத்தால் இதயத்தர்ச்சித்தும் மந்திரோபாவனை கிரியைகளால் மலசுத்தி எய்தியதாகப் பாவித்து ஆன்மாவிலே திருவஞ்செழுத்தினுல் இருதய கமலத்து சிவனை உருவக மூர்த்தியாகவும், உருவாருவ மூர்த்தியாகவும் ஆவாஹத்து பூசித்து, என்பது.

அப்பர் பெருமாள் அருளிச் செய்த 'உயிராவணமிருந்துற்று' என்னும் தேவாரத்தில் காண்க இது வேள்வியில் பூசையைப் பற்றி கூறுகிறது.

## அஞ்செழுத்தால் குண்டலியின் அனலோம்பி:

உந்தி ஸ்தானத்தில் உள்ள திருவருள் சக்தியை பிராணாயாமத்து இரேசகம், பூரகம் இவைகளால் உண்டாகும் அனலினுல் பிர்காசிக்க செய்து மேலே செல்ல எழுப்பி என்றது திருவைந்தெழுத்தையே. இரேசகம், பூரகம் மூலமாக ஜபிக்க. இரேசகம், பூரகம் மூலமாக ஜபித்து சொன்னவாறு, அனலை மேலே செல்ல எழுப்புதல். இது வேள்வியில் அனலோம்புதல்.

அனைவரிய கோதண்டம் அமைந்து :

கருவி கரணங்கள் தொழில் அற்றுலன்றி அடைதற்கரிய புருவ நடுவிலே திருவருட்சக்தியை நிறுத்த வேண்டும். இது பிராணுயாமத்தில் கும்பகம் செய்யும் போது சுழுமுனை வழியே திருவருட் சக்தியை விந்து ஸ்தானமாகிய புருவ நடுவினுக்கு இழுத்து நிறுத்தி என்று அருளுகிறது. இது வேள்வியில் பசுத்தடித்தல் கூறியது.

அருளின் வழி நின்று ;

பிராணயாமத்தால் புருவ நடுவில் நிறுத்திய திருவருட் சக்திவழியே நின்று ஐந்தெழுத்தால் சிவசக்தியை தியானித்து, அதன் வசமாய் நிற்பது. இது வேள்வியில் அவியுண்டல்.

அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க :

திருவைந்தெழுத்தை முறைப்படி ஜபம் செய்ய என்பது. விதிப்படி என்பது குருவினுல் பக்குவப்படி உபதேசித்தபடி உச்சரிக்க. ஆதிமலம் இரண்டும் ஆதியா ஓதினுல் சேதியா மும்மலம் தேர்வாகா என்னும் மேற்கூறிய உண்மை விளக்கத்தில் கூறியவாறு மல நீக்கத்துக்கு வேண்டும் சூக்குமமான முறைப்படி என்பது. முறைப்படி என்பது உரை, மந்தம், மாநதம் என்ற முறைகாளலன்றி சுத்த மானதமாம். அதாவது அறிவாற் கணித்து என்பது.

விதிப்படி என்பது நகாராதியான தூலமும், சிகாராதியான சூக்குமமும், நகாரம், மகாரம் ஒழிந்தும், யகார நடுவாய் ஏனைய சிவன், அருள் இரண்டும் இருமருங்கும் இருதலை மாணிக்கம் போல் இருப்பதும், அருள் இருமருங்கும் உறச் சிவம் நடுவே நின்ற சிவமே தனித்து நின்ற நாயோட்டும் மந்திரம் (சிகாரம் மட்டும்) என்பதை குருமூலம் தெரிந்து கொள்ள வேண்டும். அப்படி செய்தால் மதியருக்கண் அணையவரும் போல் தோன்றும் ஆன்மாவில் அரனே.

சாயை மாத்திரையாக நின்று கிரகண காலத்தில் சந்திர சூரியரை அணைந்து காண நிற்கும் ராகு, கேதுக்களைப் போல் இறைவனும் ஆன்மாவின்கண் விளங்கி தோன்றுவான். சூரிய சந்திர கலைகளாகிய இடை பிங்கலை மறைத்து சுழுமுனையிடமாக வெளிப்பட்டு பாம்புருவமாய குண்டலினி வயிற்றேட்டம் பரசிவ பேரொளியெனலும் சொல்வது உண்டு.

இதனுலே திருவைந்தெழுத்து வேள்வியாக முறையாலும், யோக முறையாலும் விளக்கியது. அத்தகைய வேள்வியால் சிவம் பிரகாசிக்க ஞானம் நிகழுமாறு குறித்ததும் காண்க. இதயம், குண்டலி, கோதண்டம், மதியருக்கண் அணை அரவம் என்பனவற்றை ஊன்றி யோசிக்க அறியவரும் அனுபவ உணர்ச்சி சாதனையால் சாதித்து அறிக.

## சிவஞான போதம் 9ம் சூத்திரம் - உதாரணம்

அஞ்செழுத்தா லுள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தா லர்ச்சித்து இதயத்தில் அஞ்செழுத்தால்
குண்டலினியில் செய்துஓமம் கோதண்டம் சாதிக்கி
லண்டனுஞ் சேடனமங்கு

என்று அஞ்செழுத்து வேள்வியைப் பற்றி கூறுகிறது.

குருநாதர் அருளிச் செய்த பிராணயாமம் முறை :-

ஆசனத்தில் அமர்ந்து வலது மூக்குத் துவாரத்தை வலது கட்டை விரலால் மூடி, இடது மூக்கு துவாரத்தின் வழியாக காற்றை உள்ளுக்கு 'சிவ சிவா' என்று எட்டு முறை சொல்லும் வரை உள்ளுக்கு இழுத்து இடது மூக்கு துவாரத்தை வலது கையின் ஒற்றை விரலார் மூடி 'சிவா சிவ' என்று முப்பத்தி இரண்டு எண்ணும் வரை மூச்சை நிறுத்தி பின் வலது மூக்கின் வழியாக பதினாறு முறை சிவா சிவா என்று சொல்லி பதினாறு முறை என்னும் வரை காற்றை விடுதல் வேண்டும்.

இதன் கணக்கு என்னவென்றால் சிவா என்பது இரண்டு மாத்திரை. எட்டு முறை சிவ சிவ என்று எண்ணினால் 16 மாத்திரைகள் ஆகிறது. முப்பத்தி இரண்டு முறை எண்ணினால் 64 மாத்திரைகளும், பதினாறு முறை எண்ண 32 மாத்திரைகளாகிறது. சிவ சிவ என்று மனதில் எண்ணி இடது கையின் விரல்களால் எண்ணிக்கையை குறித்தல் வேண்டும் சௌகரியபடி எந்த கையில் வேண்டுமானாலும் செய்யலாம். அப்போது புருவ நடுவில் சிவனை சிந்தித்தல் வேண்டும். இதை யாரும் அனுபவத்தில் கொண்டு வரலாம். விரல்கள் நான்கு பகுதிகளாக உள்ளது. அது அடிவிரல், நடுவில் இரண்டு பாகம் நுனிவிரல் எனக் கொள்ளுதல் வேண்டும்.

ஐந்தெழுத்தே ஆண்டவன் வடிவம் என தெளிந்து வழிபடுதல் வேண்டும். அருவம், அருருவம், உருவம் என்னும் மூவகை பிழம்பினை முழு முதல்வன் நிலை. அருவம் புலன் யும் கடந்த நிலையே விழுமிய களால் அறிய முடியாத நிலை. அருருவம் கட்டிலன் ஆகியும் திணைபால் உணர ஒண்ணாநிலை. உருவம் கட்டிலனால் திணைபால் உணரும் செம்மை வாய்ந்தது. அருருவ நிலையை சிவக்கொழுந்தால் காண்கின்றோம். உருவ நிலையை இன்பக் கூத்தர்தம் எழிலுருவமாய்க் காண்கின்றோம்.

சிவக் கொழுந்து — சிவலிங்கம்
இன்பக் கூத்தர் — ஸ்ரீ நடராஜபெருமான் (ஆனந்த நடனம்)

இன்பக் கூத்தர் எழிலுருவம் திருவைந்தெழுத்தால் அமைந்தது. இந்த அமைவை விளக்கும் திருப்பாட்டுக்கள் ஒன்பது உள்ளன. அவ் வொன்பதும் மெய்கண்ட நூலில் ஆறுவதாக காணப்படும் உண்மை

விளக்கத்தில் திகழ்வன. அந்தப் பாட்டுக்களையும் விளக்கத்தையும் வேறு அத்தியாயங்களில் கண்டோம். மற்றொரு கோணத்தில் இங்கு யோக முறையில் காண்போம்.

அந்த ஒன்பது பாடல்கள் மு

1) நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத்து
அஞ்செழுத்தால் உற்றுருவாய் நின்றுடல்...

நற்றதவத்தோர் — செம்பொருள் துணிவினராம் - சித்தாந்த சைவர்

அஞ்செழுத்து — நமசிவாய - சிவாயநம

2) சிட்டன் சிவாயநம என்னும் திருஎழுத்தஞ்சாலே
அவாயமற நின்றுடுவான் ..

3) ஆடும்படி கேள்நல் அம்பலத்தான் ஐயனே...

இத்திருப்பாட்டு கீழிருந்து மேல் நோக்குதல்; இம்முறையே நறும் புகையும் உறும் ஒளியும் கொண்டு மேல் அவ்வவ்இடங்களை சுட்டிக் காட்டி வழிபடுதல் வேண்டும்.

4) சேர்க்கும் துடிசிகரம்...

துடி — வலத்திருக்கையில் காணும் உடுக்கு

வீசுகரம் — தூக்கிய இடது திருவடியை சுட்டிக் காட்டும் இடது திருக்கை

முயலகனுர் — நன் முயற்சியை தடை செய்து அகற்றுதல்

இத்திருப்பாட்டு மேலிருந்து கீழ் நோக்குதல்.

5) ஓங்காரமே நல்திருவாசி...

திருவாசி ஓங்காரமாய் அமைந்திருப்பதால் அதனை அங்ஙனமே சுட்டி நறும் புகையும் உறு ஒலியும் காட்டுக.

6) தோற்றம் துடியதனில்...

படைத்தல், காத்தல், துடைத்தல் என்னும் முத்தொழில்களையும் மூன்று திருக்கைகளின் அடையாளத் திருக்குறிப்பால் விளக்கியருளினுர். மறைத்தல், அருளுதல் என்ற இரண்டையும் இரண்டு திருவடிகளால் விளக்கியருளுகிருர். எனவே கைசெயலையும், அடி வழியையும் குறிப்பன. முத்தொழில் உடம்பின்கண் நிகழ்வன. மற்ற இரண்டும் உயிரின்கண் நிகழ்வன.

7) மாயைதனை உதறி வல்வினையை சுட்டுமலம்...

மாயை — ஆடையில் பட்டது கண் ஒக்கும்

வினை — ஒட்டுப்பில்லை குறிக்கும்

மலம் — குளிர் பனி வாடைக் காற்றை ஒக்கும்

இம்முறையில் முறையே உதறல், சுடுதல், அமுக்கல் என்ற வினை கொடுத்து விளக்கப்பட்டது

8) மோனந்தமர் முனிவர்...

9) உரையுணர் வுக்கெட்டா ஒருவன்...

இந்த 9 பாட்டுக்கள் வேறு அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது. விளக்கங்கள் அதில் காண்க.

முதல் திருப்பாட்டு — ஆசிரியர் வணக்கம்

இரண்டாம் திருப்பாட்டு — அருள்முறை அருளும் ஆசான் அருள் வாழ்த்து

3ம், 4ம் திருப்பாட்டு — நமசிவாய, சியாயநம எனும் ஆண்டவர் மறையுரு

5ம் திருப்பாட்டு — ஐந்தெழுத்தின் தொகையாகிய ஓம்

6ம் திருப்பாட்டு — ஐந்தொழில்

7ம் திருப்பாட்டு — மும்மலப்பிணி அகற்றல்

8ம் திருப்பாட்டு — ஆவிப் பசையறல்

9ம் திருப்பாட்டு — வீடுபேறு

மறையுரு — மந்திர வடிவம்

ஐந்தெழுத்தே ஆண்டவன் வடிவம் எனப்படுகிறது.

இவ்விதமாக வழிபடலும், யோகப் பயிற்சியும் செய்தல் வேண்டும்.

## ராமுடு சிவாய அய்யப்பகாயி ஸ்வாமிகள் அவர்களிடம் கேட்ட குறிப்புகள்

பஞ்சாக்கரத்தால் தான் சுத்த தேகம் பெறும் வழி உள்ளது.

**சுத்த தேகம்:**

ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்ட சரீரம் ஐந்து பூதங்களையும் அடக்கி ஆள்வது பஞ்சாக்கரம்.

பஞ்சாக்கரம் உடலில் நிலைத்திருக்கும் முறை :

பாதம் (கட்டை விரல்) முதல் நாபி கீழ் வரை - இடுப்பு வரை

நகாரம் — மண் - பிருத்வி

நாபி பிரதேசம் — ம - ஜலம் - அப்பு

இருதயக் கமலம் — சி - நெருப்பு - தேயு

கண்டம் — வா - வாயு

முகம் - காதில் இருந்து மேல் வரை — ய - ஆகாயம்

வினைகள் கெட்டு ஆகாயம் கூர் (சக்தி) வலுவடையும் காலத்தில் சிவகுரு (முருகன்) வெளிப்படுகிறார்.

சுத்த தேகம் — பிரணவ தேகம்

இறைவனால் கொடுக்கப்பட்ட இந்த சரீரம் கீழே விழுந்தால் பிறப்பு உண்டு. கீழே விழாமல் பஞ்ச பூதங்களையும் அனுப்பிவிட்டு ஒளி தேகம் (சுத்த தேகம்) பெற்றால் பிறப்பு இல்லை.

சுத்த தேகம் பெற வழி :

சதா பஞ்சாக்கரத்தை நாவு அசையாமல் புருவ மத்தியில் மனதை வைத்து சிவாயநம என்ற எழுத்தை தியானிக்க வேண்டும். செய்ய செய்ய எல்லா பஞ்ச பூதங்களையும் தத்தம் இருக்க வேண்டிய இடத்திற்கு அனுப்பி விடுதல் ஏற்படும், முதிர்ந்த பஞ்சாக்ஷர தியானத்தினால் சுத்த தேகம் வரும்.

## சிதம்பர ரகசியம்

51 பீஜ அக்கரங்கரங்கள் பஞ்சாக்ஷரத்திற்கு கட்டுப்பட்டது.

பீஜாக்ஷரம் இருக்கும் ஸ்தானம் :

அகாராதி — ஒகாரம் வரையில் - அம் - சம்

| | | |
|---|---|---|
| மூலாதாரம் | — | 4 அக்ஷரம் |
| ஸ்வாதிஷ்டானம் | — | 6 அக்ஷரம் |
| (நாபி) மணிபூரகம் | — | 10 அக்ஷரம் |
| (இருதயம்) அநாகதம் | — | 12 அக்ஷரம் |
| (கண்டம்) விசுத்தி | — | 16 அக்ஷரம் |
| புருவ மத்தி - ஆக்ஞை | — | 2 அக்ஷரம் |
| உச்சியில் | — | 1 அக்ஷரம் |

ஆக 51 அக்ஷரங்கள் ஆகும்.

இதுதான் சிதம்பர ரகசியம். இது மாலைகளாக (51 தங்க இலை) தொங்க விடப்பட்டுள்ளது.

மாலைகள் தத்துவம் — சரீரத்தில் உள்ள ஸ்தூலம்

சூக்ஷ்மம், காரண ஆன 3 சரீரங்களும்

அக்ஷர வடிவானதுதான் சுத்த தேகம்.

சிவய சிவ — சோமஸ்கந்தர் விளக்கம்

திருமூலர் நாபிக்கு கீழ் ஓர் அக்னி — அது கீழ் நோக்காதபடி மேல் நோக்கி செல்ல வைக்கவேன். (உந்தி கமலம்...)

தந்தைக்கு முன் மகன் பிறந்தானே — பிரணவம் - விநாயகர்

மூக்கு துவாரங்களை வைத்துப் பார்த்தால் யகாரம், ஆகாயம்

உடம்பில் — பூரஞ்சிதம்பரம் - கண்டத்துக்கு (நெஞ்சு) கீழ் பாதம் வரை

உத்தர சிதம்பரம் - கண்டம் - கண்டத்துக்கு மேல் - சிரஸ்முடி

மேல முகம் — இதற்கு வழி - கண் - சி - நெருப்பு

உத்தர சிதம்பரத்துக்கு :

கண்டம் - மூலாதாரம் — பிருத்வி ஸ்தானம் (மூக்கு)
நாக்கு — அப்பு (ஜலம்)
கண் — தேயு (அக்னி)
புருவ மத்தி — வாயு
காது — ஆகாயம்
காது - ஆகாயம் - பிரணவ வடிவம்
(காது - பிரணவ வடிவம்)

மூக்கு முனை - ந — நாக்கு - ம - நாக்கின் அடியில் ஒரு கோடு உண்டு - ஜலதத்துவம்

கண் - சி புருவ மத்தி - வா காது - ய

இந்த முறையில் அந்தந்த ஸ்தானங்களில் தியானத்தில் (அந்தந்த சுகங்களை வைத்து) சுத்த தேகம் அடைய வழி.

திருமூலன் வாக்கு மனமான கண்ணும் - வாசி

இதையே ஸ்தூல சூக்ஷ்ம, காரண முதலியவைகளுக்கு ஏற்றவாறு தியானிக்கும் போது இவைகளோடு 'ம்' சேர்த்து சிம், வம், யம், நம்' தியானம் செய்தல் வேண்டும்.

கண் — சிம்
மூக்கு — நம் - பிருத்வி வசமாகும்
நாக்கு — மம் - அப்பு வசமாகும்
புருவமத்தி — வாயு வசமாகும்
வாசி — அபயதிம் ¦ (வாயு) - கேவல கும்பம் உரும்

**பூர்வ சிதம்பரம் :**

கால் பெருவிரல் — கண்டம்
இடுப்பு வரை — ந
உந்தி — ம
இருதயம் — சி
கண்டம் — வா
ஆக்ஞை - புருவநடு — ய
மூலாதாரம் — ஓம்

யகாரம், பூர்வ சிதம்பரம், உத்தர சிதம்பரம் எப்போதும் புருவ நடுவில் வைக்க வேண்டும்.

திருமூலர் வாக்குப்படி இந்த உத்தர சிதம்பரத்தில் சொல்லியபடி தியானித்தால் பொதிகைமலை அதாவது தலையில் நெல்லிக்கனி (கரு நெல்லி) குளுமை உண்டாகும்.

சிரங் குவிர்ந்தால் — சோமம் - மதியமுதம் உண்டாகும்.

நடராஜ பெருமான் - இடது கண் பார்வை மேல் இறக்கி அந்த பாவனையாகவே வலது கண்ணைப் பார்க்க வேண்டும்.

அசைந்திடல் - சீவன் அசையாவிடில் - சிவன்

குருநாதர் வாக்கை இங்கு வைத்து பார்ப்போம்; நாம் தியானத்தில் அமர்ந்து நம் கருவி கரணங்கள், தத்துவங்கள் எல்லாம் அற்று நாம் சிவனுய் விட்டோம் என்று தீவிர தியானம் செய்யும் போது நாம் சிவனுய் விட்டோம் என்ற எண்ணம் வலுத்து அந்த பாவனையில் அழுந்தும் போது நமது மூச்சி (சுவாஸம்) நிற்கும். அந்த பாவனை மாறினல் மூச்சி (சுவாஸம்) மறுபடியும் வரும். எனவே இந்த யோக பயிற்சிகளை செய்து வந்தால் மரணமிலாப் பெருவாழ்வு உண்டாகும்.

திருமந்திரம் - 870

தராதலமூலைக்குத் தற்பரன் மாபரன்
தராதலம் வெப்புநம சிவாயவாந்
தராதலஞ் சொல்லிற்றுன வாசியவாகுந
தராதல யோகந்த யாவாசியாமே

ஆறு ஆதாரங்களுள் மூலாதாரத்துக்கு நிலைக்களத்[தெய்வம் மூத்த பிள்ளையாகும் (விநாயக பெருமான்). வெப்புதன்மையுடைய தீ மண்லத்துக்கு ஆதிதெய்வம் நகாரமாகிய சலமகளாகும். சலமகள் - மறைப் பாற்றல்; அம்முறை ந ம சி வா ய என்னும் ஐந்தெழுத்தும் கூத்தப் பெருமான் வடிவமாகும். !இதை மேலே சொன்ன சேர்க்கும் துடிசிகரம் என்ற உண்மை விளக்கப் பாட்டை வைத்து காண்க அதன்படி நம சிவாய என அமைந்ததால் ஏறத்தாழ கீழ் நோக்கிய முக்கோணமாகும். முக்கோணம் தீயின் அடையாளம். அந்நிலைக்குரிய மந்திரம் நமசிவாய. இம்முறையாக கணிப்பார்க்கு எளிதாக உயிர்ப்படங்கும். இது சிறந்த பயிற்சியாகும்.

தராதலம் - உலகம் வாசி - உயிர்ப்பு வாசி - சிறந்த பயிற்சி

மற்ருெரு விளக்கம்: (தருமையாதீன வெளியீடு - திருமந்திரம் அருணை வடிவேல் முதலியார் உரையாசிரியர்)

ஆதாரங்கள் எல்லாவற்றிற்கும் அடியாகிய மூலாதாரத்திற்கு உரிய தெய்வ மந்திரம் நகாரம் முதலாக முழுமையாய் மாருது நிற்கும் திருவைந்தெழுத்தாம். அதற்கு மேல் உள்ள அக்கினி மண்டலத்தில் அம்மந்திரம் அருள் எழுத்து மாறி இடை நிற்க ஏனைய எழுத்துக்கள் முன் நின்றவாறே நிற்க இருக்கும். அதற்கு மேல் உள்ள சூரிய மண்டலத்தில் பாச எழுத்துக்கள் நீங்க ஏனைய எழுத்துக்கள் மூன்றும் முன் நின்றவாறே நிற்க இருக்கும். அதற்கு மேல் யோகத்தால் அடையப் படும் சந்திர மண்டலத்தில் பசு எழுத்து நீங்க அருளேயான ஏனைய இரண்டெழுத்தும் அவ்வாறே நிற்க இருக்கும்.

இதனையறிந்து சிவயோகி தனது சிவயோகத்தைச் செய்க;

| | | |
|---|---|---|
| மூலாதார மண்டலத்தில் | — | நமசிவாய - என்றும் |
| அதற்குமேல் அக்கினி மண்டலத்தில் | — | நமவாசிய - என்றும் |
| அதற்கு மேல் சூரிய மண்டலத்தில் | — | வாசிய - என்றும் |
| அதற்கு மேல் சந்திர மண்டலத்தில் | — | வாசி - என்றும் நிற்கும். |

இச்சிவயோக நெறியால் பாசமும் அதன் வாதனையாக நிற்கும் பசுத்துவமும் நீங்கச் சிவமாம் தன்மையைப் பெறுவன் சிவயோகி. இவ்வாறு திருவைந்தெழுத்தால் யோகம் செய்ய கடவன் என்று உணர்த்துகிறது.

மூலாதாரத்தை 'மூலே' என மறை பொருளாக கூறுவது சித்தர் முறை. திருஉந்தியார் 'மூலேயிருந்தாரை முற்றத்தே விட்டவர்' என்ற வெண்பாவில் காண்க.

நம் உடலில் ஆறு ஆதாரங்கள் சொல்லப்படுகிறது - அவை

| | | | |
|---|---|---|---|
| 1) | மூலாதாரம் | — | குறிக்கும் குதத்திற்கும் இடை |
| 2) | சுவாதிஷ்டானம் | — | மூலாதாரத்திற்கு மேல் நாபிக்கு கீழ் |
| 3) | மணிபூரகம் | — | நாபிக் கமலம் |
| 4) | அநாகதம் | — | இருதய ஸ்தானம் |
| 5) | விசுத்தி | — | கழுத்து - கண்டம் |
| 6) | ஆக்ஞை | — | புருவ நடு |

மூலாதாரத்தில் இருப்பது மூலாக்கினி. அந்த அக்னியே உடம்பில் உயிர் இருக்கும் அளவும் உடம்பில் சூடு தந்து கொண்டிருப்பது. அது மூலப் பிராணனுல் நிகழ்வது. இந்த மூல அக்னியை மேலே ஏற்றியே புருவ நடுத்தானத்தை அடைவித்து அப்பால் உள்ள மதி மண்டலத்தை (சந்திர மண்டலத்தை) இளகச் செய்ய வேண்டும். அப்படி எழும்போது அதனை சுழுமுனை நாடி மூலம் பாய்ச்ச வேண்டும்.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் எனும் மூன்று ஸ்தானங்களும் அக்கினி மண்டலத்தானம் ஆகும். இது மூலாதாரம் முதல் நாபி வரை ஆகும். நாபி முதல் கண்டம் வரை உள்ள இடம் சூரிய மண்டலம். இதில் அநாகம், விசுத்தி ஆகிய இரண்டு ஸ்தானங்கள் உள்ளன. கண்டம் முதல் புருவநடு பிரம்மரந்திரம் வரை சந்திர மண்டலம் ஆகும். இதை மதிமண்டலம் என்றும் சொல்லுவார்கள். இதில் ஆக்ஞை, பிரம்மரந்திரம் ஸ்தானங்கள் வரும். பிரம்மரந்திரம் என்பது ஆயிரம் இதழ் கொண்ட தாமரை மலர்போல் உடையது; தலை உச்சி இதன் ஸ்தானம்.

இதுவரை ஆதாரங்கள் மேற்சொன்னவாறு பஞ்சாக்ஷரத்தை அந்தந்த ஸ்தானங்களில் வைத்து செபித்து மூலாதாரத்தில் இருந்து குண்டலினி சக்தியை எழுப்பி மேற்சொன்ன மண்டலங்களை கடந்து மதி மண்டலம் அடைதல் வேண்டும். திருமூலர் இதை மேலும் ஒரு திருமந்திரம் மூலம் விளக்குகிறார். இவைகளை திருவாவடுதுறை ஆதீனம் 1965ல் திருமந்திர மாநாட்டில் வெளியிட்ட திருமந்திர கட்டுரையில் அட்டமா சித்தியில் காண்க.

> "மொட்டுஆம் நடுநாடி மூலத்து அனல்
> பானு (அனல்) விட்டால் மதிஉண்ணவும் வரும்."

நடுநாடி என்பது சுழுமுனை நாடி; அதன் முனை மொட்டு போல் உள்ளது; அதன் முடிவிடம் ஆக்ஞைத்தானம். அந்த நாடி மேற்படி வீதம் செபம் பிராணயாமத்தினாலும் மூலாக்கினியின் கிளர்த்தியாலும் திறப்புறும். அதன் வழியேதான் குண்டலினி சக்தி பாய்ந்து மேலேறும்.

இது மேற்கூறியவாறு ஆக்ஞாசக்கரம் அளவும் சென்று அதனை பேதிக்க உதவுகிறது. அப்படி பேதிக்க பிறகுதான் ஆத்ம சக்தியானது பிரம்மப் புழையுள் புகுந்து அப்பால் பரவெளி எனப்படும், அவ்வெளியில் இருப்பதே ஆயிரம் இதழ் கமலம். இந்த கமலம் சூரியனுக்கு மலராது; சந்திரனுக்கு மலரும். இந்த மதி மண்டலத்தில் இருப்பதே தாமரை மலர். இம்மலர் விரிந்து பெருக்குவதே அமுததாரை. இந்த அமுதம் என்பது பரை (சக்தி) தரும் பால் ஆகும். இதனால் ஞானம், பதிஞானம் வாய்ப்புறுகிறது.

இந்த அகத்து நிகழ்ச்சியே திருஞானசம்பந்தருக்கு வெளிப்படையாக நிகழ்ந்தது. இந்த ஞானப் பாலே நாடிகளில் நிரப்பப்படும். இந்த அமுதத்தை பருகுவதே சிவக்காட்சிக்கு அடிப்படை. இதுவே சிவயோகத்துக்கும் சிவபோகத்துக்கும் அடிப்படை. இதுவே சிவயோகத்துக்கும், சிவபோகத்துக்கும் உரிய நெறி. இது செந்நெறி அல்லது திருநெறி எனப்படும். இது ஆதார யோகம் என்றும் சொல்லப்படும்.

பானு - சூரியன் மதி - சந்திரன்

'கிரணங்கள் ஏழும்' என்னும் திருமந்திரத்தின் மற்றொரு கருத்து; தீப்பற்ற அதனால் உடலை விட்டு உயிர் நீங்கும் போதும், இயற்கையில் இறப்பு வந்து உயிர் நீங்கும் போதும் உயிருக்கு பாதுகாப்பாக உள்ள திருவருளை எய்துவிப்பது திருவைந்தெழுத்து.

"வஞ்சகமற்றதடி வாழ்த்த வந்தகூற்
றஞ்ச உதைத்தன அஞ்செழுத்துமே"

என்ற ஆளுடையபிள்ளையார் வாக்கையும் வைத்து காண்க. உயிர்ப்பை அடங்கி நிற்கும் வளிநிலைக்கண் ஓதத் தருவது திருவைந்தெழுத்தே என திருமூலர் அருளுகிறார்.

திருமந்திரம் : ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மத்திரம் ஆரும் அறிகிலர்
சேயுறு கண்ணி எழுத் தஞ்சையும்
வாயுற் வோதி வழுத்தலு மாமே

வலது, இடது நாடிகளில் உயிர்ப்பு பயின்று எழும்போது அவற்றை அடக்கியும், விடுத்தும் அணுகிப் பொருந்தும் அசபை மறையை எல்லோரும் அறியார், சிலரே அறிவா. செவ்வரி பொருந்திய கண்களை யுடைய உமையம்மை பேணியதாக உள்ள திருவைந்தெழுத்தைந்தையும் உயிர்ப்பை ஒடுக்கி மனத்தை ஒடுக்கும்போது வாய்க்கும்படி ஓதிச் சிவபிரானை வழுத்தலும் பொருத்தமே ஆகும்.

ஞாயிறு — வலது பக்கம் நிகழும் உயிர்ப்பு (சூரியன்)
திங்கள் — இடது பக்கம் நிகழும் உயிர்ப்பு (சந்திரன்)

ஹம், சம் என்றும் அசபையில் ஹம் விடுப்பது சம் என்பது உட்கொள்ளுவதுமாக இருக்கும். ஹம் சம் என்று தொடர்ந்து ஓதின் சோஹம் என்று ஆகும். அதுதான் சிவோஹம் என்பது பொரும். சோஹம் பாவனை என்பது.

## வளிநிலை - பிராணாயாமம்

"ஊனில் உயிர்ப்பை ஒடுக்கில் ஒண்சுடர்
ஞான விளக்கினை ஏற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன அஞ்செழுத்துமே"

என்னும் ஆளுடையபிள்ளையார் வாக்கிலும் காண்க. பிரணவம் அசபை நுண் ஐந்தெழுத்து, பருவைந்தெழுத்து என்பவை யாவும் அருள் நாதத் திரிபாய் ஒரே பயன் தருபவை என்றவாறு; திருவைந்தெழுத்தை ஒருக்காலும் பற்றாதவர் பிறப்பு, இறப்பு இவைகளில் பட்டு உழல்வர் என திருமூலர் திருமந்திரம் கூறுகிறது.

திருமந்திரம் :

தெள்ளமுதூர சிவாயநம வென்று
உள்ளமுதூர ஒருக்கால் உரைத்திடும்
வெள்ளமுதூறல் விரும்பி உண்ணுதவர்
துள்ளிய நீர்போல் சுழல்கின்றவாறே

தெள்ளமுதாகிய சிவபிரான்கண் அருளை நாட சிவாயநம என்று உள்ளமுதூற ஒருக்காலேனும் உறையாதவர்கள் வெண்மையான அமுதல் ஊறி நின்றும், அதனை உண்ணுதவரை ஒப்பர். அவர் நீர்த் துளிகள் காற்றில் அலைவது போல் வினையால் அலைப்புண்டு பிறப் பிறப்பில் சுழல்வர். திருவைந்தெழுத்தே திருவருள் நெறியை சுருங்க வைத்து விளக்குகின்றது.

திருமந்திரம் :

குருவழி யாயகுணங் களினின்று
கருவழியாய கணக்கை அறுக்க
வரும்வழி மானமறுக்க வல்லார்கட்கு
அருள்வழி காட்டுவதஞ் செழுத்தாமே

மெய்யுணர்வு தரும் குரு கூறும் நெறியில் நடப்பவர்களாய் கருவழி பிறப்பு நீங்கவும் விரும்புவர்களுக்கு திருவருள் நெறியை இனிது உணர்த்துவது அஞ்செழுத்தே ஆகும். திருவைந்தெழுத்து வினைத்துயர் நீக்கி சிவ உருவை தரும்.

திருமந்திரம் :

வெறிக்க வினைத்துயர் வந்திடும்போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத்தோதும்
குறிப்பது வுன்னிற்குறை கழல்கூட்டும்
குறிப்பறிவான் தவம கோனுருவாமே

மயக்கும்படி ஒருவனுக்கு வினை காரணமாக துயர் விளையும். எங்கும் செறிகின்ற சிவன் அஞ்செழுத்தை ஓதும் நினைவுடையவன் ஆயின், அந் நினைவு துயர் களைந்து சிவன் திருவடியைச் சூடச் செய்யும் தவம் அவ் வறிவானுக்கு சிவனுருவைத் தரும். இறைவனை வந்தித்து உய்யுமாறு உணத்துகிறது சிவனுருவைத் தரும்.

திருமந்திரம் :

நெஞ்சுநினைந்து தம்வாயாற் பிரானென்று
துஞ்சும்பொழுதுன் துணைத்தாள் சரண்என்று
மஞ்சுதவழும் வடவறை மீதுரை
அஞ்சில் இறைவன் அருள் பெறலாமே

ஒருவன் இறைவனை மனத்தால் எண்ணி வாயால் ஆண்டவன் என்று சொல்லி இறக்கும் போது அவன் திருக்கயிலாய இறைவன் தாள்களே அகலிடம் என்று கூறிவந்தால் அஞ்சு தலை இல்லையாக்கி திருவருள் பாலிப்பான். அஞ்சில் - திருவைந்தெழுத்தில் இறைவன் அருள் பெற லாமே என்றும் பொருள் கூறலாம். திருவைந்தெழுத்து இறைவன் தன்னை அணைவதற்கு வைத்த உயர்மறை என்று திருமூலர் அருளுகிறார்.

திருமந்திரம் - 2658

பிரான்வைத்த ஐந்தின் பெருமைஉணரா
திராமற்றஞ் செய்வார்கொல் ஏழைமனிதர்
பராமுற்றஞ் சூழ்ந்த அகலிடந்தானே

சிவபிரானால் உயிர்கள் உய்தற்பொருட்டு அருளியது திருவைந் தெழுத்து. அதன் பெருமையை அறிவற்ற மனிதர்கள் அறிவதில்லை. அவர்கள் இருளை கடப்பாரேர் - மாட்டார். அதன் பெருமையை கூறிடின் அதுவே பரச்சக்தியின் முழுவதும்மாம கீழ் எனப்படும். அதோ மாயையோடு பலவகையில் அசையும் அராவெனப்படும் ஊர்த்வ மாயையின் காரியம் அனைத்தும் அதுவே உயிர்களின் நிலைக்களமாக சூழ்ந்து அகன்றாடம் நிலமுதம் அதுவே.

இருபத் தோராயிறத் தறுநூறாய்
மருவி நாடொறும் வளர்சுவாசத்தை
சங்கென்வாங்கிச் சமனுறக்கும் பித்து
அங்கென்றெழுப்பும் அசபையும் அருளி

திருச்செந்தூர் அகவல்

அறிவோர் சிறிதும் சலியாமல்

அன்னப்பெயர் மந்திரம் ஆகி

— பிரபு - விமலை - 6-25

| | | |
|---|---|---|
| மூலாதாரம் | — | இதழ் 4 |
| சுவாதிட்டானம் | — | இதழ் 6 |
| மணி பூரகம் | — | இதழ் 10 |
| அநாகதம் | — | இதழ் 12 |
| விசுத்தி | — | இதழ் 16 |
| ஆக்ஞை | — | இதழ் 2 |
| பிரம்மரந்திரம் | — | இதழ் 1000 |
| அன்னப்பெயர் மந்திரம் | — | ஹம்ச மந்திரம் |

| | | |
|---|---|---|
| மூலாதாரத்தில் கணபதிக்கு | — | 600ம் |
| சுவாதிட்டானத்தில் நான்முகனுக்கு | — | 6000ம் |
| மணி பூரகத்தில் திருமாலுக்கு | — | 6000ம் |

| | | |
|---|---|---|
| அநாகதத்தில் ருத்ரனுக்கு | — | 6000ம் |
| விசுத்தியில் மகேஸ்வரனுக்கு | — | 1000ம் |
| ஆக்ஞையில் சதாசிவனுக்கு | — | 1000ம் |
| பிரம்மரந்தத்தில் ஞானசிரியனுக்கு | — | 1000ம் |

ஆக 21,600 உருசெபத்தை அர்ப்பித்தல் வேண்டும்.

தர்மச் சுடர், (1986 மார்ச்சு இதழ் பக்கம் 35)

நமசிவாய என்னும் ஐந்து அக்ஷரங்களுக்கும் 'ய' என்னும் அக்ஷரம் ஜீவனுகிறது. இந்த 'ய' என்னும் ஜீவனுல் நம, சிவ என்னும் இரண்டு மந்திரங்களை சுவாசத்துடன் சேர்த்து உள்ளுக்கிழுத்து வெளியில் விட வேண்டும். இந்த பஞ்சாக்ஷரமே பிருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாயங்கள். இவைதாம் பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேஸ்வரன், சதாசிவன். இவ்வைந்துமே சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய யோகநிலை. இத்தகைய சிவத்தை உபாஸனை யோக மூலமாக அறிந்து வழிபட உதவுகிறது பஞ்சாக்ஷரம்.

நாசித்துவாரங்களை வலது பக்கம் (சிவன்) இடது பக்கம் (சக்தி) என்று யோக சாஸ்திரம் கூறுகிறது. பஞ்சாக்ஷரத்தில் நம என்பதை உச்சரித்து கொண்டே மூச்சை சீராக உள்ளிழுத்து ஓம் என்று சிறிது நேரம் நிறுத்தி 'சிவ' என்று வெளிவிடும்போது 'ய' என்ற அக்ஷரம் மந்திரத்தின் ஜீவனுக அமைந்து இந்த ஸ்வாஸத்தைப் பூர்த்தி செய்கிறது. கர்ம வினையால் ஏற்படும் பிறப்பு இறப்பு காலத்தைக் குறுக்கி ஜீவன் மோக்ஷத்தை அடைய சிவபஞ்சாக்ஷரஜபம் பெரிதும் உதவுகிறது.

வெண்பா :

அஞ்செழுத்திலே பிறந்து அஞ்செழுத்திலே வளர்ந்து
அஞ்செழுத்தை யோதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்தில் ஓரெழுத்தை அறிந்து கூறவல்லரேல்
அஞ்சலஞ்ச லென்று நாதன் அம்பலத்திலாடுமே

## பண்டார சாத்திரம்

**பஞ்சாக்கரப்பஃறொடை** (திருவாடுதுறை ஆதீனம் வெளியீடு)

பேரூர் ஸ்ரீ வேலப்பதேசிகர் அருளிச் செய்தது :

" ஓதுகின்ற பெத்தமுத்தியாகப் பிறங்குமுயிர் கஞ்செழுத்தும்
ஒத்த சிவாயநம வோதின் "

நூல்களாலும், அனுபவியான ஆசாரியனுலும் ஓதப் பெறுகின்ற பெத்த நிலை மாறி முத்தி நிலை பெற்று விளங்க விரும்பும் உயிர்கட்கு ஏற்றதான அஞ்செழுத்தான 'சிவாயநம' என்பதனை சொல்லின்

பெத்தம் முத்தியாகப் பிறங்கும் உயிர்க்கு ஒத்த அஞ்செழுத்து சிவாய நம ஓதில் எனக் கூட்டி பொருள் கொள்க. அல்லது அஞ்செழுத்தும் ஒத்த சிவாயநம என முறையே கொண்டு பிரணவ பஞ்சாக்கரந்துடன் கூடிய சிவாயநம என்றும் பொருள் கொள்ளலாம்.

'' சுத்தப் பரிதியொளி கண்விளக்குப் பாங்கலிருள்போய்
மருவுஞ்சிவஞ் சத்தியுயிர் மாயை - விர்வு மலமாகும் ''

சிவயநம என்பதில் சி - சிவம், வ - சத்தி. இவ்விரண்டும் பரிதியும், அதன் ஒளியும் போல் வனவாம்; குணம் குணியாக இணைந்தவையாம். ய - உயிர், ந - மாயை; அவை கண்ணும் அதற்கு உபகரணப்படும் விளக்கு போல்வன. ம - மலம் அது இருளாகும். இதனை 'இறைசத்தி பாசம் எழின்மாயை யாவிஉறநிற்கும் ஓங்காரத்துள்' என்னும் திருவருட் பயனாலும் தெளிக.

'' முன்னெழுத்து பாநு முதல்வி எழுத்தொளியாம்
பின்னெழுத்து கண்ணு பிறங்குமே - தன்னையுன்னே
மூடுமெழுத்து தீபம் மூலையெழுத்தே இருளாம்
நாடியறிவாய் மனனே நன்கு ''

என்னும் சிவானுபவசாரம் இக்கருத்தை முழுதும் நன்கு விளக்குதல் காண்க.

'' இருளின் அலர்விழிபோல் ஆணவத்தின்
ஏகமாய் வல்வினையி னீட்டத்தால் - மோகமாய்
நின்ற நிலை மகரம் ''

இருளில் சேர்ந்துள்ள மலர்ந்த கண்ணைப்போல, ஆன்மா ஆணவத்தோடு அணைந்து அதாவது ஒன்ருய் நுகர்ந்தன்றித் தொலையாத வலிய இருவினையின் சேர்க்கையால் அறிவு மயங்கி நின்ற நிலையே மகரமாம்.

இருளில் சேர்ந்த கண் ஒன்றையும் அறியாது. இருளாகவே நிற்கும். அதுபோல் ஆணவ மலத்தை சார்ந்த ஆன்மா ஒன்றையும் அறியாது; அதனோடு ஒன்றியே நிற்கும். இருவினைகளின் சேர்க்கையாலும் அறிவு மயங்கி நின்ற நிலை மகரம்.

'' நீடும் இருள் விளக்கில்
சென்ற விழிக்கொருவர் சேர்த்துதல்போல் - ஒன்ற
வரு நகரம் ''

நகரம் மாயையாகிய திரோதாயி ஆதலின் இருளில் மயங்கிய கண்போல்வதாய உயிரை விளக்கு போல மாயை ஒளியின்மை

வாயிலாக இருளையும் காட்டி பொருள்கள் புலப்படுவதை மறைத்தும், விளக்கியும் உதவும் என்பதாம்.

மறைக்கும் போது திரோதாயியாக நின்ற அதுவே, விளக்கும் போது திருவருளாக துணை செய்யும் என்பது.

"தீய இருள்விளக்கு ஆதித்தன்எழிற் கிரணத்துள்ளே
மருள் விளக்காவாற் கண்டுமாளத் - தெருள்விழிபோல்
ஆமாநமக்கள் அருள் சிவத்தான் மாறஉயிற்
தாமா முறை மூன்றும் சாக்கிரமாம்"

மிகக் கொடிய இருள் சூரியனுடைய எழுச்சியுடைய கதிர்களுக்குள்ளே மருளைச் செய்யும் விளக்காக அழிந்துபடும், அளவும் குறையும். அந்த நிலையில் நகர மகரங்கள் தெளிவடைந்த விழிகளைப்போல் ஆம். அருளைச் சிவத்தான் மாற உயிர் அடைகின்ற மூன்று நிலைகளும் சாக்கிரவத்தையாம். விழி போல் ஆம் நமக்கள் 'மும்மலமாய் இருளாக ந' இருளோடு கூடிய கண்ணுக்கு இருளாயும், ஒளியோடு கூடிய கண்ணுக்குப் பொருள்படுத்தும் ஒளியாயும் விளங்குகிறது.

மாயையோடு மயங்கி அதுவேதான் என்று நிற்கும் ஆன்மாவினுக்கு அம்மயக்கத்தைப் போக்கும் சாதனமாக திருவைந்தெழுத்திலுள்ள நகார மகாரங்கள் ஆம் என்பது கருத்து.

ந - திரோதன் மாயையாகவும் ம - மலமாக இருப்பன

நகாரம் கருணையாக மாறியும், மகாரம் வலிகுன்றிட, தன்மை கெட, உயிர் மருள் நீங்கிய விழி போலத் தடையையும், தன்னையும், தலைவனையும் காணும் பேறு பெறும் என்பது கருத்து.

அருள் சிவத்தான் மாற உயிர் தாம் ஆம் முறை மூன்றும் சாக்கிரமாம் - நகார மகாரங்களை அருள் எழுத்தாகிய வகாரத்தை, 'சிவ' எழுத்தாகிய சிகாரத்தான் மாறி உச்சரிக்க உயிர் எழுத்தாகிய யகாரம் ஆகும் முறை மூன்றும் சாக்கிராவத்தையாம்.

நமக்கள் அருள் சிவத்தான் மாற உயிர் தாம் ஆகும். முறை மூன்றும் - அதாவது நமசிவய. சிவயசிவ என்ற மூன்றும் முறையே கேவல சாக்கிரம், சகல சாக்கிரம், நின்மல சாக்கிரம் ஆகிய மூன்று சாக்கிரமும் ஆம்.

அது எவ்வாறு எனின் உயிர் மலமாயைகளை முன்னிட்டு இறை அருள் இவற்றைச் சார்ந்து உயிராகியதான் பிற்பட்டு நிற்கும் நிலை. அது நமசிவய என்பதாம்.

உயிர் ஆணவ மலத்தால் பிணிப்புண்டு, திரோதாயியால் அழுந்தி அனுபவிக்கச் செய்யப்படும் மாயேயங்களோடு சிவசக்தி தன்னோடு இணைந்திருப்பதையும் அறியாது தான் பிற்பட்டு நிற்கும் கேவல ஜாக்ரமாம் என்பது.

சிவயநம :

இது சிவசக்திகள் முற்படதான் அவற்றைச் சார்ந்து நமக்கள் பிற்பட உயிர் இறையருளைச் சார்ந்தும் இன்பமாயும் நமக்களாகிய மல மாயைகளைச் சார்ந்து மலமாயும் நிற்கும் சாக்கிரமாகிய சகலநிலை இது இரண்டாவது.

வசியநம :

திருவருள் முற்பட்டு சிவத்தை காட்ட சார்ந்த மலங்கள் பிற்பட்டு நிற்கும் நின்பல சாக்கிர நிலை; இது மூன்றாவது. இது தாயருளால் தந்தையை உயிர் கூட மறைப்பகன்று நிற்கும் நிலை. இதே கருத்தை பட்டினத்தடிகள் 'மெய்யருளாம் தாயுடன் சென்று பின் தாதையை கூடி ஏயுவதே நிட்டை' என்று அருளியதில் காண்க. இது நின்மல சாக்கிரமாம்; இவை மூன்றும் சாக்கிரம்.

உயிர்தாம் ஆம் முறை மூன்று என்றது மந்திரங்களை; உயிர்கள் உயிர்க்கும் முறை மூன்று ஆம் எனப் பொருள் கொண்டு வாசிகம், மந்தம், மானசிகம் என மூன்றுமாம் என ஓர் வழக்கு. இவை மூன்றும் சாக்கிராவத்தையிலே நிகழ்வன.

நாமே அறிவாமோ - சொல்லிய நாமே அறிவாமோ; கண்ணனது சூரிய ஒளியை விட்டுப் பிரிந்து அறிய முடியாத நிலையை அடியேன் மனந்தெளிய விரித்துரைத்து உயிரினிடமாக செறிந்துள்ள அருளைக் கண்டு அதற்கு அடிமையாகும் வண்ணம் திருவுளத்தெண்ணி 'சி' முதலாக இருக்கும் முறை மாறித் திருவருளை முன்னுக்கி அதற்கு அடிமைபடும் கனவு நிலையைச் சொல்லி; ஆன்மா அறியும் தன்மையுடைய தாயினும் வாயில்களின்றி நேரே அறியாது. கண் காணும் தன்மையுடையதாயினும் கருவி ஆதலின் அருக்கண் ஒளி கண்ணொளியோடு கலந்திருக்கும் போதன்றி காணுதல்லவா. அதுபோல் ஆன்மாவாகிய நீ அருளை தரிசித்து அதன் வாயிலாக சிவ தரிசனம் பெற்று அதற்கு தொண்டுபடும் நிலையை சொல்லி - அதனை சொப்பனம் என்றது. 'வ' முதலாக 'சி' இடையாக 'ய' நடுவாக 'நம' ஈறுக சிந்தித்தல் மந்த ஒலியாதலின் சொப்பனத் தானமாகிய கழுத்தை இடமாக கொண்டு இயங்கும்.

"கொண்ட ஒளியதனால் கண்உணரும் உண்மைபோல் யானும்
அளியதனால் யாவுமறியத் தெளிவாம்

அருள் கவியாமென்ற கந்தையுறமுன்னே
மருண்மரு வத்தானடு வேயாகும் — இருள்சுழுத்தி ''

கதிரொளியால் கண் காணுவது போல், ஆன்மாவும் திருவருளால் அனைத்தையும் அறியும். ஆனால் ஆன்மா திருவருளால்தான் அறிந்தது என்று அறியாமல், அது கருவியாயிற்றே அன்றி அது காட்டவேயில்லை நானே கண்டேன் என்று யான் அகங்கரிக்க அதற்குமுன் அருளும் பின் சிவமும் பொருந்த ஆன்மாவாகிய தான் நடுவே நிற்கும் மயங்கிய இருள்நிலை சுழுத்தியாம்.

தாய் தந்தையர் நடுவே தூங்கும் குழந்தை போல் 'வ' 'சி' களுக்கு இடையே 'ய' வைத்து எண்ணும் போது திருவருட்சக்தி கருவியாக நின்று யவ்வாகிய ஆன்மாவை சிம்முதலை உணர்த்துகிறது யான் உணருகிறேன், கருவியாக இருக்கும் அத்துணையே வம்முதல் முதல்வி யின் துணை என்று அகந்தை உண்டாம். அதுவும் ஓர் இருள் நிலை ஆதலின் உறக்கமாகிய சுழுத்தியாயிற்று

'' என்றுஒளியின் செய்கையின்றி யெங்கேனுங்கட் செயல்தான்
ஒன்றுமே தேறிநீ யுன்னென்ன — அன்றேதன்
பேரறிவாய் ஆதாரம் பேசநிறை பொருளோடு
ஓரறிவாய்த் தானொழிலொண் துரியம் ''

சூரிய ஒளியின்றி எங்காவது கண் செயலைப் பொறுந்துமா? நீ ஆராய்ந்து பார் என்று, அக்கணமேதான் ஞான சொரூபியாய் அனைத் திற்கும் ஆதாரமாய் இருத்தலை உபதேசிக்க அதனையுணர்ந்து அடியேன் எங்கும் நிறைந்த பொருளாகிய சிவத்தோடு ஒன்றி ஓரறிவாய் உயிர் தன்னை அழிந்து பேரறிவாக இருத்தல் ஒள்ளிய துரியாவத்தையாம்.

என்று - சூரியன்; இருமருங்கும் சிவ என்பதனோடு இடையில் யகரம் பொருந்த தான் கெட்டு தன் மயமாய் நிற்றல் துரியாவத்தை யாம் என்றது.

— — — பார் என்று

ஒளிகுணமே அல்லால் ஒண்பொருள் ஒன்றன்று
தெவிபரிதி சேர்விழி போய் சேர்ந்தே - ஒளியென்ன
நில் ஏன்றுனந்த நேயநிலையாக்கி எனை
இல்லென்றே இன்புமவில் ஏகமாய்ச்செல்லத்
துரியாதீதப் பெருமை சொல்லாமற் சொல்லி ''

இதனை அறிவாயாக என்று. மேலும் ஒளி ஒரு பொருளின் குணமே யல்லாமல் பொருளாகாது. இதனை நீர் நன்கு தெளிக. சூரிய ஒளியைச் சேர்ந்த கண் சூரிய ஒளியேயாய்த் தன் ஒளி கலந்து நிற்றல் போல் நீ பேரறிவிடம் கலந்து பேரறிவாக நிற்பாயாக என்று உபதேசித்தான்.

ஆனந்தமாக அறியப்படும் நிலையில் அடியேனை ஆக்கி, அடியேனுகிய பொருள் இல்லை என்று அகண்டானந்தமாகிய சிவனுருவில் ஒன்றித்து நிற்கும் வண்ணம் துரியாதீதப் பெருமையை சொல்லாமற் சொல்லி.

அறிவானுகிய ஆன்மா தன் தன்மை அழிந்து ஆனந்தமாகிய 'சிவ' என்ற நேயப் பொருளிடத்தில் கலந்து நிற்கும் துரியாதீத நிலை காட்டினுன் என்பது. அது யவ்வும் கெட்டு சிவதனியே நிற்கும் முறை. இது நிற்கு முறையாம். இதனையும் இதற்குரிய திருவைந்தெழுத்து மாறலையும் குருமுகமாக கேட்டுத் தெளிதலே மரபு.

ஆசிரியர் திருவைந்தெழுத்தை ஐந்தவத்தையில் வைத்து உணர்த்தியமை அறிந்து இன்புறுவதற்கு உரியது. மேலும் ஆசிரியர் இவ்வாறு ஐந்தவத்தையில் நின்று திருவைந்தெழுத்தை தியானிக்குங்கால் தச காரியங்கள் ஏழாக வந்து பொருந்தும் என்கிறுர்.

'' மரியாத ஐந்தவத்தைப் பேற்றின் - சரியாய்த்
தசகாரியம் ஏழாய்ச் சேருமுவமை
வசமாங் கரும்பின் வகைகேள் ''

என்று அதற்கு கரும்பை உவமாயமாகச் சொல்லி, அதனைக் கேட்பாயாக என்று மாணுக்கனை ஆசிரியர் கீழ்கண்டவாறு தெளிவிக்கத் தொடங்குகிறுர்.

'நிசமான சுத்தாவத்தையாம் கரும்பிற் தொல்கணு ஐந்தாகும்''

நித்தியமான சுத்தாவத்தையாகிற கரும்பில் உள்ள பழமையான கணுக்கள் ஐந்தாகும். சுத்தாவத்தையாகிற கரும்புக்கு ஐந்து கணுக்களுண்டு என்பதாம்.

மேலும் ஆசிரியர்,

'' முறைமுத்தி வருசாக்கிர முதலாம் — பத்து
முழங்காரிய மவற்றின் மூன்றடக்கிப் பங்கேழ்
வழங்க முறையை வகுக்கில் - ஒழுங்கான
தத்துவ ரூபமுடன் தற்காட்சி சுத்தியுயர்
ஒத்த உருவம் உயர்காட்சி - சுத்தி
இலாபம் இவைஏழில் இலங்கும் உயிர்காட்சி
நிலாவு சிவரூப நேராம் - குலாவுசுத்தி
தன்னில் தரிசனமும் சார்யோகமாம் இரண்டும்
மன்னும் இவையேழும் வருமுறையில் - துன்னுகின்ற
சாக்கிரத்தில் நான்கு தகுஞ் சொப்பனமொன்று
நீக்கும் சுழுத்திநிறை துரியத்து - ஆக்கியிடும்
ஒன்றும் அதீத்தே உற்றிடும் ஒன்ருகும்எனத்

தன்தாளில் பூசை அனுட்டானம் - நன்ருன
சுத்த நெறியாம் எனவே சொல்லி ''

தசகாரியம் என்பது 1) தத்துவரூபம், 2) தத்துவ தரிசனம், 3) தத்துவசுத்தி, 4) ஆன்மரூபம், 5) ஆன்ம தரிசனம், 6) ஆன்ம சுத்தி, 7) சிவரூபம், 8) சிவதரிசனம், 9) சிவயோகம் 10) சிவபோகம் ஆகும்.

அவற்றை ஏழாக வழங்குதற்குரிய முறையை வகுக்கிருா. ஆன்ம தரிசனமானது சிவதரிசனத்துக்கு நேராம். ஆன்ம சுத்தியானது சிவ தரிசனம், சிவயோகம் ஆகிய இரண்டுமாகப் பொருந்தும். இவை ஏழும் அனுபவத்தில் வரும் முறையில் சாக்கிரத்தில் நான்கும், சொப் பனத்தில் ஒன்றும், அதனை அகற்றும் சுழுத்தி மிகுந்த துரியநிலையில் ஆக்கி விடுவது ஒன்றும் ஆம். மற்ருென்று துரியாதீதத்தை பொருந்தி விடுவதாம்.

தசகாரியம் ஏழுள் அடங்குமாறு :

தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவசுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்மலாபம், ஆன்மலாபம் (சிவ ரூபம் - சிவ தரிசனம்) என்பனவாம்.

சிவயோகம் பரிபாகமுற்ற ஆன்மா தன்னை காணும் போதே தடையை கண்டு நீங்கித் தலைவனை காணுமாதலின் ஆன்ம தரிசனம் நீங்கும் போதே சிவ ரூபமும், ஆன்ம சுத்தி விளைந்த போது சிவ தரிசனம், சிவ யோகங்களும் விளைகின்றது என்று இவ்வாறு அடக்கி காட்டியுள்ளது.

இவை ஐந்தவத்தையில் அடங்கும் முறைமை :

1) தத்துவ ரூபம்
2) தத்துவ தரிசனம்
3) தத்துவ சுத்தி
4) ஆன்ம ரூபம்
} இவை நான்கும் — சாக்கிரம்

5) ஆன்ம தரிசனம் — சொப்பனம்

6) ஆன்ம சுத்தி — சுழுத்தி - துரியம்

7) ஆன்ம லாபம் — துரியாதீதம்
(சிவரூபம், சிவதரிசனம்,
சிவயோகம், சிவபோகம்)

என்று ஐந்தவத்தையிலும் அடக்கி அறிக என ஆசிரியர் அருளுகிருர்

| அவத்தை | 7 காரியங்கள் | பஞ்சாக்ஷர எழுத்துக்கள் |
|---|---|---|
| 1) சாக்கிரம் | 1) தத்துவரூபம் | 1) நமசிவய |
| a) கேவலசாக்கிரம் | 2) தத்துவதரிசனம் | 2) சிவயநம |
| b) சகல சாக்கிரம் | 3) தத்துவசுத்தி | 3) சிவயசிவ |
| c) நின்மல சாக்கிரம் | 4) ஆன்மரூபம் | |
| 2) சொப்னம் | — ஆன்ம தரிசனம் | — வசியநம |
| 3) சுழுத்தி | — ஆன்ம சுத்தி | — வய்சி |
| 4) துரியம் | 1) சிவதரிசனம் | |
| | 2) சிவயோகம் (ஆனம லாபம்) | — சியவ |
| 5) துரியாதீதம் | — சிவபோகம் (ஆன்மலாபம்) | 1) சிவசிவ<br>2) சி |

இதனையும் இதற்குரிய திருவைந்தெழுத்து மாறலையும் குருமுகமாகக் கேட்டு தெளிந்து உய்ய வேண்டியது அவசியமாகிறது.



அத்தியாயம் - 12

# ஐந்தெழுத்தின் சிறப்பு, பெருமை, பயன்

அப்பர் பெருமான் " படைக்கலமாக உன்நாமம் எழுத்தஞ்சை என்நாவில் கொண்டேன் " என்று ஐந்தெழுத்தை தன்னுடைய படைக்கலமாக வைத்துக் கொண்டதாக பேசுகிறார்.

பஞ்சாக்ஷரம் உலகில் எல்லா மந்திரங்களுக்கும் தூரியாக உள்ளது. தோன்றிய மந்திரங்களுள் முதன்மையாக உள்ளது. இவையெல்லாம் ஆளுடைய பிள்ளையார் சீர்காழி அந்தணர்க்கு அருளிய அருள் மொழியில் புலனாகிறது.

இவ்வுண்மையைச் சேக்கிழார் ஸ்வாமி வாக்கில் காண்க:

" மந்திரங்க ளாகவெலாம் அருளிச் செய்து
மற்றவற்றின் வைதிக நூற்சடங்கில் வந்த

சித்தை மயக்குறும் ஐயம்தெளிய எல்லாம்
செழுமறை யோர்க்கருளிய தெருளும் ஆற்றல்
முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும்
முதலாகும் முதல்வனும் எழுத்தஞ் சென்பார்
அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத்து மேயென்று
அஞ்செழுத்தின் திருப்பதிகம் அருளிச் செய்தார் ''

ஆளுடைய அரசர் :

'' வைத்தபொருள் நமக்காமென்று சொல்லி மனத்தடைத்துச்
சித்தம் ஒருக்கிச் சிவாயநம என்றிருக்கின்
அல்லால் மொய்த்த கதிர்மதி போல்வார்
அவர் பாதிரிப்புலியூர் அத்தன்அருள் பெறவாமோ ''

என்று அருளுகிறார்.

ஆளுடைய அடிகள் :

'' நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய் இன்னமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந்தென் னுள்ளம்புகுந்து அடியேற்றி அருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே ''

சேக்கிழார் பெருமான் ஞானசம்பந்தர் புராணத்தில் முந்தைமுதல் மந்திரங்கள் எல்லாம் தோன்றும். முதலாகும் முதல்வனும் எழுத்தஞ் சென்பார். அந்தியினுள் மந்திரம் அஞ்செழுத்துமேயென்று அஞ்செழுத்தின் திருப்பதிகம் என்று பேசுகிறார்.

ஔவைப்பிராட்டியும் நல்வழிமாலையில் சிவாயநம என்று சிந்தித்து பழக சொல்கிறார்கள். அப்படி சிந்திப்பவர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை. அது :

'' சிவாயநம எனசிந்தித் திருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை — உபாயம்
இதுவே மதியாகும் அல்லாது எல்லாம்
விதியே மதியாய் விடும் ''

சிந்தித்தல் — இடையறாது எண்ணல்      அபாயம் — துன்பம்
உபாயம் — வழி      மதி — மெய்யுணர்வு      விதி — ஊழி

இளங்கோ அடிகள் சிலப்பதிகாரத்தில்

'' அருமறைகள் ஐந்தினும் '' என்று அருளுகிறார்.

ஐந்தினும் — ஐந்தெழுத்தினும்

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் வெள்ளையானை மீது கயிலாயம் செல்லும்போது, சேரமான் நாயனுர் அவருடன் செல்ல பக்கத்தில் இருந்த குதிரை மீது ஏறி குதிரையின் செவியில் 'ஐந்தெழுத்தோதி' குதிரையை விண்ணில் செலுத்திஞர் என்பது பெரிய புராணம்.

அப்பர்பெருமானை அரசன் சமணர்கள் தூண்டுதல் பேரில் ஒரு கல்லில் கட்டி கடலில் போடும்படி உத்தரவிட்டு, அவர் அம்மாதிரியே கட்டப்பட்டு கடலில் தள்ளப்பட்டார். அப்போது ஐந்தெழுத்து பதிகம் பாட அக்கல் தெப்பமாக மாறி அவரை கரை சேர்ந்தார் என்பது பெரிய புராணம். அப்பதிகத்தில் முதல் பாட்டு 'சொற்றுணை வேதியன் ஜோதி வானவன் என்பதில் நற்றுணையாவது நமச்சிவாயமே' என்பது ஆகும். அதுபோன்றே மற்றப் பதிகங்களும் அமைந்துள்ளது. அவற்றில் ஐந்தெழுத்தின் சிறப்புகளையும், வலிமையையும், பெருமையையும் பாடுகிறுர். மேற்படி ஐந்தெழுத்து பதிகங்கள் அதன் பெருமையை உணர்த்துகிறது

அப்பர் பெருமான் 'நமக்கு எதுவும் வேண்டியதில்லை; ஐந்தெழுத்தை ஒதி உணர்வார்களுக்கு சிவபெருமான் சக்தியோடு காட்சி தருவான் என்றும், ஐந்தெழுத்தோதிஞல் அது மருந்தாக ஆகி பிறவிப் பிணி நீங்கிடும்' என்று அருளுகிறுர்.

திருமந்திரம் :

குருவழியாய் குணங் களினின்று
கருவழியாய் கணக்கை அறுக்க
வரும்வழி மானமறுக்க வல்லார்கட்கு
அருள்வழி காட்டுவ தஞ்செழுத்துமே

பெரிய புராணம் :

இருவினை பாசமுமலக்க லார்த்தலின்
வருபவக் கடலில்வீழ் மாக்களேறிட
அருமுமெய் அஞ்செழுத் தரசையிக்கடல்
ஒருகன் மேலேற்றிடல் உரைக்...

உபதேச காண்டம் :

அஞ்செழுத் தெனும் அருமறை மந்திரமதனை
நெஞ்சமுத்துவர் முழுமுதல் தேவனை நிகர்ப்பார்
பஞ்சபாதகர் மீது மற்றவர் நிழல்படினும்
செஞ்செவயவர் காண்கினும் பவம்தொலை செல்லும்

ஆதி அருளுருவம் பெற்றெடுத்த அஞ்செழுத்தை
ஓதி உணர்ந்தாரை உள்ளத் துணர்ந்தாலும்
தீது பிறப்பறுப்பார் அன்னவர்க்கு தீங்கிழைப்பார்
போது நரகினுக்கு மண்ணுறுத்தல் போகாதே

குமரகுருபரன் இதழ் - ஆனி 1, 1986 - விடையரங்கம் பகுதி

நமசிவாய என்பது தூல பஞ்சாக்ஷரம் என்றும், உலக வாழ்வு வேண்டுவோர் இதனை செபித்து வருவர் என்றும் சாத்திர நூல்கள் தெரிவிக்கின்றன. அதாவது நமசிவாய என்பது இம்மை மறுமை பேறுகளைத் தந்து சுகவாழ்வை அளிக்கும் என்பதும், போக பாக்கியங்களைப் பெறுவிக்கும் என்பதும், முத்தியை அடைய வழியாயிருக்குமேயன்றி முத்தியை தராது என்பது சாத்திர நூல்கள் கருத்தாகும்.

இக்கருத்துக்கேற்ப நாவுக்கரசரும் :
''எந்தையார் திருநாமம் நமச்சிவாய என்றெழுவார்க்கு
இருவிசும்பில் இருக்கலாமே'' என்கின்றார்.

இவ்வடிகளில் இருவிசும்பில் இருக்கலாம் என்பது தேவர் உலகில் இந்திரனாக வீற்றிருக்கலாம் என்பது கருத்தாகும்.

சிவாயநம என்பது சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் என்றும், வீடு பேற்றை விரும்புவோர் இதனை செபிக்க வேண்டும் என்றும் சாத்திர நூல்கள் தெரிவிக்கின்றன. ''நம்முதலாக ஓதின் அருள்நாடாது நாடும் அருள் சிம்முதலா ஓதுநீ சென்று'' என்று உண்மை விளக்க சாத்திரம் கூறுகிறது.

இதே கருத்தை நாவுக்கரசரும் :
''திருவாய் பொலியச் சிவாயநம என நீறணிந்தேன்
தருவாய் சிவகதி'' என்று அருளுகிறார்.

சிவாயநம என்று செபித்து திருநீறணிந்தேன். சிவகதியான வீடு பேற்றைத் தருவாய் என்று நாவுக்கரசர் அருளுவதால் வீடு பேற்றுக்குரியது சிவாயநம என்பது தெரிய வருகிறது

நாவுக்கரசர் இருவகையான திருவைந்தெழுத்துக்களையும் குறிப்பிட்டு அதற்குரிய பலன்களையும் கூறிவிட்டார். மக்கள் எந்தபலனை எதிர்பார்க்கிறார்களோ அதற்கேற்ப ஓதிக்கொள்ள வேண்டும் என்பது தான் நாவுக்கரசரின் கருத்தாகும்.

திருவிளையாடல் புராணம் :

குடைந்து தர்ப்பணமும் செய்து தானமும்
கொடுத்தும் மாடே
அடைந்தெழுத் தைந்தும் எண்ணி உச்சரித்து
அன்பாம் எம்மைத்
தொடர்ந்துவந்து இறைஞ்சி சூழ்ந்து துதித்தெம்மை
உவப்ப செய்தோர்
உடம்பெடுத் ததனுல் எந்த வுறுதியுண்டு
அதனைச் சேர்வார்

வாயு சங்கிதை :

பண்ணுவனுருவாம் பஞ்சப் பிரமங்கள் பழுதொன்றில்லா
அண்ணல் அஞ்செழுத்தின் மன்னிஅடைவினில் அமரும்அந்த
நண்ணும் அஞ்செழுத்து கூறுநண்பனே வினைகள்எல்லாம்
கண்றைக் களைந்து மாற்றிக்கனிந்தருள் புரிவனன்றே

மறையொரு நான்கும் வல்லோர் மாசில் அஞ்செழுத்தை வல்லோர்
நெறியிலாப் பதிதரேனு நிகழ்ந்தும் அஞ்செழுத்தைஓதில்
உறைதரு பாவநீங்க உயர்கதி சேர்வரென்னுக்
கடைமிடற் றிறைவன் தேவிதன்னேடும் கழறினனே

பிரம்மோத்தர காண்டம் :

முக்கணுயகன் அமரருள் முதல்வரும் அதுபோல்
தக்கமந்திரம் எவற்றினும் தலைமை ஐந்தெழுத்தே
தொக்கநான் மறைபிரணவம் ஆதியாய் தொடங்கி
ஒக்க ஓதியே பரகதியளப் பிலர்உற்றுர்

சிவதருமோத்தரம் :

அந்தரத்து இயங்கவல்ல அசுரரும் அணுகமாட்டார்
சிந்திய சித்தக்கொத்தைப் பேய்களும் தீண்டமாட்டா
செந்தழல் என்னவஞ்சித் தீயவாயரவும் தீண்டா
மந்திர நவிற்றுவாரை மறலியும் அஞ்சுமன்றே

வினைகளும் அஞ்சும் வெய்யவினைஞரு மஞ்சுவார்கள்
நினைவில் இட்டமெல்லாம் அவர்க்கொரு கணத்தில்நேரும்
துணையவே சுழன்று போகும்துட்ட சார்த்தூலமற்று
மனிதருள் நல்லோர்ஏயோ அமரரும் வாஞ்சிப்பாரோ

கடம்பவன புராணம் :

அஞ்செழுத்தினுள் ஓரெழுத்தின் பயனளவைக்கு
அஞ்சநாண்மலர் கண்ணனும் கண்ணனும்காணுர்
செஞ்சவே பிரணவத்தோடும் சேர்த்தி உச்சரிக்கில்
பஞ்ச பாதகராயினும் பானெனப்படுவார்

வள்ளல்பெருமான் திருநீற்று பெருமையை பற்றி திருஅருட்பாவில் புண்ணிய விளக்கம் எனும் பகுதியில் பலவாருக பாடியுள்ளார். திருநீறு அணியும்போது சிவாயநம என ஓதி திருநீறு அணிதல் வேண்டும் என்று அருளுகிருர். புண்ணிய விளக்கம் என்பது சிவனை நோக்கிச் செய்யும் நல்வினையின் பயனை விளங்கத் தெரிவிப்பது எனப் பொருள்படும்.

திருநீற்றை அணிபவர் அதனை கையில் எடுக்கும்போது சிவனை நினைந்து நெற்றி, தோள், மார்பு முதலிய இடங்களில் இடும்போது சிவாயநம என சொல்லிக்கொண்டே இடுதல் முறையாகும். இவ்வாறு ஓதி அணிபவர்களுக்கு நன்ஞானமும், நல்லொழுக்கமும் உடைய பெரியோர்களாகிய சிவத்தொண்டர் நட்பு கிடைக்கும். இனிய அடியரல்லாத மடவோர் கூட்டம் ஏய்தாவாறு பாதுகாக்கும். சிவஞானப் பேற்றுக்குரிய தெளிவும், நெறியும் நல்கும்.

அது சைவ ஒழுக்கத்தையும் திருவருட் செல்வத்தையும் நல்கும் காண்; அது சிவபெருமானுடைய காண்டற்கரிய திருவடிக் காட்சியை பெறுவிக்கும்; அது சிவனது விடைமேல் விளங்கும் காட்சியைக் காணும் பேற்றை நல்கும்; அது அறிவுக்குத் திண்மையும், மனத்துக்கு வினை செயல் திறமும் நல்கும் என்பதுடன் விடைமேல் விளங்கும் சிவக் காட்சியைக் காணும் பேற்றினையும் அளிக்கும்.

மனத்தின்கண் நிலவும் பகையுணர்வு அகற்றி அன்பு செய்யும் ஆற்றலை நல்கும். எனவே "குறையுற்றமையால் நீ அஞ்சி வருந்தும் நெஞ்சமே என்மேல் ஆணையாக சொல்லுகின்றேன் நீ அஞ்ச வேண்டா" என்று வள்ளல்பெருமான் பஞ்சாக்கரத்தின் பெருமையை பற்றி பல பாடல்களில் பாடியருளியுள்ளார்.

அப்பர் பெருமான் நமசிவாய மந்திரத்தை ஓதி தான் கல்லையே தெப்பமாக கொண்டு கரையேறினர். இதை "கற்றுணைப் பூட்டி கடலில் பாய்ச்சினும் நற்றுணையாவது நமசிவாய" என்றும், "இந்த திருவைந்தெழுத்தாகிய நல்லநாமம் நவிற்றி உய்ந்தேன்" என்றும் பாடி அருளியுள்ளார்.

அளவில்லாத பாவங்களையும் போக்கவல்லது ஐந்தெழுத்து மந்திரம். இதனை அப்பரடிகளும் :

"விண்ணுற அடுக்கிய விறகில் வெவ்விழல்
உண்ணிய புகிலது ஒன்றும் இல்லையாம்
பண்ணிய உலகினில் பயின்ற பாவத்தை
நண்ணி நின்று அறுப்பது நமச்சிவாயவே"

என்று கூறுகிருர்.

இக்கருத்தினை மற்றும் ஒருபாடலில் விளக்குகிறார்; நான் செய்த பாவங்கள் அதிகம். அவற்றைப் போக்க உயிர் உள்ள மட்டும் உபவாசம் இருந்து பகல் இரவு உறங்காமல் தவம் இருந்து பரிகாரம் தேடினாலும் தீரா. நான் செய்த பாவங்களுக்கு பரிகாரம் 'சிவா' எனும் உனது நாமம் என்றே நம்பினேன் என்று தெரிவிக்கிறார்கள்.

இரவுபகனல் லோர்கள்சொற் பனத்தும்பாவம்
எள்ளளவு செய்யார்கள் போல்
என்மனது மெய்மொழிகளால் மறந்தும்
எள்ளளவு செய்ததில்லை
பிரிவினுடன் வயதுள்ளமட்டும் உபவாசமும்
பகலிறவு உறங்காமலே
பரிகாரதவமேது செய்தாலும் அணுவளவு
பரிசுத்த மாவதில்லா
நரகமிருபத் தெட்டெனுங் கோடிபற்றுத
நான்செய்த பாவங்களுக்கு
நாசஞ்செய் செய்பரிகாரமொரு சிவாவெனுமுனது
நாமம்ஒன்றே நம்பினேன்

— சன்மார்க்க விவேக விருத்தி இதழ் (1-4-89)
ஆசிரியர் தவத்திரு ஊரன் அடிகள்

வள்ளல் பெருமான் அருட்பெருஞ்ஜோதி அகவலில், அருட்பெருஞ் ஜோதி ஆண்டவரை மந்திரமே என்று அருளுகிறார்.

வானபெறற்கரிய வகைஎலாம் விரைந்து
நான்பெற அளித்த நாதமந்திரமே
கற்பம்பல பலகழியினும் அழியாச்சிகரமும்
வகரமும் ஆகியவாய்மை மந்திரமே
ஐந்தென எட்டென ஆறெனநான்கென
முந்துறு முறைமுறை மொழியுமந்திரமே
வேதமும் ஆகமவிரிவுகள் அனைத்தும்
ஓதிநின்று வாதோங்கு மந்திரமே

" அகரமும் உகரமும் அழியச் சிகரமும்
வகரமும் ஆகிய வாய்மை மந்திரமே "

என்பதில் ஓங்காரமும் பஞ்சாக்ஷரமும் கூறப் பெற்றன.

அகரம் — அ }
உகரம் — உ } அகரமும் உகரமும் சேர்ந்து ஓங்காரம் (அ + உ + ம் = ஓம்)

சிகரம் — சி } சிகரமும் வகரமும் சேர்ந்து சிவ
வகரம் — வ } (மகாகாரண பஞ்சாக்ஷரம்)

குறித்த பரிபாஷைகளின் உண்மை ஆன்ம அனுபவத்திலும், வகர தகர வித்தையிலும் விளங்கும் என கூறுகிறார்.

(திருவருட்பா - உரைநடைப் பகுதி - பக்கம் 30)

மந்திரங்கள் மிகப்பல; மந்திரங்கள் அனைத்திலும் சிறந்தவை இரண்டே; 1) ஓங்காரம் 2) பஞ்சாக்ஷரம்

ஓங்காரம் : மொழிப் பொது, சமயப் பொது, தமிழ் - வடமொழி இரண்டிற்கும் பொது. பிற மொழிகளிலும் ஓங்காரம் உண்டு. சைவம் - வைணவம் ஆகிய இரண்டிற்கும் பொது. பிற சமயங்களிலும் ஓங்காரம் வழங்குகிறது. கிறிஸ்தவர்கள் 'ஆமென்' என்று வழங்குவது ஓங்காரத்தின் மருவு.

பஞ்சாக்கரம் — சகா நிலையை தரும் - செத்தாரை எழுப்பும்
பஞ்சாக்கரம் — மறை பொருள் உடையது

வள்ளலார் எடுத்துக் கொடுத்த அருட்பெருஞ்ஜோதி மந்திரம் வெளிப்படையானது. அம்மந்திரம் :

அருட்பெருஞ்ஜோதி — அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை — அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி - சிகரத்தின் விளக்கம்
தனிப்பெருங் கருணை - வகரத்தின் விளக்கம்

பெரிய புராணத்தில் சேக்கிழார் பெருமான் ஐந்தெழுத்தின் பெருமையை பல இடங்களில் அருளுகிறார். அவற்றில் சிலவற்றை சிந்தித்து பார்ப்போம்.

## பெரிய புராணம்

(திருப்பனந்தாள் மடத்தின் வெளியீடு)

பக்கம் 46-47 — பாட்டு 159

பஞ்சின்மெல்லடி பாவையர் உள்ளமும்
வஞ்சமாக்கள் தம்வல்வினையும் அரன்
அஞ்செழுத்தும் உணரார் அறிவிலோர்
நெஞ்சம்என்ன இருண்டது நீண்டவாள்

பக்கம் 87 — பாட்டு 43 (அமர்நீதிநாயனார் புராணம்)

இழைத்த அன்பினில் இறைதிருநீற்றின் மெய்யடிமை
பிழைத்திலோம் எனிப்பெருந்துலை நேர்நிற்க என்று
மழைத்தடம் பொழில் திருநல்லூர் இறைவனைவணங்கி
தழைத்த அஞ்செழுத்தோதினார் ஏறினார் தட்டில்

அமர்நீதி நாயனார் தராசு தட்டில் ஐந்தெழுத்து ஓதி ஏறினார்.
தராசு தட்டு சமமாக வந்தது.

பக்கம் 192 — பாட்டு 9 (சண்டேசுரநாயனார் புராணம்)

பண்ணின் பயனும் நல்லிசையும் பாலின்பயனும்
இன்சுவையும் கண்ணின் பயனும் பெருகொளியும்
கருத்தின் பயனும் எழுத்தஞ்சும் விண்ணின்பயனும்
பொழிமழையும் வேதப்பயனும் சைவமும் போல்
மண்ணின்பயனும் அப்பதியின் வளத்தின் பெருமை
வரம்புடைத்தோ

பக்கம் 220 — பாட்டு 126 (திருநாவுக்கரசர் புராணம்)

சொற்றுணை வேதியன் என்னும் தூய்மொழி
நற்றமிழ் மாலையா நமச்சிவாய என்று
அற்றமுன் காக்கும் அஞ்செழுத்தை அன்பொடு
பற்றிய உணர்வினால் பதிகம் பாடினார்

பக்கம் 220 — பாட்டு 127

பெருகிய அன்பினர் பிடித்த பெற்றியால்
அருமலரோன் முதல் வாழ்த்துதற்
கரிய அஞ்செழுத்தையும் அரசு போற்றிட
கருநெடுங் கடலினுட் கல்மிதந்தே

பக்கம் 220 — பாட்டு 129

இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்
வருபவக் கடலில் வீழ்மாக்கள் ஏறிட
அருளுமெய் அஞ்செழுத்தரசை இக்கடல்
ஒருக்கால்மேல் ஏற்றிடஉரைக்க வேண்டுமே

பக்கம் 220 — பாட்டு 130

அருள்நயத் தஞ்செழுத்தேத்தப் பெற்றஅக்
கருணை நாவரசினை திரைக் கரங்களால்
தெருள்நெறி நீர்மையின் சிரத்தில் தாங்கிட
வருணனுஞ் செய்தனன் முன்பு மாதவம்

பக்கம் 408 — பாட்டு 698 (ஞானசம்பந்தர் பெருமான் புராணம்)

ஆதிமந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும்
மாதிரத்தினும் மற்றை மந்திரவிதி வருமே
பூதிசாதனர் மடத்தில் தாம்புனைந்த சாதனைகள்
சாதியாவகை கண்டமண் குண்டர்கள் தளர்ந்தார்

## ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரத்தின் ஸ்தூலாதிபேதமும் - சிவனும்

பஞ்சமாவக்காரத்தின் பகுப்பினை உறைப்பக் கேண்மின்
நஞ்சுறு யகார சிவனகார மகாரமாய
அஞ்சன மலந்திரோதை யாகுதற் போதத்தோனாய்
அஞ்சுக மொழியால் அருள் வகாரமுன்னு

——

அப்பனும் சிவமதாய அச்சிகாரத்தை நாடல்
செப்புதூல அஞ்செழுத்தாம் சிறந்தச் சிவன்றானே
தப்புறு தற்போதத்தை தாழ்த்தியே பின்னதாக்கி
ஒப்பிலா அருள்முன்னாக உயர்சிவசிகார நோக்கல்

——

சூக்குமமாகும் அந்ததுயர் தருதற் போதத்தான்
தாக்கிடாது ஒழிந்துநின்ற தண்ணருள் வகாரத்தானே
வாக்கினுக்கு எட்டாச்சுத்த அத்துவாம் சிவத்தைதானே
நோக்கிடல் காரணங்காண் நொய்யதற் போதம்நீங்கி

——

அருளெனும் வகாரமாய அகண்டித வடிவாய்நின்று
மருவிலச் சிவத்தை நோக்கல்வன் மகாகாரணங்காண்
அருவுரு வகாரமாய அருளையும் விட்டுத்தானும்
ஒருவவில் சிவமாய் நிற்றலோதிய வற்றின்மேலாம்

——

இத்தைச் சிகாரந்தானே எழிற்சிவமாகி நிற்கும்
முத்தியை ஈயும்அந்த முதன்மையைப் பெற்றதாலே
முத்தி பஞ்சாக்கரமோர் முந்துறப் பெற்றதாகும்
இத்திறம் ஐந்தெழுத்தே ஈயுமான் முறையேமுத்தி

சூக்கும பஞ்சாக்ஷரம் என்பது சிவயநம என்பது ஆகும். இந்த சூக்கும பஞ்சாக்ஷரத்தை ஓதுதலால் தற்போதம் (யான், எனது என்னும் அகந்தை) தாக்கிடாது ஒழிந்துபோம். அதாவது சிவாய நமவில் ந - ம நீக்கம் பெறும். பின் 'ய'காரமாகிய ஆன்மா வகார

சொரூபமாகும். வகார சொரூபமாகி சிவத்தை (சிகாரத்தை) நோக்கும். அந்த நோக்கிய காரணங்களால் தற்போதம் நீங்கிவிடும். அப்படி வகார சொரூபமாய் ஆகி அகண்டித வடிவாய் நின்று சிவத்தை (சிகாரத்தை) நோக்கல் காரணமாக அந்த அருவுரு விகாரமாகிய அருளை விட்டு சிகாகரமாகிய சிவத்தை தழுவி சிவாாய் நிற்கும். இந்த சிகாரந்தான் சிவமாய் நிற்கும். அது முத்தியை ஈனும் சிறப்பைப் பெற்றது. இவ்வாறு முத்தியை ஈனும் சிறப்பைப் பெற்றது ஐந்தெழுத்தேயாகும்.

பஞ்சவக்கிரப் புலத்தின் பதைப்பற மனதடிக்கிப்
பஞ்சவக்கிரன்றன் பாதம் பரிவாகும் உளத்திற்கொண்டு
பஞ்சவக்ரார்த் தந்தன்னை பகுப்புடனு ணர்வார்கள்
பஞ்சவக்றையாம் பாசம்பாறிடப் பரமாய் வாழ்வர்

பொருள் : ஐந்து புலன்களின் பதைப்பை அறுத்து மனதை அடக்கி பஞ்ச அக்கரத்தின் பாதம் பரிவோடு உள்ளத்தில் கொண்டு பஞ்ச அக்கரத்தின் பொருள் பகுத்து உணர்ந்து வாழ் பவர்கள் பாசம் முதலியது நீங்கி பரமாய் வாழ்வர்.

**திருமந்திரம்** - *1984* - தருமையாதீன வெளியீடு
(அருணை வடிவேல் முதலியார் உரை ஆசிரியர்)

பாட்டு - *948*

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத்து ஆகமங்களும்
ஐம்பதெழுத்தேயும் ஆவதறிந்த பின்
ஐம்பதெழுத்தும் போய் அஞ்செழுத்தாமே

இந்நூலில் பாட்டு 947ல் சுத்த மாயையிலிருந்து ஓங்காரமாய் நாதம் தோன்ற, அந்த நாதத்தின் தலைவியாகிய குண்டலினி சக்தி பதினறு கலைகளுடைய பிரணவமே தானுதி மக்களது உடம்பில் தலை கால் உடல் என்னும் உறுப்புகளில் நிற்கின்ருள். அவள் ஒன்றி நிற்கப் பெறுதலே பிரணவம் அழிவின்றி ஐம்பத்தோரெழுத்தாயிற்று என்று பேசப்பட்டுள்ளது. இந்த ஐம்பத்தோரெழுத்துக்களே வேதம், ஆகமம் அனைத்துமாய் நிற்கும்.

அவ்வுண்மையை உணர்ந்தபின் ஐம்பதெழுத்து அல்லது ஐம்பத்தோரெழுத்து என்றெல்லாம் எண்ணுகின்ற அலைவு நீங்கி ஐந்தெழுத்து என்று உணர்ந்து நிற்கின்ற அடக்கம் உண்டாகும்.

பாட்டு - 949

அஞ்செழுத்தால் ஐந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத்தால் பலயோனி படைத்தனன்
அஞ்செழுத்தால் இவ்வகலிடம் தாங்கினன்
அஞ்செழுத்தாலே அமர்ந்து நின்றானே

சிவபெருமான் தத்துவங்கப் படைத்தும் அவற்றின் காரியமாகிய எண்பத்து நான்கு நூறாயிரம் வகைப் பிறவிகளான உடம்புகளையும் ஆக்கி உயிர்கட்குத் தந்தும், அவைகளை காத்தும், அவ்வுயிர்கள் தன்னை மனம் மொழி மெய் (காயம், உடம்பு)களால் வழிபாட்டு நலம் பெறுவதற்கும் திருமேனி கொண்டு எழுந்தருளியிருப்பதும் ஆகிய எல்லாம் திருவைந்தெழுத்தாலேயாம்.



அத்தியாயம் – 13

# ஆடல் வல்லானும் ஐந்தெழுத்தும்

## பஞ்சாக்ஷர நடனம்

பல நிலைகளில் நின்று உயிர்களை தன்னிலை அடைவிக்கும் சிவபிரானுக்கு அவ்வுயிர்களை அந்தந்த நிலையில் அம்முதல்வனை வழிபட நினைவூட்டும் குறியாயுள்ள ஐந்தெழுத்து திருமேனியாகும். அத்திருமேனியில் நின்று, அவன் ஆடும் திருக்கூத்து உயிர்களுக்கு செய்யும் மறைப்புத் தொழில் என்றும், அருள் தொழில் என்றும் வேறுபடுகின்றன.

மறைப்பு கூத்து — ஊன நாடகம் — ஊன நடனம்
அருள் கூத்து — ஞான நாடகம் — ஞான நடனம்

"ஊன நாடகம் ஆடுவித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞைய வையகத்துடைய விச்சையே"

— திருவாசகம் 99

"ஊன நடனம் ஒருபால் ஒருபாலா
ஞான நடம்தான் நடுவே நாடு"

திருவருட்பயன் (83)

இவ்விரு கூத்தும் ஆடுவதற்கு இறைவன் கொள்ளும் நிலை வேறு பாட்டினை நினைவூட்டும் வகையில் திருவைந்தெழுத்தும், திருமேனியா தலையும், முத்தி பஞ்சாக்ஷரத்தின் இயல்பினையும் உணர்ந்து அந்த உபாய நிட்டையால் உண்மை நிட்டையை தலைபடல் வேண்டும்.

உண்மை விளக்கம் - 32

ஆடும்படிகேள் நல்லம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியிலே நகாரம் - கூடு
மகாரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகரும் முகம்வா முடியப் பார்

ஆடும்படி என்பது தூல நடம் புரியும் வண்ணம் 'பரையிடமா நின்று மிகு பஞ்சாக்கர' நடனம் வரையில் கூறுவதாவது. நல்லம் பலத்தான் - மாயா விலாசமாகிய தத்துவ வெளியில் திரோதன சக்தி மன்றத்தில் உயிர்கட்கும் பிரவிர்த்திரூப மறைப்பு தொழில் செய்யும் ஊன நடனம் ஆடுவன்.

உண்மை விளக்கம் ஆசிரியர் மணிவாசகங்கடந்தார் தன் சீடன்,

உண்மை விளக்கம் - 31ல்

நற்றவத்தோர் நாம்காண நாதாந்தத்து அஞ்செழுத்தால்
உற்றஉருவாய் நின்றஆடல் உள்ளபடி - பெற்றிடநான்
விண்ணோர்பொழில் வெண்ணெய் மெய்கண்ட நாதனே
தண்ணார் அருளாலே சாற்று

என்று இறைவன் திருக்கூத்தாடுதலை உள்ளவாறே காணலாம்படி சொல்லியருள்க என்று கேட்டு சொல்வதால் சீடனை ஐயனே என்று சொல்லி திருக்கூத்துபற்றி அருளுகிறார்.

நாடும் திருவடி — எல்லா உயிர்களும் நாடும் திருவடி

கூடு மகரம் — மாயை உயிர்க்கு உடலாதலின் உயிர்க்கு கூடு ஆகும் 'உருவெனும் துயரக்கூடு' என்பது சேக்கிழார் பெருமான் வாக்கு

உதரம் — வயிறு

**நமசிவாய**

| | | |
|---|---|---|
| நகரம் | — | திருவடி |
| மகரம் | — | திருவயிறு |
| சிகாரம் | — | திருத்தோள் |
| வகாரம் | — | திருமுகம் |
| யகாரம் | — | திருமுடி |

எனது குருநாதர் வாக்கு :-

திருமுடியிலே என இடப்பொருள் உருபே உள்ளதால் அது உருவம் அன்று. அவற்றையே திருவடி முதலியவைகளாகக் கொண்டு மெய்ப் பயனை இழத்தல் கூடாது.

பகரும் முகம — பேசும் வாய் - வா     ய + பார் — யப்பாரீ

| ந | ம | சி | வா | ய |
|---|---|---|---|---|
| திரு வடியில் | திரு வயிற்றில் | திருத் தோளில் | திரு முகத்தில் | திரு முடியில் |

உண்மை விளக்கம் - 33

சேர்க்கும் துடிசிகரம் சிற்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கில் இறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்
தங்கும் மகரமது தான்

துடி — உடுக்கை

சிற்கனம் — சித் + கனம் - ஞானகனம் (துரியத்தின் அருள்நிலை)

ஆனந்த கனம் — துரியாதீதத்தின் இன்ப நிலை

" அவற்குருவம் இன்ப கனம் " — திருவருட்பயன் - 73

அபயம் — அஞ்சேல் எனல்

இறைக்கு — சிவபிரானுக்கு

சிகரம் — துடி

வகாரம் — குஞ்சிதபாதத்தை காட்டும் திருக்கை

யகாரம் — வாதக்கை

நகாரம் — அங்கி - தீ

மகாரம் — முயலகன்

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| துடி | வீசுகை | அபயவரதம் | தீ | முயலகன் |

இவ்வெண்பாக்களை உண்மை விளக்கம் 35, 36, 36 வெண்பாக்களை வைத்து ஆராயுங்கால் உண்மை புலப்படும்.

## ஊன நடனம்

உண்மை விளக்கம் - 35

தோற்றம் துடியதனில் தோயும்திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா
ஊன்று மலர்ப்பாதத்தில் உற்றதிரோதம் முற்றி
நான்ற மலர்ப் பாதத்தே நாடு

| | | |
|---|---|---|
| உடுக்கு ஏந்திய திருக்கரம் | — | படைத்தல் |
| அமைந்த திருக்கரம் | — | காத்தல் |
| அக்னி ஏந்திய திருக்கரம் | — | அழித்தல் |
| ஊன்றிய திருவடி | — | மறைத்தல் |
| தூக்கிய திருவடி | — | அருளுதல் |

ஐந்தொழில்களையும் ஊனநடனத்தில் அம்பலவாணன் ஆற்றுவதை உணர்வாயாக. இந்த திருக்கூத்து நாம் உலக இன்பங்களை நுகர்வதற்கு துணை புரிகிறது. எனவே இதற்கு ஊன நடனம் என கூறப்பட்டது.

## ஞான நடனம்

உண்மை விளக்கம் - 36

மாயைதனை உதறிவல் வினையைச் சுட்டுமலம்
சாயஅமுக்கி அருள்தான் எடுத்து - நேயத்தால்
ஆனந்தவாரியில் ஆன்மாவைத் தான் அழுத்தல்
தான் எந்தையார் பரதம் தான்

| | | |
|---|---|---|
| உடுக்கை ஏந்திய திருக்கை | — | மயமலத்தை நீக்குதல் |
| நெருப்பு ஏந்திய திருக்கை | — | கன்ம மலத்தை சுடுதல் |
| ஊன்றிய திருவடி | — | ஆணவமலத்தை வலியடங்கச் செய்தல் |
| தூக்கிய திருவடி | — | பேரின்பம் அருளுதல் |
| அமைந்த திருக்கை | — | அப்பேரின்பத்தில் ஆன்மாவை அழுத்துவித்தல் |

ஆகிய தொழில்களை முறையே மேற்கண்டவாறு செய்கிறது.

ஆன்மாக்கள் வீடுபேறு அடையும் பொருட்டு நிகழும் நடனம் ஞானக்கூத்து - ஞானநடனம் எனப்படுகிறது. அஞ்செழுத்து மந்திரத்தில் சிவ என்பது ஞான நடனத்தையும், நம என்பது ஊன நடனத்தையும் உணர்த்தும். ய என்னும் உயிர் அவ்விரு கூத்தின் பயனையும் நுகரும்.

## ஆனந்த நடனம்

உண்மை விளக்கம் - 37

மோனந்தமா முனிவர் மும்மலத்தை மோசித்துத்
தான் அந்தமான இடத்தே தங்கியிடும் - ஆனந்தம்
மொண்டு அருந்தநின்று ஆடல்காணும் அருள்மூர்த்தியாக்
கொண்ட திரு அம்பலத்தான் கூத்து

மோனந்தமா முனிவர் —

மௌனம் ஆகிய ஞானவரம்பில் நிற்கும் சிறந்த முனிவர்கள்

மும்மலத்தை மோசித்து —

மும்மல (ஆணவம், கன்மம், மாயை) வாசனைகளை அறவே நீக்கி

தான் அந்தமான இடம் —

யான் எனது என்னும் செருக்கு அற்ற நிலையில்

ஆனந்தம் மொண்டு அருந்த நின்று —

சிவானந்த அனுபவத்தை தம் உணர்வினால் வாரி வாரி விழுங்கி துய்த்து நின்று

ஆடல் காணும் அருள் மூர்த்தியாக கொண்டது திருஅம்பலத்தான் கூத்து. இத்தகு நடனத்தையே சுந்தரர், திருத்தில்லைக்கு சென்ற போது ஆனந்த எல்லையில் கண்டு தரிசித்த தனிப்பெருங்கூத்து என்று சேக்கிழார் வருணிக்கிறார்.

ஞான வரம்பில் நிற்கும் ஞானிகளின் உள்ளத்தில் விளங்கும் அருள் ஞானமே திருவம்பலம். அங்கு பொங்கியெழும் பேரின்பமே சிவம். இங்ஙனம் சிவஞானம் பொங்கி வரும் நிலையில் ஐம்பொறிகளிலும் அத்தகு ஞானம் எளதில் கைக்கூடுமாறு உணர்த்து வழிபடப் பெறுவதே திருத்தில்லைக் கூத்தாகும்.

ஆனந்த நடனம் ஓர் அனுபவக் கூத்து;
ஊன நடனம் சகலர்க்காக நிகழ்த்தப் பெறுவது;
ஞான நடனம் முத்தர்க்காக நிகழ்த்தப் பெறுவது;
ஆனந்த நடனம் ஜீவன் முத்தர்க்காக நிகழ்த்தப் பெறுவது.

| எண் | திருவைந் தெழுத்து | வெண்பா 33 | வெண்பா 35 | வெண்பா 36 | வெண்பா 37 |
|---|---|---|---|---|---|
| 1) | ந | திருவடியில் | தீயேந்திய கையில் | அழித்தல் | வல்வினை சுடல் |
| 2) | ம | திருவுதரத்தில் | முயலகனை கீழ் கொண்ட திருவடி | மறைத்தல் | ஆணவ மலம் அகற்றிடல் |
| 3) | சி | திருத் தோளில் | உடுக்கை ஏந்திய கையில் | படைத்தல் | மாயை தனை உதறல் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 4) | வா | திரு முகத்தில் | எடுத்த திருவடியை காட்டும் கை | அருளல் | அருள் எடுத்தல் |
| 5) | ய | திருமுடியில் | அபய கரத்தில் | காத்தல் | ஆனந்த வாரிதியில் ஆன்மாவை அழுத்தல் |

என் குருநாதர் குறிப்பு :-

இதனை நன்ருக உள்ளத்தில் கொண்டவரே மேல் எழுதப்படும் எல்லாவற்றையும் தெளிய வல்லவராவர். எதனை விரும்பினும் அதனை எழுதுகிறவர் விளக்கும் நெறியில் ஊன்றிச் சென்று உணர்தல் வேண்டும்.

எனவே குருநாதர் வாக்கின்படி எல்லோரும் பஞ்சாக்கரத்தில் அக்கரங்களை தனித்தனியே கீழ்கண்டவாறு நினைவில் நிறுவ வேண்டும்.

I. 'சி' என்ருல்

1) சிவம் 2) சிவனுடைய திருத்தோள் 3) உடுக்கை ஏந்திய திருக்கை 4) படைத்தொழில் 5) மாயையை நீக்குதல் முதலியவை நினைவில் நிலவ வேண்டும்.

உடுக்கை — நாதருபம் - மந்திரங்கள்,
கந்த புராணம் - தட்சகாண்டட் ததிதியுத்தரப்படலம் - 110)

II. 'வ' என்ருல்

1) திருவருள் (சிவனது ஆற்றல்) 2) திருமுகம்
3) எடுத்த திருவடியை (குஞ்சித பாதத்தை) காட்டும் திருக்கை
4) அருளும் தொழில் 5) அருளே உடம்பாக நிறுத்தல்
அருளெடுத்தல் முதலியன எண்ணத்தில் எய்தல் வேண்டும்

III. 'ய' என்ருல்

1) ஆன்மாக்கள் 2) சிவனது திருவடி 3) அஞ்சேல் என்று அருளும் திருக்கை (அபயஹஸ்தம் - அபயவாதம் கொடுக்கும் ஸ்ரீ ஹஸ்த) 4) காத்தல் தொழில் 5) ஆனந்த தாண்டவம் ஆன்மாவை அழுதத்ல் முதலியன உள்ளத்தில் அடைதல் வேண்டும்

IV. 'ந' என்ருல்

1) மாயை - திரோதம் 2) சிவனது திருவடி 3) தீ ஏந்திய திருக்கை 4) அழித்தல் தொழில் 5) வல்வினை சுட்டொழித்தல் முதலியன உள்ளத்தில் கொள்ள வேண்டும்.

**V. 'ம' என்றால்**

*1) ஆணவ மலம் 2) திருவயிறு 3) முயலகனை கீழ்க்கொண்ட திருவடி 4) மறைத்தல் தொழில் 5) ஆணவ மலத்தை அகற்றல்*

*ஆணவ மலம் - முயலகன் - மேற்படி படலம் 115*

சிவபெருமானே தன் சங்கற்பத்தினால் முதற் காரணமாக மாயையினின்று காரிய பிரபஞ்சங்களை தோற்றுவிக்கிறான். இதை மேலே சொன்ன 'சி'காரத்தில் உள்ள 3வது பகுப்பு எண்ணால் உணரலாம். கர்த்தா சிவன் காரியப் பொருள்களை உதறிப் படைக்க காரணப் பொருளாய் இருப்பது மாயை. மாயையிலிருந்து ஒலியுலகு (சப்தப் பிரபஞ்சம்), பொருளுலகு (அர்த்த ப்ரபஞ்சம்) இரண்டும் படைக்கப் படும். துடி (உடுக்கை) ஓங்கார சப்தத்தையும், நாத தத்துவத்தையும் குறிப்பது. சுத்த மாயையின் காரியம் ஒலியுலகம். சிவபெருமான் ஆன்மாக்களை பாச சம்பந்தத்தால் உலக சுகதுக்கங்களில் அழுத்தியும் தம்மிடத்திலேயும் சுக துக்கங்கள் உறச் செய்கிறான். சிவ சம்பந்தத்தால் சிவானந்த அனுபவம் (பேரின்ப நுகர்ச்சி) அனுபவிக்கும்படி அதில் அழுத்துகின்றான். அபயம் அளிப்பது பதி; அபயம் பெறத் தக்கவை ஆன்மாக்கள் பயம் விளைவிப்பது போக்குவது இவைகளுக்கு கருவி பாசம். அபயம் அளிக்கும் கருவி பதி ஞானம். அபயம் அடைவிக்கும் கருவி ஆன்ம சிற்சகதி காத்தல் தொழில் பசுவின் பொருட்டேயாகும். பாசத்தோடு பசுக்களைப் பக்குவபடும் அளவு சேர்த்து வைத்து வருதலே காத்தல். பிரித்து விடுதல் அழித்தல். சேர்த்து வைத்தலாகிய நிகழ்ச்சி பசுக்களிடத்திலும் பிரித்து வைத்தல் மாயையிடத்திலும் நிகழ்கிறது. ஆதலின் காத்தல் 'ய'கரமாகிய திருக்கையிலும், அழித்தல் 'ந'கரமாகிய தீயேந்திய கையிலும் ஆவன என்று அருள் நூல் உணர்த்துகிறது.

யகரமாகிய ஆன்மாக்களை ஆனந்த வெள்ளத்தில் அழுத்துவது வீட்டு நெறியில் அழித்தல் மாயா காரியங்களினை. மாயா மாயையாகிய காரண ருபமாக ஒடுக்குவதேயாகும். அதனால் நகரமாகிய தீயேந்திய கையில் அது சார்த்தப் பெற்றது. தோயும் திதி அமைப்பில் (36 வெண்பா), ஆர்க்கும் யகரம் அபயகரம் முடிய தேயத்தால் ஆனந்தவாரியல் ஆன்மாவைத்தான் அழுத்தல் (வெண்பா 37) என்றும் அனைத்தையும், ஒருசேர வைத்துணர்ந்து கட்டிலே கன்மங்களியுமாறு ஆன்மாக்களை நுகர்வித்தலும், வீட்டிலே பேரின்ப வெள்ளத்தில் முழுக்குதலும் ஆகச் சிவபெருமான் செய்யும் காத்தல் ஆன்மாக்கள் பொருட்டேயாகும் என்பதே உண்மையான கருத்து ஆகும். அக் காத்தல் குறிப்பினை அபயத் திருக்கை வெளிப்படுத்தும்.

சாற்றிடும் அங்கியிலே சங்காரம், பார்க்கில் இறைக்கு அங்கி நகரம் நாடும் திருவடியிலே நகரம், வல்வினை சுட்டு என்பவற்றை ஒருங்கு சேர்த்து வைத்து நோக்கி 'நகாரத்திலே' (மாயையிலே) சங்காரம். கூத்து என்பது உயிர்களை நடத்துதல். ஊன நடனம், ஆன்மாவை உய்யும் பொருட்டு திரோதான சக்தியால் மறைப்பு செய்து உலகியலில் அழுத்தி வினைப் பயன்களை நுகரச் செய்து உய்விப்பது என்பது ஊன நடனம்

முந்தியில் உய்த்து நடத்துதல் ஞான நடனம். வினைப்பயனை நுகரச் செய்து ஆன்மாவிற்கு தானையும் காட்டி, தன்னையும் காட்டி உய்விப்பது ஞான நடனம். இவ்விடத்தில் நடனம் என்பதை ஏதோ நாட்டியம், பரத நாட்டியம் என்று பொருள் கொள்ளக்கூடாது. இறைவன் உள் நின்று உலகை ஆட்டுகின்றான்; இதுதான் நடனம்.

மருவும் துடியுடன் மன்னிய வீச்சும்
அருவியமைப்பும் அனலுடன் கையும்
கருவின் மிதித்த கமலப் பாதமும்
உருவில் சிவாயநம எனஓதே - திருமந்திரம் 2797

இதிலும், பேரூர் புராணம் நிருத்தப்படலத்தில் பாட்டு 67ல்
''எழில்நகு திண்டியம் வகரம் சீர்சொல் சிகரம் திருமுகம்''
என்பதிலும் காண்க.

## மிகு பஞ்சாக்ஷர நடனம்

பரையிடமா நின்றுமிகு பஞ்சாக்கரத்தால்
உரையுணர்வுக் கெட்டா ஒருவன் - வரைமகள்தான்
காணும்படியே கருணையுருக் கொண்டாடல்
பேணுமவர்க்குண்டோ பிறப்பு — உண்மை விளக்கம் - 39

பரை — பராசக்தி இடம் ஆ நின்று — இடமாக கொண்டு நின்று
மிகு பஞ்சாக்ஷரத்தால் — சிகாரத்தால்
உரை உணர்வுக்கெட்டா — சொல் உணர்வு இவைகளுக்கு எட்டா
பசு ஞானத்துக்கும் பாச ஞானத்திற்கும் எட்டாதது

இதை 'பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும்
பார்ப்பரியரிய பரம் பொருளை' என்னுஞ்சித்தியார் வாக்கில் காண்க

வரை மகள் — சிவகாமியம்மையார்
கருணையுறு — திருவருள் ஆகிய கருணை - அருள் சொரூபம்

பேணுமவர்க்கு உண்டோ பிறப்பு — இதை போற்றுபவர்களுக்கு
உண்டோ பிறப்பு
என்று கேள்விமுறையில் பிறப்பு இல்லை என்று ஆசிரியர் அருளுகிறார்.

எனவே 'சி' (சிவன்), 'வா' (சக்தி), 'ய' (உயிர்), 'ந' (திரோதம்-மாயை), 'ம' (ஆணவம்) என்பதில் 'ய' உயிர், அருள் சக்தி, மாயை, ஆணவம் இவற்றின் நடுவே உள்ளது. உயிர் மல நீக்கம் பெற்றது. ந - ம நீங்குகிறது. சிவாய என்பது மட்டும் உள்ளது. பின் உயிர் அருள் ரூபமாக ஆகிறது. அப்போது 'ய' - 'வா' சொரூபம் ஆகி விடுகிறது. தச காரியத்தில் ஆன்மா தன்னை அறிந்த பிறகு தானே எங்கும் நிறைந்த பொருள், தானே என்னும் எண்ணத்தை அடைகிறது. அடைந்து தெளிந்து பின் அருள் சொரூபமாக நிற்கும். அதுதான் 'சி - வ'. அப்போது சிவன் மட்டும் வெளிப்படுவான். இதை வள்ளல் பெருமான் 'அதுநான் என்னும் அஞ்ஞானம் கழன்றேறி' என்று மகாதேவ மாலையில் அருளுகிறார்.

அந்த உணர்வு வந்த உடன் தசகாரியத்தில் சிவரூபம், சிவதரிசனம், சிவயோகம், சிவபோகம் என்று படிப்படியாக நிலை ஏற்பட்டு சிவபோக நிலை கடைசியாக ஏற்பட்டு இந்த உயிர் இறைவன் உடன் இரண்டறக் கலக்கிறது. அப்படி இருக்கும்போது ஏது பிறப்பு என்று ஆசிரியர் அருளுகிறார். பிறப்பு இல்லையேல் இறப்பு இல்லை. அதுதான் பிறப்பு இறப்பு அற்ற நிலை. இதை வள்ளல் பெருமான் மரணமிலாப் பெரு வாழ்வு என்கின்றார்.

இந்த உயிர் அருள் சொரூபமாக ஆன பிறகு அதற்கு சிவரூபம், சிவதரிசனம் இவைகள் ஏற்படும். சிவன் அருள் உருகொண்டு ஆடுவது காணப்படும். இதை ஞானசம்பந்தர்பெருமான் ஞானப்பால் உண்ட சம்பவத்தை வைத்து சிந்தித்து பார்ப்போம் ஞானசம்பந்தர் பெருமான் குழந்தையாக இருந்தபோது அவர் தந்தை அவரை தான் குளிக்கப் போகும் போது கூட அழைத்துச் சென்று, கோவில் குளக் கரையில் விட்டுவிட்டு தான் குளத்தில் குளிக்கச் சென்றார். அப்போது ஞானசம்பந்தர் பெருமானுக்கு ஞானப்பசி எடுக்கிறது. பெருமான் உடனே அம்மே - அப்பா (வா - சி) என்று கூவி அழுகிறார். இறைவன் இறைவி அவருக்கு காட்சி கொடுத்து, இறைவன் (சி) உமையம்மையை (வா) பார்த்து ஞானப்பால் பெருமானுக்கு அருளச் செய்தார்.

ஞானப்பால் உண்டபிறகு, அவர் தந்தையார் குளித்துவிட்டு குளத்திலிருந்து வெளிவந்ததும் பெருமானின் திருவாயில் பால் இருப்பது கண்டு, யார் உனக்கு பால் கொடுத்தது என்று பெருமானை கோபித்து கேட்கிறார்; அப்போது சம்பந்தர் பெருமான் அங்கு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானை சுட்டு விரலால் சுட்டிக் காட்டி 'தோடுடைய செவியன்' என்று தொடங்கி பாடுகிறார். சுட்டி உணர முடியாத பொருளை சுட்டிக் காட்டுகிறார் பெருமான். இதை வைத்து மிகு பஞ்சாக்ஷரத்தைப் பற்றி சிந்திப்போம்.

அருகில் யாரும் இல்லாதபோது பெருமான் இறையுணர்வு தூண்ட இறைவனை அழைக்கிறார். அப்போது சிவபெருமான் சக்தியோடு (சி - வா) தோன்றுகிறார். அங்கு சிவய (சிவம்-சக்தி-சம்பந்தர்) என்று மட்டுமே உள்ளது. பின் ஞானப்பால் உண்டு திருவடி ஞானம் பெறு கிறார். தந்தையார் கேட்டதற்கு 'தோடுடைய செவியன்' என்று அருளுகிறார். ஞானப்பால் கொடுத்ததோ உமையம்மை ஆனால் பெரு மான் தோடுடைய செவியன் என்று சிவபெருமானைக் குறிக்கிறார். அதாவது 'சி' மட்டும் குறிக்கப்படுகிறது. உயிர் அருள் சொரூபமான வுடன் சிகாரம் தெளிவாகிறது. 'வா' அருள் உருவில் சிவபெருமான் தென்படும். அவருடைய திருக்கூத்து தரிசனம் ஏற்படும்.

இதைத்தான் 'பரையிடமா நின்றுமிகு பஞ்சாக்ஷரத்தால்' (சி) வரைமகள்தான் காணும்படி ஆடல் எனப்படுகிறது. இந்த உயிர் அருள் சொரூபமாக நின்று இறைவன் திருக்கூத்தை தரிசிப்பதுதான் வரைமகள் காணும்படி என்று அருளப்படுகிறது. அதனால்தான் ஆலயங் களில் நடராஜபெருமான் திருவுருவத்திற்கு முன் சிவகாமியம்மை திரு வுருவம் நடராஜபெருமானை தரிசிக்குமாறு அமைக்கப்படுகிறது. இதை சிவகாமி அம்மை தரிசனம் என்பார்கள்.

சிவஞான சித்தியாரில் 'ஆன்மாவில் அடி ஞானம் தோன்றும், தோன்ற தோன்ற தான் தோன்றும், சிவன் தோன்றும், தொல்லுலக மெல்லாம் தோன்றும், மற்றெல்லாமும் தோன்றும்' என்று உள்ள திரு வாக்கை மேற்படி சந்தர்ப்பங்களை வைத்து சிந்தித்து தெளிக.

உயிர் சார்ந்ததன் வண்ணம் உள்ளது எனப்படும். அது எதோடு சார்ந்ததோ அதன் வண்ணமே நிற்கும் என்பது சித்தாந்தம்.

உயிர் (ய), ந (மாயை), ம (ஆணவம்) இவைகளோடு கூடி இருக்கும்போது நம முன்னிற்கும். அருள் சிவன் பின்தங்கியிடும். இதை ஸ்தூல பஞ்சாக்ஷரம் நமசிவாய குறிக்கும். உயிர் (ய) ந - ம விலிருந்து நீங்க முயற்சிகள் எடுக்கும் போது இறை (சி), சக்தி (வா) பால் சிறிது சிறிதாக நீக்கமும் ஏற்படும் போது உயிர் இரண்டிற்கும் மத்தியில் இருக்கிறது.

இதைத்தான் சிவாயநம என்னும் பஞ்சாக்ஷரம் குறிக்கிறது. பின் உயிர் (ய), ந - ம (பாசம்) நீங்கி இறை (சி), அருள் சக்தி (வா) இவை யோடு கூடி அது சூழ உள்ளது. அது சிவயசிவ என்னும் பஞ்சாக்கரம் குறிக்கும். பின் உயிர் (ய) வா (அருளோடு) கூடி அருள் ரூபமாக நிற்கும். அதை சிவ சிவ பஞ்சாக்ஷரம் குறிக்கும். பின் அருள் ரூபம் வழியாக சி (சிவனை)யை அடைந்து கலந்து பிறப்பில்லா பேரின்ப பதவியை அடையும். அதை 'சி' என்னும் பஞ்சாக்ஷரம் குறிக்கும்.

## சூக்ஷும பஞ்சாக்ஷர நடனம்

நமது பெரியவர்கள் மகான்கள் அவர்கள் ஸ்ரீ நடராஜபெருமான் திருவுருவத்தை கலை உணர்ச்சியோடும், அரிய பெரிய தத்துவங்களோடும் அமைத்துள்ளார்கள். ஐன்ஸ்டீன் போன்ற பல மேல்நாட்டு விஞ்ஞானிகள் அதன் கருத்தை அறிந்து நமது செந்தமிழ்நாட்டு மெய்ஞானிகளின் அறிவையும், பெருமையையும் கண்டு வியந்தார்கள்.

சிவன் சக்தியாகிய இயற்கையோடு கூடுகிருர். அப்போது அறிவால் அறியப்படும் மந்திர வடிவை தாங்குகிருர். மந்திரங்களின் ஒலி சக்தி; அதன் பொருள் சிவம். ஒலியும் பொருளும் கூடிய சொல் வடிவே சிவன் திருமேனி. ஒலியலைகள் வளைவுகளாக பாயும் தன்மையுடையது. ஒலி வடிவான சிவகாமியம்மன் சத்தி மூன்று வளைவுகளுடனும்; அவ்வளைவுகள் இடை வளைவு மிக்கும், கழுத்து வளைவு முழங்கால் வளைவு சிறிதுமாய் இருக்குமாறு அம்மை சிலை அமைக்கப்பட்டுள்ளது. ஒலியானது அலை போல் வளைவுகளாக பாயும் என்பது விஞ்ஞானம். அது அம்மை ஒலி சக்தி என குறிக்கும். அவ்வொலி விரைவில் பாய்ந்து சென்று ஆகாயத்தில் பரவும் தன்மையுடையது. ஒலி பாயும் போது பொருளும் பரவத்தானே செய்யும்; ஒலியும் பொருளும் பிரிக்க முடியாதது.

எனவே மந்திரங்களின் ஒலி சக்தி, அதன் பொருள் சிவம். அந்த மந்திர சொல் வடிவே சிவனது திருமேனி என்பது ஊன்றறியத்தக்கது. இந்த ஒலி, அதன் பொருள் சிவம், அதன் வடிவம் மந்த்ரம் என்பதை சற்று ஆராய்வோம்.

நாம் ஒரு நபரை கூப்பிடுகிரும் என்று வைத்துக் கொள்ளுங்கள்; அவர் பெயர் ராமன் என்று கொள்வோம். அவரை ராமன் - ராமன் என்று கூப்பிடுகிரும். அவரும் நாம் கூப்பிடுவதைக் கேட்டு பதில் அளிக்கிருர். அப்போது கூப்பிடுவது ஒலியை ஏற்படுத்துகிறது. அந்த ஒலியின் பொருள் ராமன். அதன் வடிவம் அந்த நபர். அந்த நபர் கவனமில்லாமலோ அல்லது தூங்கிக் கொண்டிருந்தாலோ உடன் பதில் அளிக்க மாட்டார். எனவே சிலர் கூப்பிட்ட உடனே பதில் அளிப்பார்கள். சிலர் பலமுறை சத்தம் போட்டு கூப்பிட்டால் தான் பதில் அளிப்பார்கள். சிலரை கூப்பிட்டும் தட்டியும் எழுப்ப வேண்டியிருக்கும். எனவே ஆன்மாக்கள் அவைகளின் பக்குவத்திற்கு ஏற்ப அந்த மந்திரச் சக்தியை உணர்ந்து செயல்படும் என்பதை காட்டும்.

அதுபோன்று சிவனின் மந்திர வடிவம் பஞ்ஞாக்ஷரம். அது சிவாயநம, நமசிவாய முதலியன. சிவாயநம என்ற சூக்கும பஞ்சாக்ஷரத்தை இங்கு ஆராய்ச்சிக்கு கொள்வோம். எனவே ஒலி, அதன்

பொருள் சிவம், அதன் வடிவம் சிவாயநம என்று ஆகிறது. இப்போது இதன் செயலைப்பற்றி மேற்சொன்ன உதாரணத்தை வைத்து ஆராய்வோம்.

சிவன் எல்லா உயிர்களிலும் உயிர்க்குயிராய் இருக்கின்றான் என்பது நமது சித்தாந்தம். அந்த உயிர்கள் ஆணவ மலத்தால் கட்டுப்பட்டு இருளில் அழுந்தி உயிர்க்குயிராய் தன்னுள்ளே இருக்கும் சிவத்தை அறியாமல் இருக்கின்றன. ஓம் சிவாயநம என்று ஓதும்போது அது நம்மிடையே ஒரு உணர்ச்சியை ஏற்படுத்தும். மேலே சொன்னபடி எப்படி சிலர் கூப்பிட்டவுடன் பதில் அளிப்பதும், தூங்குபவரையும், கவனம் இல்லாமல் இருப்பவரையும் பல தடவை கூப்பிட்டும், தட்டி எழுப்பியும் பதில் அளிக்கிறார்களோ அதுபோன்று நம்மிடையே உயிர்க்குயிராய் விளங்கும் சிவத்தை தட்டி எழுப்பும்; இந்த சிவாயநம என்னும் பஞ்சாக்ஷரம்.

நாம சங்கீர்த்தனம் நடக்கும் இடங்களில் நாமாவளி பாடும்போது சில அன்பர்கள் அவர்களின் உயிர்க்குயிராய் விளங்கும் அவர் அவர்கள் இஷ்ட கடவுளின் எழுச்சியால் அவர்கள் அத்தெய்வத்தின் பெயரை கேட்டவுடன் தூண்டப்பட்டு மிகவும் ஆவேசமாக எழுந்திருப்பார்கள். சிலர் அசாத்ய பலத்துடன் ஆடுவார்கள். அவர்களை 10 பேர் சேர்ந்து அடக்குவது கூட கஷ்டமாக இருக்கும். அந்த நபர் சாதாரணமாக உள்ளவராக இருப்பார். அவருக்கு எங்கிருந்து ஆற்றல் வந்தது. உயிர்க் குயிராய் இருக்கும் சிவம் எழுந்து அவரை ஆட்கொண்டு தன்மயமாக்கிக் கொண்டுள்ளதால் அந்த அமானுஷ்ய சக்தி வருகிறது.

பேய் பிடித்தவர்கள் எப்படி பேயின் வசத்தவராகி அந்த பேயின் தன்மையை அடைந்து அந்த சக்தி பிடித்திருக்கும் வரை ஆட்டப்பட்டு இருக்கிறார்கள் என்பது நமக்குத் தெரியும். அதுபோல் சிவத்தால் ஆட் கொள்ளப்பட்டு இந்த சக்தியை பெறுகின்றோம். அங்கே உயிராகிய லிங்கத்தின் சிவபெருமான் சிவாயநம என மந்திர வடிவோடு திருநடம் புரிகின்றார்.

இதை உண்மை விளக்கும் வெண்பா 32ல்

'' எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள் — சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத் தஞ்சாலே
அவயம் அற நின்றாடுவான் '' என்று விளக்குகிறது.

லிங்கம் — அடையாளம்

எட்டும் இரண்டும் — 8 + 2 = 10 தமிழ்: அ + உ = ய

'எட்டும் இரண்டும் எனப்படுவது இருமூன்று நான்கெனப்படும்' என்றும் திருமூலர் வாக்கிலும் காண்க.

பத்து என்பது தமிழ் எழுத்தில் 'ய' என்பது ஆகும். 'ய' என்பது பஞ்சாக்ஷரத்தில் உயிரை குறிக்கும். எனவே அந்த உயிராகிய அடையாளத்தில் நடனம் நடைபெறுகிறது. திருமூலர் வாக்கு 'சீவன் சிவலிங்கம்' - இதை வைத்தும் விளக்கம் காண்க.

நட்டம் — நடனம் இது சூக்கும நடனம் பற்றி பேசுகிறது.

## திருக்கூத்து தரிசனம்

திருமந்திரம் - 9, தந்திரம் - 2715

இருதயந்தன்னில் எழுந்த பிராணன்
கரசரணாதி கலக்கும் படியே
அரதனமன்றினின் மாணிக்க கூத்தன்
குரவனாய் எங்கணும் கூத்துகந்தானே

மாணிக்ககூத்தன் என்று சொல்லப்படும் ஒப்பில் பெரும் முதன்மைக் கூத்தன் சிவபெருமான். அவன் திருவாலங்காட்டில் மணி மன்றம் அணி பெற தனியாய் பெரும் கூத்து இயற்றுகின்றனன். அவனே அனைவருக்கும் மெய்க்குரவனாவன்.

மணி மன்றம் ஐவகை மன்றத்திலும் முதன்மை வாய்ந்தது. ஏனைய நான்கு மன்றங்களும் பொன், வெள்ளி, செம்பு, ஓவியம் எனப்படும். இவ்வைந்தும் ஒருபுடையொப்பாக சிவயநம என்னும் திருவைந்தெழுத்தினை குறிப்பதாகும். இவ்வுண்மையினை வரும் வெண்பாவை வைத்து நினைவு கூர்க.

மேலாம் 'சிவாயநம' மேனி மணி பொன் வெள்ளி
பாலாம் செம்போடு மண்பற்றல்போல் - மேலாம்
அவனுடல் செய்வனகம் ஆல்தில்லை கூடல்
தவநெல்லை குற்றாலந்தானே

மணி - ஓவியம் ஆல் - திருவாலங்காடு கூடல் - மதுரை

மேலும் எல்லா இடங்களிலும் அவன் இடையறாது இயற்றும் திருக்கூத்தை உகந்து அருளினன். அத்திருக்கூத்தின் திருவானைத் தொடர்பால் நெஞ்சகத்தின் கண் எழுந்த உயிர்ப்பு கை கால் முதலிய பொறிகளை கலந்து இயக்குவதாயிற்று.

அரதனமன்று - இரத்தினசபை - திருவாலங்காடு குரவன் - குரு

இறைவனுக்கு அம்பலமானவை இவை என்று உணர்த்துகிறது

திருமந்திரம் - 2729

அம்பலமானது அகிலசராசரம்
அம்பலமாவது ஆதிபிரானடி
அம்பலமாவது அப்பு தீ மண்டலம்
அம்பலமாவது அஞ்செழுத்துமே

எல்லா இயங்கு நிலைத்திணை உயிர்களும், உலகில் உள்ள நீர், தீ மண்டலங்கள் திருவைந்தெழுத்து என்பவை ஆகும். அவ்வம்பலத்துள் கூத்தியற்றுவன ஆதிசக்தியோடு கூடிய சிவபிரான் திருவடிகள். சிவய நம என்னும் ஐந்தெழுத்தும் முறையே மணி, பொன், வெள்ளி, செம்பு; ஓவிய மன்றம் அக்கருவிகளை செலுத்தும். அ, உ, ம், விந்து, நாதம் என்னும் என்றும், சூக்கும பஞ்சாக்ஷரம் அம்பலம் என்பாரும் உளர்.

ராமனுதம்பிள்ளை உரை :

அனைத்துலகிலும் காணப்படும் இயங்கும், நிலைத்திருக்கும் பொருள்கள் முற்றும் கூத்தியற்றும் திருவம்பலமாகும். ஆதியாகிய சிவ பெருமான் திருவடியும் திருவம்பலமாகும். நீர் மண்டலம், தீ மண்டலம் மற்றும் பூதங்கள் ஆகியவைகளும் அம்பலமாகும் மெய்ம்மை அம்பல மாவது திருவைந்தெழுத்து ஆகும். மேலே சொல்லிய பாட்டையும் வைத்து சிந்திக்க; அகில சராசரங்கள் எல்லாம் சிவத்தின் தாண்டவ மாடும் இடங்கள்; நாடக சாலைகள். மெய்யுணர்வு விளங்கி மெய்ப் பொருளைக் காணுமாறும் அதன் பயனும் உணர்த்தப்படுகிறது.

திருமந்திரம் - 892

மேனியிரண்டும் விலங்காமல் மேற்கொள்ள
மேனியிரண்டும் மிக்கார் விகாரியா
மேனியிரண்டுப் ஊ ஆ ஈ ஏ ஓ என்னும்
மேனியிரண்டும் ஈ ஓ ஊ ஆ ஏ கூத்தாமே

சிவ பெருமானின் நினைப்படையான நீளுருவம் இருவகைப்படும். ஒன்று சொல்லுருவம்; மற்றது பொருளுருவம். சொல்லுருவம் என்பது மந்திர உருவம். பொருளுருவம் என்பது திருமுகம், திருத்தோள், திருக்கண், திருக்கைகள், திருஉதரம், திருவடிகள் முதலான திருவுருப்பு களோடு கூடிய திருவுருவம். திருவுருவங்களுக்கு அடியில் திருச்சக்கர மாகிய மந்திர உருவங்கள் எல்லாத் திருக்கோயில்களிலும் இன்றும் உள்ளன.

அத்திருமேனி இரண்டிலும் மிக்க விளங்கி தோன்றுவன் சிவன். அப்படி தோன்றினும் திரிபு எய்தா செம்பொருளாவன். (திரிபு - விகாரம்) நெட்டெழுத்து ஏழினுள் ஐ, ஔ என்னும் இரண்டெழுத்தும் நீங்கலாகிய ஐந்தெழுத்தும் வித்தெழுத்தெனப்படும். இவை இருவேறு

வகையாக எழுதப்பட்டு சிவயநம, நமசிவய என்பதும் இவற்றுடன் இணைத்து வரையப்படும் முறையை காண்கின்றோம். இவையே திருக் கூத்தின் உட்பொருள்கள்.

திருமந்திரம் - 941

ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சிய்இருதோள் வவ்வாய் கண்டபின்
ஆகின்ற வச்சுடர் அவ்வியல் பாமே

திருமந்திரம் — 2797

திருந்து சிவென்று தரியகையும்
அருந்தவர்வா வென்றணைத்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பிலியவ்வென்ற பொற்கையும்
திருந்த நத்தியாகும் திருநிலமவ்வே

சிவஞான தீபம் :

அகர உகர மகரமே விந்து நாதமாகிய அக்கரமைந்தும் இலிங்கமாகப்
பகருமிதன்மிசை சிகரத்துடியாக் பரினுவுடன் வீசியகை வகரமாக
யகரமிகும் அப்யகரமாக நீடும்எரி நகரம் ஆக முயலகனின் பாதம்
மகரநிலையாக மணிமன்றினூடே வான்கருணைவடிவாகி நடஞ்செய்வானே

கடம்பர் கோயிற் புராணம் :

உறுதியாகிய சூக்குமந்தூல மென்றுரைக்குங்
குறைவின் மூலமந்திரத்தையே திருவுருக்கொண்டு
மறுவிலா மணிமன்றுணின்றிருவர் வாழ்ந்தெடுப்ப
பிறவிநோய்கெட நடம்புரி பிரானடிபணிவாம்

சிவராத்திரி புராண சுருக்கம் :

திருத்தில்லை வாணன்உரு ஐந்தெழுத்தும்...

தணிகை புராண சுருக்கம் :

சுருதிபுகழ் ஐந்தெழுத்தின் பொருளாகி உலகினில்
ஐந்தொழிலும் நீடப் - பெருகிய பொன்னம்பலத்தில்
கூத்தாடும் பெருமானை பேசி வாழ்வாம்

சிதம்பர செய்யுட் கோவை - 46

சத்தமுமாகி சத்தத்தாற் பெறும்
அத்தமும் ஆகலின் அனந்தன் கண்களே
உத்தமன் ஐந்தெழுத்துருவங் காண்பன

# பேரூர் புராணம்

( திருவாவடுதுறை ஆதீனம் வெளியீடு )

நிருத்தப்படலம் – பாட்டு 66 – பக்கம் 233

அஞ்சக்கரமென எட்டக்கரமென ஆறக்கரமென நான்கெனப்
பிஞ்சக்கரமுதலுரு மூன்றெனவளர் பேரக்கரமுதல் மூன்றென்
நெஞ்சத்துற நவிலீரக்கரமென் நிலையோரக்கர மெனநின்ற
செஞ்சொற்றிறமிரு நான்காகியும் பிறவாயுந்திருநட
நவில்கின்றான்

சிவாயநம என்று அஞ்செழுத்தும், ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம என்கிற எட்டெழுத்தும், ஓம் நமசிவாய என்கிற ஆறெழுத்தும், ஓம் சிவாய என்கிற நாலெழுத்தும் ஆக உச்சரிக்கிற விதிப்படியே உச்சரித்து இவ்வாறு உச்சரிக்கிற முறைமையை விட்டு பஞ்சாக்கரத்தினுடைய சொரூபத்தை அறிந்து பிஞ்செழுத்தாகிய வகாரமாகிய பராசக்தியையும், பெருவெழுத்தாகிய சிகாரம் ஆகிய சிவத்தையும் தன்னுடைய இதயத்திலே வைக்கில் பேசும் எழுத்தாகிய வ கா ர ம் ஆகிய சக்தி சிகாரம் ஆகிய சிவத்தை இரண்டறக் கூசாமல் உணரும்படியும் மற்றும் வசிய என்னும் மூன்றும் சிவய என்னும் மூன்றுமாகிய ஐந்தெழுத்தின் வகை எட்டாகியும் பிறவகையாகியும் திருநடஞ் செய்கின்றான்.

பாட்டு – 67

நகாரந்திருவடி மகரம்வயிறெழிலை குதிண்புயம் வகரம்சீர்சால்
சிகாரந்திருமுகம் யகரந்திருமுடி சிகரந்துடி கவிதருசெங்கை
வகரம்யகர மதபயந்தருகரம் வளர்தீநகர நம்மகரங்கீழ்
உகலும் முயலகனௌிர்வரசிகை பிரணவமாயொரு
நடநவில்கின்றான்

திருவைந்தெழுத்திலே ந க ர ம் திருவடியிலும், மகரம் திருவுந்தியிலும், சிகரம் திருத்தோளிலும், வகரம் திருமுகத்திலும், யகரம் திருமுடியிலும் ஆக இந்த முறைமையிலே திருமேனியாக கொண்டும், சிகரம் டமருகம் ஏந்திய 'திருக்கரமாகவும், வகரம் வீசிய திருக்கரமாகவும், யகரம் அமைந்த திருக்கரமாகவும், ம க ர ம் முயலகனை மிதித்த திருவடியாகவும், இந்த முறைமையிலேயும் திருமேனியாகக் கொண்டு திருவாசி ஓங்காரமாக ஒப்பற்ற தி ரு ந ட ன த் தை ச் செய்தருளுகின்றார்.

நடராஜ பெருமான் வடிவமே பஞ்சாக்ஷர வடிவமாகும்.

திருமந்திரம் :

> திருந்து நல் 'சி' அன்று தரியகையும்
> அருந்தவா 'வா' என்றணைத்த மலர்க்கையும்
> பொருந்தில் இமைப்பிலி 'ய' என்ற பொற்கையும்
> திருந்தத் 'தீ' ஆகும் திருநில 'ம'வ்வே

'தீ' என்ற எழுத்து 'ந'வை குறிக்கும் என்று உணரவும்.

திருமந்திரம் - 895

> கூத்தே சிவாயநம மசி யாயிடும்
> கூத்தே ஈ ஊ ஆ ஏ ஓ சிவாயநம வாயிடும்
> கூத்தே இ உ அ ஏ ஓ சிவாயநம வாயிடும்
> கூத்தே ஈ ஊ ஆ ஏ ஓ நம்சிவாய கோள்ஒன்றுமே

ஞான நடனம், ஊன நடனம் என்னும் இருவகை நடனங்களுள் ஞான நடனம் 'சி வா ய ந ம' என்பதனுல் அமையும். அம்மந்திரம் தனியாகவே உச்சரிக்கப் படலாம். வித்து எழுத்து எ, ம், ஊம், ஆம், ஏம், ஓம் ஆகிய இவைகளில் ஒன்றையேனும், பலவேனும் கூட்டியும் உச்சரிக்கப்படலாம். சிவாயநம எனும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரமே நகாரம் முதலாய தூல பஞ்சாக்ஷரமாய் நிற்கும். ஆதலால் அது ஊன நடனத் திற்கும் உரியதாய் மேற்கூறியவாறே வித்துக்களையும் கூட்டாது கூட்டியும் உச்சரிக்கப்படும்.

சிவாயநம என்பதை திரும்ப திரும்ப ஓதினுல் மகாரம் சிகாரத் தோடு புணரும் நிலை உண்டாகும். அதனுல் தீங்கில்லை என்பதற்கு 'மசி' என்பதையும் முதலடிக்கண் கூறினுர்.

திருவைந்தெழுத்தை பீசங்களோடு கூட்டாதது நிர்பீசம் என்றும், கூட்டுவது சபீசம் என்றும் சொல்லப்படும்.



அத்யாயம் – 14

# ஆகமங்கள், வேதங்கள், உபநிடதங்கள் மற்றும் இதர நூல்கள் முதலியவைகளில்

# பஞ்சாக்ஷரம்

### பஸ்ம ஜாபால சுருதி :

தாரகோயம் பஞ்சாக்ஷர: கோயம் சைவோ மனு:
சைவதாரகோயம் உபதிஸ்யதே மனுரவிமுக்தே சைவேப்யோ
ஜீவேப்ய: சைவோயமேவ மந்த்தராயதி -
ஸ ஏவ ப்ரஹ்மோபதேச :

பொருள் : இப்பஞ்சாக்ஷரமே தாரகம். இச்சைவ மந்திரம் என்பது யாது? இத்தாரகமாகிய சைவ மந்திரமே காசியில் சைவர்களான ஜீவர்களுக்கு உபதேசிக்கப்படுகின்றது. இச்சைவ மந்த்ரமே இரட்சிக்கின்றது. அதுவே ப்ரஹ்மோபதேசமாம்.

### யஜுர்வேத போதாயன சாகை :

ருத்ரேஷு புண்யமி வபஞ்சகம் அக்ஷராணும்
சாஸ்த்ரேஷு ஸ்ருதிருத்கிருஷ்டா ருத்ரௌகாத சினிஸ்ருதௌ
தத்ரபஞ்சாக்ஷரீ தஸ்யாம் சிவடத்யக்ஷரத்வயம்

பொருள் : ருத்ரத்தில் எழுத்துக்கள் ஐந்தும் சிறந்தது. நூல்களில் சிறந்தது வேதம். அச்சுருதியில் ருத்ரானுவாசம் மிகச் சிறந்ததேயாம். அதனுள் பஞ்சாக்ஷரி சிறந்தது. அதனுள்ளும் சிவ என்னும் இரண்டெழுத்தும் சிறந்ததாம்.

### திரிபுரதா பினியுப நிடதம் :

ஓம் நமசிவாயேதி யாஜுஷா
மந்த்ரோபாஸ கோருத்ரத்வம் ப்ராப்நோதி - கல்யாணம்
ப்ராப்னோதி - தத்விஷ்ணோ பரமம்பதம்

பொருள் : ஓம் நமசிவாய என்கிற யஜுர்வேத மந்த்ரோபாசகன் உருத்ரத் தன்மையை அடைகிறான். மங்கள ஸ்வரூபத்தை அடைகிறான். அதுதான் விஷ்ணுவினுடைய பரமபதம்.

## பஞ்ச ப்ரஹ்மோப நிஷதம் :

*பஞ்சாக்ஷரமயம் சம்பும் பரப்ரஹ்ம ஸ்வரூபிணம்*
*நகாராதி யகாராந்தம் ஞாத்வா பஞ்சாக்ஷரம் ஜபேத்*
*சர்பஞ்சாத்மகம் வித்யாத் பஞ்ச ப்ரஹ்மாத்ம தத்த்வத :*
*பஞ்சப்ரஹ்மாத்மகீம் வித்யாம் யோதீத பக்திபாவித :*
*சபஞ்சாத்ம கதாமத்யே பாஸதே பஞ்சதாத்வமயம் :*

**பொருள் :** பஞ்சாக்ஷர மயமானவரும், பரப்ரம்ஹ சொரூபியுமான சம்புவினை (சிவனை) நகாராதி யகாரந்தமாக அறிந்து பஞ்சாக்ஷரத்தினை ஜெபிக்க வேண்டும். பஞ்சபிரம்ஹ வடிவ தத்துவத்தினால் எல்லாவற்றையும் பஞ்ச வடிவமாக அறிய வேண்டும். பஞ்சபிரஹ்ம வடிவ வித்தையினை எவன் பக்தியுடன் ஓதுகின்றானோ அவன் பஞ்ச வடிவுடைமையை அடைந்து தானே ஐவகையாக விளங்குகின்றான்.

## சிவ புராணம் :

*சாங்கானி வேதசாஸ்த்ராணி சமஸ்திதானி ஷடக்ஷரே*
*நதேனஸத்ரு சாஸ்தஸ்மா மந்த்ரேப்யோ ஸ்திபர: கஸ்சித்*
*சப்தகோடி மகாமந்த்ரை : உபமந்த்ரை : அநேகதா*
*மந்த்ரஸ் ஷடாக்ஷரோபின்ன: ஸூத்ரம் விருத்யாத்மனைய தா*
*சிவஞானானி யாநிச*
*ஷடக்ஷரஸ்ய சூத்ரஸ்ய தானிபாஷ்யம் சமாஸத :*
*ததல்பாக்ஷர மதாட்யம் வேதஸாரம் விமுக்தம்*
*சுனிஸ்சிதார்த்த கயீரம் வாக்யம் தத்பராமேஸ்வரம்*
*அதிசூக்ஷ்மம் மஹார்த்தஸ்சஞேயம் தத்தடபீஜவத்*

**பொருள் :** சாங்கமாகிய வேத சாஸ்திரங்கள் யாவும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் கண்ணே நிலைத்துள்ளவையாம். அப்பஞ்சாக்ஷரத்திற்குச் சமானமானதும், மேலானதுமான பிறிதோர் மந்திரமில்லை. சப்தகோடி மகா மந்திரங்களாலும், உப மந்திரங்களாலும் அநேகவிதமாக ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரமே வேறுபட்டதாம். அவையாவும் பஞ்சாக்ஷரத்தின் பாஷ்யங்களாகும். அவை அபாக்ஷர வடிவினதாயும், செவ்வையாய் நிச்சயிக்கப்பட்ட பொருள் கம்பீரமுடையதாயும், பரமேஸ்வர வாசகமாயும், மிகுந்த சூக்குமமானதாயும், அநேக வியாக்யானங்களைக் கொண்டு அறிதற்பாலதாயும், ஆலவித்தின் தன்மையை நிகற்பதாயும், வேதசாரமாயும், முத்தியை தருவதாயும் உள்ளதாம் ஸ்ரீ பஞ்சாக்ஷரம்.

## சிவாகம ரத்னாகர சிவாகம பூஷண, சிவயாக நிர்வாக ஸாதக டாக்டர். G. S. விஸ்வநாத சிவாச்சாரியார் சேலம் அவர்களிடமிருந்து கேட்டறிந்த குறிப்புகள்

பஞ்சாக்ஷரம் — இஷ்ட காம்ய சித்திகளையும், முக்தியையும் விரும்பி ஜபித்தால் விரும்பியதை தரும்.

சுலோகம் :

யஸ் சிவோ நாம ரூபாப்யாம் யாதேவி சர்வ மங்களா
தயோ: ஸம்ஸ் ஸ்மிருதாம் பும்ஸாம் சர்வதோ ஜெய மங்களம்

சிவநாம ரூபம் — சிவாயநம மற்றும் இதர பஞ்சாக்ஷரம் தேவி - வ

மந்திரங்களுக்கெல்லாம் முதன்மை பெற்றதும் தலைமை தாங்கும் மந்திரம் சிவ பஞ்சாக்ஷரமாகும். பிரணவத்தை சேர்த்து சொல்வது பீஜாக்ஷரங்களுடன் கூடியதாகும். ஆயினும் சுத்த பஞ்சாக்ஷரம் என்ற முறையில் பிரணவம் சேர்க்காமலே ஜபிக்க இந்த மந்திரம் ஒன்றே பெருமைப் பெற்றுள்ளது. காரணம் என்னவெனில் ஓம் என்பது சிவ சக்தி மயமானது. ஓம் என்னும் பிரணவத்தில் அருவுருநாத ஒலியாய் சிவபெருமான் இருந்து ஆட்சி செய்கிறார். ஆயினும் சூக்ஷ்ம பஞ்சாக்ஷரத்தில் சிவ எனும் இரண்டும் சிவசக்தி வடிவுடையது ஓம் என்னும் ஓர் எழுத்தும் சிவசக்தி வடிவில் அடங்கும். ஆகையால் சிவசிவ எனும் மந்திரத்தை ஜபிப்பது முறையாகும். சிவாகமத்தில் மந்திரங்களையும் தெய்வ பூஜையும் ஜபிக்க பூஜிக்க சைவ தீக்ஷை பெற்றுதான் ஜபிக்க வேண்டிய முறை என்று விதிமுறை வகுத்துள்ளது.

ஓம் என்னும் மந்திரம் சிவமாயும் சக்தியாயும் இணைந்தது என்பதற்கு விளக்கம் :

த்விதீய: ப்ரணகச்சித் மதியம் ப்ரணவஸ்த்தா
ஆதாரோகார மகார மதீயே ப்ரணவஸ்தித :
உகாரஞ்ச மகாரஞ்ச அகாரஞ்ச க்ரமேணது
த்விதீயம் பிரணவம் வித்வித்ரிமாத்ரம் ப்லுதமுத்தமம்

இதில் ஓர் காலத்தில் சிவனும் சக்தியும் உரையாடிய சமயத்தில் சிவன் உமையம்மைக்கு அருளியதாக சொல்லப்படுகிறது. ஒரு பிரணவம் சக்தி உமையம்மைக்கு உரியது. மற்றொன்று சிவபெருமானுக்கு உரியது. சிவபெருமான் பிரணவம் அகாரம், உகாரம், மகாரம், அகாரம் என்பது. உமையம்மைக்கு உரியது; உமா என்னும் சக்தி பிரணவம் மும்மாத்திரை ஆகும். அது உம் (ஆ) - உமா ஆகும். ஆ ஒலி நிறுவதைப் ப்லுதம் என்று உரைக்கின்றது இவ்விவரங்கள் லிங்க புராணம் பூர்வ பாகத்தில் கூறப்பட்டு உள்ளது.

அகார உகார மகாரமாயும், உகார மகார அகாரமாயும் நின்ற பிரணவம் மாய் சக்தியர்காத அருட் சிவ சக்தியாகிய உமையம்மை யோடியைந்த சிவபெருமானையே பொருளாகக் கொண்டன. ருக்வேதம் முதலான மூன்று வேதங்களும் உரைக்கின்றன.

இதனை திருஞான சம்பந்தர் ''பிடியதன் உருவுமை கொளமிகு கரியது வடிவுடை'' என்று பாடுகிறார்.

யானை முகமாக ஊகிக்கின்ற சிவ பிரணவமும், சக்தி பிரணவமும் இணைந்திருப்பதை காட்டுகின்றது. பிரணவ ஒலியானது பிர்மா விஷ்ணு, ருத்ரனும் தொடர்பு உள்ளது, அவையாவன :

அகாரம் பிரம்மாணம் நபௌ உகாரம் உகாரம்
விஷ்ணு ஹ்ருதயே
மகாரம் ருத்ரம் ப்ரூமத்யே ஓங்காரம் ஸர்வேஸ்வரம்
- துவாத சாந்தயே

என்று ஈசாவாக்ய உபநிஷத், பாண்டுக்யோப னிஷத்துக்கள் தெரிவிக்கின்றன.

நாபியில் பிர்மாவுக்கு, அங்கிருந்து அகாரம் எழும்புகிறது. புருவ மத்தியில் ருத்ரனுக்கு இருப்பிடமிருந்து மகாரம் எழும்புகிறது. மூன்றும் ஒன்றாய் சர்வேஸ்வரனை குறிக்கும். இம்மூன்றும் ஒன்றாய் வியாபிக்கும் துவாத சாந்தத்திலிருந்து ஓம் என்று ஒலிக்கின்றன.

திருச்சிற்றம்பலத்தில் சிவபெருமான் தனது நடன பாவனையால் காட்சி அளிக்கின்றான்.

தேக பஞ்சாக்ஷரம் :

நகாரம் பாதமித்யுக்தம் மகாரம் குக்ஷிருச்யதே
சிகாரம் பாஹூமித்யுக்தம் வகாரம் கண்டமுக்யதே
யகாரம் நேத்ரரூபம் ஸ்யாத் தேகபஞ்சாக்ஷரம்
ஸ்மிருதிம்

ந - பாதம், ம - குக்ஷி, சி - வளர்தோள், வா - முகம், ய – முடி
இதையே உண்மை விளக்கத்திலும் காண்க.

இந்த ஐந்து எழுத்துக்கள் எதை குறிக்கின்றது என்பதற்கு

'' நகாரம் திரோதனம் ப்ரோக்தம் மலஞ்சைவ மகாகரம்
சிகாரஞ்ச சிவம் ப்ரோக்தம் வகாரம் சக்திருச்சியதே
யகாரம் ஆத்மாப்ரஈப்தி நமசிவாய வேதமித்தித்யுக்யதே ''

ந - திரோதம், ம - மலம், சி - சிவம், வ - சக்தி,
ய - ஆத்மா உயிர் சம்மேளனம் - நமசிவாய

**சிவரகஸ்ய காண்டத்தில் :**

> " மானஸம் வாசிகம் பாபம் கர்மணை முபார்ஜிதம்
> சிவநாம ஸ்மரனே நைவவ்ய போஹ்யதி நமசம்ஸய "

மனசினுலும், வாக்கினுலும், செயல்களினுலும் மற்றும் எவ்விதமாக சம்பாதிக்கப்பட்ட பாவங்களையும் சிவ என்னும் மந்திரத்தை நினைத்தாலே போக்கிக் கொள்ளப்படுகிறது.

> " நகாரம் ஸ்தாபனம் ப்ரோக்தம் மகாரம் மாரணம் ததா
> ஸான்னித்யம் உச்சாட நேயத்ர ப்ரதமஞ்ச வகாரக :
> யகாரகர்ண வித்வேஷம் சிகாரம் மோஹனம்பவேத்
> நகாரம் பேதனஞ்சாபி வச்யஞ்சேதி வகாரகம் "

சிவ பெருமானின் ஒவ்வொரு அங்கங்களிலும் அமைந்திருக்கின்ற பஞ்சாக்ஷர பேதங்களின் வரிசை; இந்த திருவுருவத்தை பஞ்சாக்ஷர மூர்த்தி என்று வர்ணிக்கப்படுகின்றன.

ஓம் — இதயத்தில்
ந — முகத்தில்
ம — வலது அம்சத்தில்
சி — இடது அம்சத்தில்
வ — வலது தொடையின் அடிபாகம்
ய — இடது தொடையின் அடிபாகம்

ஓம் — கழுத்துக்கு அடிபாகம்
ம — மூலாதாரத்தில்
சி — வலது பாகத்தில்
வ — இடது பாகத்தில்
ய — பின் இடுப்பு பாகம்
ந — ஹ்ருதயத்தில்

ஓம் — அங்கங்கள் சன்னிதியின் முன்பாகம்
வா — முகம்
ய — ஹிருதயத்தில்
ந — உதரம்
ம — வலது பாதம்
சி — இடது பாதம்

ஓம் — நெற்றியின் கீழ் புருவ நடுவில்
சி — சிரசு
வ — முகம்
ய — கண்கள்
ந — வாய்
ம — அங்கங்கள் சன்னிதியின் நுனிபாகம்

ஓம் — ஹ்ருதயம்
ய — இருபுறங்களிலும்
ந — ஹ்ருதயம்
ம — பாதங்கள் இரண்டில்
சி — தொடைகள்
வா — வயிறு

இம்மந்திரங்கள் அங்கங்களுக்கு உணர்ச்சியை தீவிரப்படுத்தும் வகையில் நமக்கு பயன்படுகின்றன.

பஞ்சக்ருத்ய பஞ்சாக்ஷர சக்கரம் - இப்பெருமைகளை தெரிந்து கொள்ள மட்டும் எழுதப்பட்டது.

| ஸ்ருஷ்டிகிரமம் | ஸ்திதிக்ரமம் | ஸம்ஹாரக்ரமம் |
|---|---|---|
| நமசிவாய | மவாயநசி | சியநமவா |
| யநவாசிம | சியநமவா | வாசிமயந |
| மவயாநமசி | வாசிமயந | நமசிவாய |
| சியநமவா | நமசிவாய | யநவாசிம |
| வாசிமநய | யநமவாசி | மவாயநசி |

| திரோதானக்ரமம் | அனுக்ரஹக்ரமம் | யந்திரங்களின் 4 வாசலில் எழுதும பீஜம்: |
|---|---|---|
| வாசிமயந | யநவாசிம | ஓம் ஸ்ரீம் |
| நமசிவாய | மவாயநமசி | ஹ்ரீம் |
| யநவாசிம | சியநமவா | ஸ்ரீம் |
| மவாயநசி | வாசிமயந | |
| சியநமவா | நமசிவாய | |

இதை முறையாக யந்திரமாக அமைத்து அன்புடன் பூசித்தால் நிர்வாக திறமை உண்டாக்கும்.

## ஆன்மாக்களின் உள்ளத்தில் வியாபித்து இயங்குகின்ற பஞ்சாக்ஷரம்

" நகாரம் திரோதனம் ப்ரோக்தம் மலஞ்சைவ மகாரம்
சிகாரஞ்சிவம் ப்ரோத்தம் வகாரம் சக்தி முச்யதே
யகாரம் ஆத்மா சம்ப்ரோப்தி: நமச்சிவாய மித்யுச்சதே "

| | | |
|---|---|---|
| நகாரம் | — | திரோதம் |
| மகாரம் | — | மலம் |
| சிகாரம் | — | சிவம் |
| வகாரம் | — | சக்தி |
| யகாரம் | — | ஆன்மா |
| சம்மேளனம் | — | நமசிவாய |

**அமைப்பு :** ப்ரணவம் - யகாரஷ்டகம் - இகாராதி சோடகம்
அஷ்டகலாப்ரஸாதம் நவாகரி ஸக்திபீஜ ஸஹிதம்

### சிதம்பர சக்கரம்

| | | | | |
|---|---|---|---|---|
| ர்ரு<br>ந<br>ஹ்ரம் | ர்ரு<br>ம<br>ஹ்ரீம் | ல்லு<br>சி<br>ஹேம் | ல்லூ<br>வ<br>ஸ்ரீம் | ஏ<br>ய<br>ஹைம் |
| ஊ<br>ம<br>ஜூம் | வ<br>சி<br>ஹம் | ப<br>வ<br>ஸோ | ஷ<br>ய<br>ஹம் | ஐ<br>ந<br>ஐம் |
| உ<br>சி<br>ஹூம் | ல<br>வ<br>ஸோ | ஓம்<br>ய<br>ஸெள | [illegible]<br>ந<br>ஹம் | ஒ<br>ம<br>ஹோம் |
| ஈ<br>வ<br>க்ரீம் | ர<br>ய<br>ஸ: | ய<br>ந<br>ஹம் | ஹ<br>ம<br>ஸ | ஒள<br>சி<br>க்லீம் |
| இ<br>ய<br>ஹீம் | ஆ<br>ந<br>ஸ்ரீம் | அ<br>ம<br>ஹாம் | அ:<br>சி<br>ஹ்ரீம் | அம்<br>வ<br>ஹௌம் |

இவ்விதம் பூர்து காரணாகமம்.

கர்ப நியாஸவியி வடிவத்தில் சொல்லப்பட்டுள்ளது. இம்மாதிரி சக்ரம் அமைத்து கோயில் கர்ப்பகிருஹம், மண்டபம், கோபுரம் அடி பாகம், அரண்மனை, வீடு, நீதி நிர்வாக சபை, கிராமம், பட்டணம், நகரம், கிழக்கு முகம். வாசலுக்கு உள்ளே கிழக்கு முகமாக நின்று அமைக்க வேண்டும் நடுமத்தியிலும் அமைப்பது உண்டு.

இந்த சக்கரத்தின் அடியில் 25 அறையுள்ள ஏதேனும் பெட்டி ஒன்று தயாரித்து, நவ தாது, நவதான்யம், நவலோகத்தில் நவ மிருத்திகை, நவ மூலிகைகள் அமைக்கவும்.

அஷ்டநாகம், கூர்மம், அஷ்டகஜம், அஷ்டலக்ஷ்மி, அஷ்டமங்களம் ஸ்தாபனம் சொல்லப்பட்டுள்ளது. ஜபம், ஹோமம் முதலியவைகளை முறையாக செய்து வைக்க வேண்டும். ஒன்பது உலோகங்களில் தானிய உருவமாக எந்த தான்யதை எந்த உலோகத்தில் செய்ய வேண்டும் என்பதும் சிவாகமத்தில் கூறப்பட்டுள்ளது.

## இது சிதம்பர சக்கர பஞ்சாக்ஷரம்

| ந<br>சப்தம் | ம<br>ஸ்பர்சம் | சி<br>ரூபம் | வ<br>ரசம் | ய<br>கந்தம் |
|---|---|---|---|---|
| சி<br>ரூபம் | வ<br>ரசம் | ய<br>கந்தம் | ந<br>சப்தம் | ம<br>ஸ்பர்சம் |
| ய<br>கந்தம் | ந<br>சப்தம் | ம<br>ஸ்பர்சம் | சி<br>ரூபம் | வ<br>ரசம் |
| ம<br>ஸ்பர்சம் | சி<br>ரூபம் | வ<br>ரசம் | ய<br>கந்தம் | ந<br>சப்தம் |
| வ<br>ரசம் | ய<br>கந்தம் | ந<br>சப்தம் | ம<br>ஸ்பர்சம் | சி<br>ரூபம் |

இவ்வகையான மந்திரங்களில் மிகவும் ரகஸ்யமாகவும், மாணிக்க மாகவும், ஜாக்ரதையுடன் புருவ மத்தியில் யோகநிஷ்டையில் ஜோதிர் மயமாய் காணப்படும் ஸ்ரீதாண்டவேஸ்வரனைப் பார்த்துக் கொண்டு இம்முக்யமான முறை தெரிந்து உணர்ந்து ஜபிக்க தானும் தாண்ட வேஸ்வரராய் அமைந்திருக்கச் செய்யும் என்பதாம்.

மேலும் "நெஞ்சம் உமக்கேயிடமாக வைத்தேன்" என்னும் தேவார பாடல்படி பஞ்சாக்ஷரத்தை சிவனிடத்தில் பெற்று சிவனிடத் தில் சேர்ப்பதால் சிவானந்த நிலை கிடைக்கும்.

இம்மந்திரத்தை பயன்படுத்தியவர்கள் இராவணன், இரண்யன், இரண்யாக்ஷன், தக்கன், சூரபதுமன் முதலியவர்கள். சிவனருள் பெற்றும் பயமின்றி வாழ்ந்தார்கள் என்பது ஆகும்.

## பஞ்சாக்ஷர சக்கரம்

| வ<br>ஹ்ரீம் | ய<br>க்லீம் | ந<br>ஐம் | ம<br>ஸௌம் | சி<br>ஸ்ரீம் |
|---|---|---|---|---|
| ய<br>க்லீம் | ந<br>ஐம் | ம<br>ஸௌம் | சி<br>ஸ்ரீம் | வ<br>ஹ்ரீம் |
| ந<br>ஐம் | ம<br>ஸௌம் | சி<br>ஸ்ரீம் | வ<br>ஹ்ரீம் | ய<br>க்லீம் |
| ம<br>ஸௌம் | சி<br>ஸ்ரீம் | வ<br>ஹ்ரீம் | ய<br>க்லீம் | ந<br>ஐம் |
| சி<br>ஸ்ரீம் | வ<br>ஹ்ரீம் | ம<br>க்லீம் | ந<br>ஐம் | ம<br>ஸௌம் |

இம்முறை சித்தர்கள், யோகிகள், ஞானிகள் அனுபவித்து பயன் பெற்றதாகும். கண்முன் வைத்து பூசிக்கதகும். ஆயினும் பீடத்தில் வைக்க ஆகம முறையில் அமைக்க வேண்டும்.

**கட்டங்கள் விளக்கம் :**

| | | | |
|---|---|---|---|
| 1) | சதுரஸ்ர கட்டம் | — பார்த்வம் | — பூ மண்டலம் |
| 2) | அர்த்த சந்திரன் கட்டம் | — அப்யம் | — அப்பு மண்டலம் |
| 3) | முக்கோணம் | — அக்னி (தேயு) | — நெருப்பு மண்டலம் |
| 4) | அறுகோணம் | — வாயு | — காற்று மண்டலம் |
| 5) | வட்டம் | — வியோமம் (ஆகாசம்) | — ஆகாச மண்டலம் |

மேலும் பஞ்சாக்ஷரத்தில் பல்வகைகள் சொல்லப்படுகிறது. அவை:

1) மோக்ஷ ப்ரதான பஞ்சாக்ஷரம் — ஓம்சிவாய — ஓம் முன்னும் பீஜங்கள் பின்னும் நடுவில் பஞ்சாக்ஷரம்

2) மற்றொரு வகை பஞ்சாக்ஷரம் — ஓம்சிவ — மாறுருபிட்ட அக்ஷர பஞ்சாக்ஷரம்

3) த்வனி பஞ்சாக்ஷரம் — 23 அக்ஷரங்கள் சேர்ந்த பஞ்சாக்ஷரம் 'சிவசிவ சரணம் சிவானந்தம் சிவசிவ சிவாய சிவாயநம'

4) பிரயோகி பஞ்சாக்ஷரம் விவரம்: — ஆகர்ஷண பஞ்சாக்ஷரம்
— ஸ்தம்பன பஞ்சாக்ஷரம்
— மோஹன பஞ்சாக்ஷரம்
— ஸம்ஹார பஞ்சாக்ஷரம்
— உச்சாடன பஞ்சாக்ஷரம்
இதற்கு தாண்டவேஸ்வரம் பஞ்சாக்ஷரம்

5) ஐஸ்வர்யம் தரும் பஞ்சாக்ஷரம் — பீஜம் ஓம் நமசிவாய பீஜம் சக்தி பஞ்சாக்ஷரம்

6) சைவாஷ்டாக்ஷர மந்த்ரம் — இதுவும் ஐஸ்வர்ய பலனை தரும் ஓம் ............ நமசிவாய
பீஜம்

7) பிரஸித்தி பஞ்சாக்ஷரம் — இது அமைதியையும், முக்தியும் தர வல்லது. தேவையை சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். ஓம் நமசிவாய

8) சிவப்ரஸாத பஞ்சாக்ஷரம் — 10 அக்ஷரங்கள்

9) பஞ்சகலா ப்ராஸாத பஞ்சாக்ஷரம் — 5 அக்ஷரங்கள்

10) அஷ்டகலா பிராஸாத பஞ்சாக்ஷரம் — 8 அக்ஷரங்கள்

11) த்வாதஸகலா பிராஸாத பஞ்சாக்ஷரம் — 12 அக்ஷரங்கள்

12) ஷோடகலா பிராஸாத பஞ்சாக்ஷரம் — 16 அக்ஷரங்கள்

(இவைகள் ஆசார்யாபிஷேகம் பெற்ற சிவாச்சார்யர்களுக்கு உபதேசிக்கப்பட்டது. ஆத்மார்த்த பரார்த்த பூஜைக்குரியவர்களுக்கு மட்டும் வழங்கியது)

13) சக்திபிரஸாத பஞ்சாக்ஷரம் — 10 அக்ஷரங்கள் கூடிய பஞ்சாக்ஷரம்
8 அக்ஷரங்கள் கூடிய பஞ்சாக்ஷரம்
8 பீஜாக்ஷரம் மாறுதல் உடைய பஞ்சாக்ஷரம்
10 பீஜாக்ஷரம் மாறுபாட்டுடன் கூடிய பஞ்சாக்ஷரம்

பூரண பயன் அடைய இந்த மந்திரங்களை பல மூலிகை திரவியங்களை கொண்டு முறையாக ஜபிக்க வேண்டும். 10ல் 1 பங்கு ஹோமம் செய்ய வேண்டும். அதன் விதி முறைகளை ஆகம வித்வான்களை கொண்டு பயன் அடையலாம்.

| மந்த்ரம் | அங்கம் | கிருத்யம் | சாதாக்யம் | தேவதை | சந்தசு | சக்தி | முகம் | பொருள் | தத்துவம் | விஷயம் | நிறம் | கலை | மூர்த்தி | மூர்த்தி சக்தி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ந | அக்னி ஹஸ்தம் | சங்காரம் | கர்ம சாதாக்யம் | மகேஸ்வரன் | ருக் வேதம் | கிரியா சக்தி | சத்யோ ஜாதம் | மலம் | பிருத்வி | கந்தம் | மஞ்சள் | நிவிருத்தி கலை | பிர்மா | சரஸ்வதி |
| ம | ஊன்றிய பாதம் | திரோபாவம் | கிர்த்திரு சாதாக்யம் | சிவன் | யஜுர் வேதம் | ஞான சக்தி | வாம தேவம் | திரோதாயி | அப்பு | இரசம் | வெண்மை | பிரதிஷ்டை கலை | விஷ்ணு | லக்ஷ்மி |
| சி | துடியேந்திய கரம் | சிருஷ்டி | மூர்த்தி சாதாக்யம் | வித்தை | சாம வேதம் | இச்சா சக்தி | அகோரம் | சிவம் | தேயு | ரூபம் | சிவப்பு | வித்யா கலை | ருத்ரன் | ருத்ராணி |
| வா | தூக்கிய பாதம் | அனுக்ரகம் | அமூர்த்தி சாதாக்யம் | ஆத்மா | அதர்வன வேதம் | ஆதி சக்தி | தத்புருஷம் | அருள் | வாயு | ஸ்பர்ஸம் | புகை | சாந்தி கலை | மகேஸ்வரன் | மகேஸ்வரி |
| ய | அமைந்த கரம் | ஸ்திதி | சிவ சாதாக்யம் | பரம சிவம் | சர்வ வேதம் | பரா சக்தி | ஈசானம் | ஆன்மா | ஆகாயம் | சப்தம் | நீலம் | சாந்தியதீத கலை | சதா சிவன் | மனோன் மணி |

ஸ்ரீ பஞ்சாக்ஷரங்களின் உருவம் ஸ்ரீ தாண்டவேஸ்வரன் வடிவத்தில் அமைந்துள்ளது என்றும், அக்ஷரங்களின் பஞ்ச கிருத்யம், சிவ்சக்தியின் தத்துவங்கள் முதலான விவரங்களின் தத்துவங்களின் அட்டவணை.

பஞ்சாக்ஷரங்களின் பயன்களைப் பெறுவதற்கு அநேக பீஜாக்ஷரங்களை சேகரித்து ஜபிக்க வல்லது. இதற்கு நியாஸம், தியானம் யாவும் உண்டு.

## ஆதிசங்கரர் வாக்கில் பஞ்சாக்ஷரம்:

ஆதிசங்கரர் பஞ்சாக்ஷர வடிவத்தில் நமசிவாய என்று துதிக்கின்றார்.

1. நாகேந்திர ஹாராய த்ரிலோசனாய
   பஸ்மாங்க ராகாய மகேஸ்வராய
   நித்யாய சுத்தாய திகம்பராய
   தஸ்மை நகாராய நம: சிவாய

2. மந்தாகினிஸலில சந்தனசார் சார்சிதாய
   நந்தீசுவர ப்ரமத மகேஸ்வராய
   மந்த்ரபுஷ்ப பஹுபுஷ்பஸு பூஜிதாய
   தஸ்மை மகாராய நம: சிவாய

3. சிவாய கௌரீவதனப் யைவிருந்த
   சூர்யாய தக்ஷாத்வர நாசகாய
   ஸ்ரீ நீலகண்டாய வ்ருஷத் வஜாய
   தஸ்மை சிகாராய நம: சிவாய

4. வசிஷ்ட கும்போத்பவ கௌதமார்ய
   முனிந்த்ர தேவார்ச்சித சேகராய
   சந்த்ரார்க் வைஸ்வா நரலோசனாய
   தஸ்மை வகாராய நம: சிவாய

5. யக்ஷஸ்வ ரூபாய ஜடாதராய
   பினாக ஹஸ்தாய சனாதனாய
   திவ்யாய தேகாய திகம்பராய
   தஸ்மை யகாராய நம: சிவாய

### சிவ பஞ்சாக்ஷர பயன்கள்:

பஞ்சாக்ஷரம் இதம்புண்யம்
ய: படேத் சிவசன்னிதௌ
சிவலோகம் வாப்னோதி
சிவேன ஸஹமோத்தே

பஞ்சாக்ஷர ஜபம் புண்யம் தரும். அது சிவ சன்னிதி தரும். சிவ லோகம் அழைத்துச் சென்று சிவனுக்கும் தன்மையை கொடுக்கும்.

மற்றும் சிவ பஞ்சாக்ஷர மகிமைகளைப் பற்றி ஏனைய சிவாகமங் களிலும், புராண இதிகாசங்களிலும் விரிவாக கூறப்படுகின்றன.

## திருப்புகழில் பஞ்சாக்ஷரம்

அருணகிரிநாதர் அருளிய திருப்புகழில் பஞ்சாக்ஷரம் பல இடங்களில் காணப்படுகிறது.

### ஓம்காரம் : (ஓங்காரம்)

''பழைய மறையின் முடிவில் அகர மகர உகர
படிவ வடிவம் — உடையோனே''

என்று ஓம்காரத்தை சொல்லி முருகப் பெருமான் ஓம்காரத்தையே வடிவமாக உடையவன் என்று இத்திருப்புகழில் அருளுகிறார்.

### பஞ்சாக்ஷரம் :

திருப்புகழ் திருமுருக கிருபானந்தவாரியார் புத்தகம் (1965)

''நகாரமிருபாதமாகி மகரவயிறாகி மார்பு
நடுசிகரமாகி வாய் வகரமாகி
நதிமுட யகரமாகி உதய திருமேனியாகி
நமசிவாய மாமையாகி — எழுதான''

இறைவன் ஐந்தெழுத்து வடிவானவன்.

நகரம் — இரு பாதம்
மகரம் — வயிறு
சிகரம் — மார்பு நடு
வகரம் — வாய்
யகரம் — முடி

உண்மை விளக்கத்திலும் காண்க.

இறைவனின் ஊன நடனத்தை குறித்து பாடுகின்றார்.

''ஒருவரையும் ஒருவர் அறியாமல்'' என்னும் திருப்புகழில்

''சிவயநம நமசிவய காரணன் சுரந்
தமுதனைம அருளி எமையாளும் எந்தைதன்
திருவுருவின் மகிமெளனது தாய்பயந்திடும்—புதல்வோனே''

முருகப் பெருமான் சிவ பெருமான் நெற்றிக் கண்ணில் இருந்து தோன்றியதால் அவரை சிவபெருமான் புதல்வன் என்று கருதி புதல்வோனே என்று அருளுகிறார்.

இதில் 'சிவயநம' சூக்ஷ்மபஞ்சாக்ஷரத்திற்கும் 'நமசிவாய' என்னும் தூல பஞ்சாக்ஷரத்திலும் சிவபெருமான் கர்த்தாக இருப்பதால் காரணன் என்கிறார்.

" அவாமறு விநாவசு " என்னும் திருப்புகழில்

> " சிவாயநமெனு நாமமொருகாலு நினையாததி
> மிராகரனை வாவென் றருள்வாயே
> திரோதமல மாறுமடியார் களருமாதவர்
> தியான முறுபாதந் — தருவாயே "

என்று அருளுகிறார்.

' சிவாய ' எனும் நாமத்தை ஒருகாலும் நினைக்காத என்னை வாவென்று அருள்வாய் அதை தியானம் செய்து திரோதமலம் அறும்படியாக ஆக்கி உன் பாதம் தருவாயே.

திரோதமலம் — நகாரம்

> சிகரமருந்து வாழ்வது — சிவஞானம்
> சிதறியலைந்து போவது — செயலாசை
> மகர நெருங்க வாழ்வது — மகமாய
> மருவி நினைந்திடாவருள் — புரிவாய

சிகாரத்தை உணர்ந்து சபித்தால் சிவஞானம் கிட்டும்; அதனல் செயலாசை சிதறி அலைந்துபோம்; மகரம் நெருங்கினுல் மகமாய வீழ்த்தும்; எனவே மகரம் மருவி நினைக்காமல் இருப்பதற்கு அருள் புரிவாயே.

மகரம் - மலம் — ஆணவமலம்

ஆணவம் மருவி யான், எனது என்று எண்ணுமல்
இருப்பதற்கு அருள்வாயே.

' இகல வருதிரை பெருகிய சலநிதி ' என்ற திருப்புகழில் :

> அகரதி உகரதி மகரதி சிகரதி
> யகர அருளதி தெருளதி வலவல
> அரண முரணுறும் அசுரர்கள் கெடஅயில் — விடுவோனே

என்று அருளுகிறார்.

அகரம் — அ
உகரம் — உ
மகரம் — ம்

} ஓம்காரத்தைக் கொண்டு சிவாயநம எனப்படுகிறது.

சிகரம் — சி யகரம் — உயிர் அருளதி — வா தெருள் — நம

'இருவினை அஞ்ச வருவினை கெஞ்ச' என்னும் திருப்புகழில்

> ' சிவசிவ என்று தெளிவுறு நெஞ்சு
> திகழ் நடஞ்செய் — கழல்தாராய்.'

சிவசிவ என்று காரண பஞ்சாக்ஷரத்தை செபித்து உணர்ந்து தெளிவுறும் நெஞ்சில் அற்புதமான நடனம் செய்தும் நின்தாள்கள் தருக.

'கருவினுருவாகி வந்து' என்னும் திருப்புகழில்

'அரகர சிவாயவென்று தினமும் நினையாமல் நின்று
அறுசமய நீதியொன்றும் — அறியாமல்' - என்றும்,

'வருபவர்கள் ஓலை கொண்டு' என்னும் திருப்புகழில்

'அரகர சிவாய சம்பு குருபர குமார நம்பும்
அடியர்தமை ஆளவந்த பெருமாளே' — என்றும்,

'அவகுண விரகனை' என்னும் திருப்புகழில்

'சிவசிவ ஹரஹர தேவா நமோநம
தெரிசன பரகதியானாய் நமோநம
திசையினும் இசையினும் வாழ்வே நமோநம' — என்றும்,

'சூதினுணவாசை தனிலே' என்னும் திருப்புகழில்

'ஓநமசிவாய குருபாத மதிலே பணியும்
யோகமயி லாவமலை — மகிழ்பாலா' — என்றும்,

'அழுது அழுது ஆசார' என்னும் திருப்புகழில்

'— சீகாழி மாமுனி
சிவசிவ மாதே வகாவென — வந்துபாடும்' — என்றும்,

'எந்த திசையினும்' என்ற திருப்புகழில்

'சந்தித்தர ஹரஹர சிவசிவ சரணென
கும்பிட்டிணையடி அவையென தலைமிளச
தங்கப் புளகிதமெழ இருவிழிபுனல் — குதிபாய' — என்றும்,

'குகனே குருபரனே' என்னும் திருப்புகழில்

'கொடிய இருவினை மூலமும் வஞ்சக்
கலிகள் பிணியிவை வேரொடு சிந்திக்
குலையநமசிவாய ஓம்என கொஞ்சிக்குலவி — களிகூரும்'
— என்றும்,

'புமியதனிற் ப்ரபுவான' என்னும் திருப்புகழில்

'குழக சிவசுத சிவய நமவென
குரவணருள் குரு — மணியேயென்' — என்றும்

பலவாறாக பஞ்சாக்ஷரங்களைப் பற்றி பாடியருளியுள்ளார்.



அத்தியாயம் – 15

# பஞ்சாக்ஷர சக்கரங்கள்

திருமூலர் திருமந்திரத்தில் சக்கரங்கள் அமைத்து பூஜை செய்தும் தியானமும் ஜபமும் செய்ய பலவித சக்கரங்களைப் பற்றி அருளுகிறார். அதில் பஞ்சாக்ஷரங்களை கொண்டு அமைக்கும் சக்கரங்களைப் பற்றி இங்கு சிந்திப்போம்.

திருமந்திரம் - 884: திருவம்பலமாக சீர்சக்கரத்தைக்
திருவம்பலமாக ஈராறுகீறித்
திருவம்பலமாக இருபத்தைஞ்சாக்கித்
திருவம்பலமாக ஜபிக்கின்றவாறே

திருவம்பல சக்கரத்தை நீட்டத்தில் ஆறுவரையும், குறுக்கே ஆறு வரையும் கீறினால் இருபத்தி ஐந்து அறைகள் உண்டாகும். அவ்விருபத்தி ஐந்து அறைகளில் திருவைந்தெழுத்தையும் முறையாக அமைத்து அவற்றை கணித்தல் வேண்டும்.

கணித்தல் — செபித்தல் ஈராறு — குறுக்கு ஆறுவரை - நெடுக்கு ஆறுவரைகீற திருவம்பல சக்கரமாம்
இருபத்தஞ்சாக்கி — இருபத்தி ஐந்து அறைகளாக்கி
திருவம்பலமாக செபிக்கின்றவாறே — பஞ்சாக்ஷரங்களை மறியிட்டுச் சிற்றம்பலச் சக்கரமாக கொண்டு செபிக்கின்ற விதம்

திருமூலர் திருமந்திரம் 4ம் தந்திரம் திருவம்பல சக்கர பகுதியிலே திருவைந்தெழுத்துக்களை சக்கர (யந்திர) வடிவில் அமைத்து வழிபடுவது பற்றி அருளுகிறார். இதைத்தான் திருவம்பல சக்கரம் என்பர். பஞ்சாக்கரத்துக்கு அமைந்த சக்கரங்கள் பல. அவற்றுள் திருவம்பல சக்கரம் என்பது, சிதாகாச பெருவெளியிலே ஆனந்த கூத்தாடும் அம்பலவாண பெருமான் அருள் சக்தியோடு மந்திர வடிவம் ஆய் நின்று நிலவும் யந்திரம்; அவரவர்கள் பக்குவத்திற்கேற்ப வழிபட்டு பயன் அளிக்கும். எனவேதான் திருமந்திரத்தில் அசபைக்குப் பின் மந்திரத் தலையாகிய திருவம்பல சக்கரம் அமைந்துள்ளது.

திருமந்திரம் : இருந்த வில்வளிடங்க ளீராறிரேகை
இருந்த விரேகை மேலிராறித்தி
இருந்த மனைகளுமீரறு பத்தொன்று
இருந்த மனையொன்றில் எய்துவன்தானே

இதில் திருவம்பல சக்கரம் அமைப்பதைப் பற்றி அருளுகிறார். இருந்த இடத்தில் இச்சக்கரங்களாகிய வட்டங்கள் பன்னிரண்டு கோடுகளை குறுக்கும் நெடுக்குமாய் அமைத்து நூற்றி இருபத்தோரு மனைகளாக்க அதன் நடு மனையில் சிவன் எய்துவன் என்றவாறு, சிவன் என்பது சிவாக்கரமாகிய சிகரம் என்பது.

ஈராறு ரேகை — பன்னிரண்டு கோடு　　மனே — கட்டம்
ஈராறு பத்தொன்று — பன்னிரண்டும், பதினொன்றும்

திருமந்திரம் - 915 (திருவாவடுதுறை பதிப்பு)

தானொன்றி வாழிடத் தன்னெழுத்தேயாகும்
தானொன்றும் அந்நான்கும் தன்பேசெழுத்தாகும்
தானொன்று நாற்கோணம் தன்ஐந்தெழுத்தாகும்
தானொன்றிலே யொன்று மவ்வான்றுனே

சிவனுக்கு உரிய எழுத்து சிகரமாகும். அது ஒன்றுதலுக்கு இடமாயிருக்கும். வ ய ந ம என்னும் மற்ற நான்கெழுத்துக்களும் பேசம் எழுத்துக்கள் ஆகும்.

சக்கரத்தில் சிவம் எங்குமாயும் ஓரிடத்தும் ஒன்றியிருக்கும். பின் எல்லாமாயும் எங்குமாயும் இருக்கும் என்னும் தன்மையை உணர்த்துகிறது.

| சி | வ | ய | ந | ம | சி | வ | ய | ந | ம | சி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | வ |
| ந | ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ம | ய |
| ய | ம | ந | ய | ய | ய | ய | ய | ந | ம | ந |
| வ | ம | ந | ய | வ | வ | வ | ய | ந | ம | ம |
| சி | ம | ந | ய | வ | சி | வ | ய | ந | ம | சி |
| ம | ம | ந | ய | வ | வ | வ | ய | ந | ம | வ |
| ந | ம | ந | ய | ய | ய | ய | ய | ந | ம | ய |
| ய | ம | ந | ந | ந | ந | ந | ந | ந | ம | ந |
| வ | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம | ம |
| சி | ம | ந | ய | வ | சி | ம | ந | ய | வ | சி |

ஒன்றி வாழிடம் — நடு தன்னெழுத்து — சி

தானென்றும் அந்நான்கு — நடுவில் நிற்கத் தனக்கு நேராக நான்கு திசை

தன்பேரெழுத்து — சி

தானென்றும் நாற்கோணம் — கோணத்திசை நான்கு

தன் ஐந்தெழுத்து — சிவயநம

திருமந்திரம் :

> மகார நடுவே வளைந்திடும் சத்தியை...
> ஒகாரம் வளைந்திட்டு உம் பிளந்தேற்றி
> அகாரம் தலையாய் இருக்கண் சிகரமாய்
> நகார உகார நற்கால்வது நடுமே

திருவம்பல சக்கரத்தில் கூத்தனை மந்திர புருஷனாக காணும் முறையைக் கூறுகிறது. மகாரத்தை நடுவே வளைந்துள்ள பீஜத்தை ஒகாரம் வளைந்து மகரத்தை உகரத்தால் பிளந்து மேலேற்றி யகாரம் தலையாகவும், சிகாரம் இரண்டு கண்களாகவும், நகாரம் மகாரம் இரண்டு கால்களாகவும் நாடுக என்பது.

அ - உ - ம் - ஓம் நமசிவாய என்ற தார பஞ்சாக்கரம் இதில் இருப்பதை காண்க.

மகாரம் — நாதம்

சக்தி — சக்தி பீஜம்

ஒகாரம் வளைந்திட்டு — ஓம் எழுதி

உம் பிளந்து — உம் என்பதை நீக்கு

அகாரம் தலையாக — அகாரம் சிரஸாக

இரு கண்கள் — சிகாரம் இரு கண்களாய்

நகாரம் வகாரம் — கால்களாய்




"தத்ரோன்னமஸ் சிவாயேதி தாரபஞ்சாக்ஷரம் பவேத்"

என்பது சித்தாந்த போதம்.

இது சிதம்பர சக்கர நடுவில் ஈசனை மனித உருவில் காணும் முறை கூறியது. தலை கண்கள் முதலிய உறுப்புகளோடு அமைந்த ஒரு மனித வடிவமாக தோன்றும் முறை. திருமூலர் ஓங்கார நடுவில் சிவமும், நடுவட்டத்தில் நமசிவாயமுமாக வருணிக்கிறார்.

நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடுமவர்வாய் அமர்ந்து அங்கு நின்றது
நாடு நடுவுள் முகநம சிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே

இதன்கண் நடுவில் ஓங்கார நடுவில் சிவமும், நடுவட்டத்தில் நம சிவாய முகமாக அமைத்தல் ஓதப்படுகிறது.

இதைத் திருத்தாண்டகம் திருப்பதிகத்தில்

'ஒருசுடராய் உலகேழு மானுன் கண்டாய்
ஓங்காரத்துட் பொருளாய் நின்றுன் கண்டாய்'

என்று அருளப்படுகிறது.

பிரணவ நடுவில் நடுவிரு பக்கம் — பிரணவ நடுவில் இரு பக்கத்திலும்
ஆடுமவர் — திருக்கூத்து புரியும் சக்தி சிவங்களின்
ஆடும்வாய் — பேசும் வாய்
நடுவுள் — நடு வட்டத்தில்
முகம் நமசிவாய — நமசிவாயம் என்பது முகமாக
புற வட்டம் — மேல் வட்டம்

ஓங்காரத்தைப் பற்றி மேலேகண்ட அத்தியாயத்தில் காண்க.



திருமந்திரம் - 923 (திருவாவடுதுறை தருமையாதீனம் வெளியீடு)

ஆயுஞ் சிவாயநம மசிவாயந
ஆயும் நமசிவாய யநமசிவா
ஆயுமே வாயநமசியெனும் மந்திரம்
ஆயும்சிகாரம் தொட்டந்தத் தலைவிலே

ஆராயப்பெற்ற சிவாயநம - சிகரம் முதலாக சிகரம் ஈறாக முடியும்; சிவாயநம, மசிவாயந, நமசிவாய, யநமசிவ, வாயநமசி என்ற சிகாரம் தொட்டு சிகாரம் ஈறுக முடியும். சிவாயநம என்பதை ஐந்து, நான்கு, மூன்று, இரண்டாம் எழுத்துக்களையும் முறையே முதலில் வைத்து ஏனைய எழுத்துக்களையும் முறையாலே சக்கர அறைகளில் பொறிக்கச் சிகாரமே முதலில் தொடங்கி முடிவாக முடியும். இதுவும் ஒரு திருவம்பல சக்கரம். அச்சக்கரம் ஆமாறு :

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| ம | சி | வா | ய | ந |
| ந | ம | சி | வா | ய |
| ய | ந | ம | சி | வா |
| வா | ய | ந | ம | சி |

ஐந்தெழுத்து பேதங்கள் பலவும் இதில் அடங்கியுள்ளது. இதனுல் இதை மற்றும் ஒருவகை திருவம்பல சக்கரம் என கூறப்பட்டுள்ளது.

இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்
செயலும் அறியத் தெளிவிக்கும் நாதன்
புயலும் புனலும் பொருந்தங்கி மண்விண்
முயலும் எழுத்துக்கு முன்னை இருந்ததே

ஐந்தெழுத்துக்கு முன் பஞ்ச பூத பீசங்கள் இயையும் முறையை உணர்த்துகிறது. ஐந்தெழுத்து மந்திரம் பயன்தரும் வழியின் கிரியை களை குருநாதன் தெரிவிப்பார்.

| ஐந்து பூதங்கள் | பீசங்கள் |
|---|---|
| காற்று | யம் |
| நீர் | வம் |
| தீ | ரம் |
| மண் | ஸம் |
| விண் | ஹம் |

ஆகிய ஐந்து பூதங்களுக்கும் மேற்கூறிய விதம் பீசங்கள் உரியவாகிய முயலும் எழுத்துக்கு முதலாக இருந்தது.

முயலும் எழுத்து — சிவாயநம

சிவாயநம என்பதற்கு முன் ஹம் என்ற ஆகாய பீசமும்
மசிவாயந என்பதற்கு முன் யம் என்ற வாயு பீசமும்
நமசிவாய என்பதற்கு முன் ரம் என்ற அக்னி பீசமும்
யநமசிவா என்பதற்கு முன் ஸம் என்ற . பிருத்வி (மண்) பீசமும்.
வயநமசி என்பதற்கு முன் வம் என்ற அப்பு (நீர்) பீசமும்
சேர்க்க எனப்படுகிறது.

விளக்கம் : உண்மை விளக்கம் 6ம் வெண்பாவில் கண்டும், சித்தியார் இரண்டாம் சூத்திரம் 67ம் திருவிருத்தம் கண்டும் தெளிக.

'ஆறெட்டெழுத்தின் மேலாறும் பதினலும்' ... திருமந்திரம் மலநீக்கம் செய்யும் திருவைந்தெழுத்து என்று உணர்த்திற்று.

நாற்பத்தெட்டாம் எழுத்தாகிய 'ஸ' என்பதன் மேல் ஆறும் எழுத்தாகிய 'ஊ'காரத்தையும், பதினலாம் எழுத்தாகிய 'ஔ'காரத்தையும் ஏறிட்டு அதன் மேல் விந்துவாகிய '(O)' அனுஸ்வரத்தையும், நாதமாகிய '( : )' விசர்க்கத்தையும் கூட்டிச் சீறவிட்டு நிலை பெற்று சிவாயநம என்று செபிக்க மும்மலங்களும் பிளந்து கூவிக்கொண்டு ஓடும். 'ஓம் ஸூம் ஸௌ: சிவாயநம' எனச் செபிக்க மலங்கள் அகலும்.

திருமந்திரம் (திருவா பதிப்பு) பாட்டு - 932

அவ்விட்டு வைத்தங் காவிட்டு மேல்வைத்து
இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கமதாய் நிற்கும்
அவ்விட்டு மேலே வலியுறக் கண்டபின்
தொம்மிட்டு நின்ற சுடர்க் கொழுந்தாமே




அகர எழுத்தை பீடமாக இட்டு, ஹர என்ற எழுத்தை அதன் மேலே வைத்து, அதற்கு மேல் சிகாரத்தை இட்டுப் பார்த்தால் இலிங்க வடிவாக இருக்கும். அகாரத்தினை கபாலத்தில் பிராண வாயு வோடு பொருந்தச் செய்து தகராகாயத்தில் பிரணவ வடிவாய் சுடர் கொழுந்தாய் விளங்குகின்ற சிவம் வெளிப்படும்.

அஞ்செழுத்தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத்தாலே அமர்ந்த பஞ்சாக்கரம்
அஞ்செழுத்தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத்துள்ளே அமர்ந் திருந்தானே

இறைவன் அஞ்செழுத்தாகிய மந்திரமே வடிவாக அமர்ந்திருந் தனன். ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் ஐந்தெழுத்தாலேயே அமைந்தது.

ஐந்தெழுத்து அக்கரங்கள் அடைப்பட்ட சக்கரத்துள் ஐந்தெழுத்து அக்கரங்கள் அஞ்செழுத்தையே திருமேனியாகக் கொண்டு அமர்ந்திருந் தனன். ஸ்ரீ பஞ்சாக்ஷரமே சிவன் திருமேனி. ஸ்ரீ பஞ்சாக்கரம் அடைக்கப் பட்ட யந்திரமும் சிவன் சொரூபமே என்பதை உணர்த்துகிறது.

கூத்தனை காணும் குறிபல பேசிடின்
கூத்தன் எழுததின் முதலெழுத் தோதினுர்
கூத்தனே டொன்றிய கொள்கையராய் நிற்பர்
கூத்தனை காணுங் குறியதுவாமே

கூத்தப் பெருமானை தரிசிக்கும் அடையாளங்களைப் பேசினுல் கூத்தன் எழுத்தாகிய ஸ்ரீபஞ்சாக்கரத்தில் முதல் எழுத்தை ஓதியவர்கள் அச்சிவத்துடன் அநந்ய பாவமாக (ஒன்றியவராய்) நிற்பர். இதுவே கூத்தனை காணும் உபாயம்.

பிரணவத்தோடு கூடிய சிபஞ்சாக்கரமே திருவாசியோடு கூடிய ஆனந்த கூத்தனின் அரனுரு என்றும், முதலெழுத்தாகிய சிகாரமே அவனுக்குரியதாய் ஒன்றி நிற்பது என்றும் அறிவிக்கப்படுகிறது. முதலெழுத்து ஓதினுர் என்றது, சிகாரத்தை ஓதாது மகாரத்தையும் சேர்த்து சிம் என்று ஓதினுல் என்பது. சிம் என்று ஓதுதல் கும்பக முறையாகும்.

மறையவனுக மதித்த பிறவி
மறையவனுக மதித்திட காண்பர்
மறையவன் அஞ்செழுத்துண் ணிற்கப்பெற்ற
மறையவன் அஞ்செழுத்தா மதுவாகுமே

சிவன் கொடுத்த இப் பிறவியிலே சிவமாந் தன்மையை எய்துக என்புதை உணர்த்துகிறது. ஆதி மறையவனுகிய சிவ பரம்பொருள் தானுகவே கொடுத்த இப்பிறவியை சிவஞானம் பெற்றவராக எல்லோரும் மதிக்க காண்பர். மறையவனுகிய திருவைந்தெழுத்துள் இருக்கப் பெற்ற மந்திர வடிவனுக அஞ்செழுத்து விளங்கும். அந்த அஞ்செழுத்து சிவ பரம்பொருளாகிய அதுவேயாகும். இறைவன் நம் வினைக்கு ஏற்றவாறு இப்பிறவியை தந்தார். இப்பிறவியிலேயே நாம் மெய்ஞானம் பெறுதல் வேண்டும். திருவைந்தெழுத்தோதுவார் சிவமேயாவார்.

ஆகின்ற பாதமு மந்தவாய் நின்றிடும்
ஆகின்ற நாடியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீயிருதோள் வவ்வாய் கண்டபின்
ஆகின்ற அச்சுட ரல்லியல் பாமே

இறைவன் திருவடிகள் இரண்டும் நகாரமாய் நிலை பெறும். நாபி சுழியின்ளவ்விடத்தே மகாரம் பொருந்தும். இரு தோள்களும் சிகாரம் ஆகும். வாய் வகாரம் ஆகும். திருமுடிக்கண் விளங்குகிற அச்சுடர் யகாரத் தன்மையை உடையது.

பரமாய அஞ்செழுத்துள் நடுவாகப்
பரமாய நவசிவபார்க்கில் மவயநசி
பரமாய சியநமவாம் பர்த்தோனிற்
பரமாள வாசிமயநமாய் நின்றே

மேற்படி சக்கரத்தில் ஐந்தெழுத்து நிற்கும் முறை; சூக்கும அஞ்சுசழுத்துள் நடுவாக விளங்கு யகரம் முதலாக யநவசிம என்றும் பார்க்கில் மயவநசி, சியநமவ, வசிமயந என நின்று மேலான நிலையை எய்துவிக்கும்.



திருமந்திரம் :

அம்பலமாவது அகில சராசரம்
அம்பலமாவது ஆதிபிரானடி
அம்பலமாவது அப்பு தீ மண்டலம்
அம்பலமாவது அஞ்செழுத்துமே

அனைத்து உலகிலும் காணப்படும் அசையும், அசையாப் பொருள்கள், இயங்கும் பொருள்கள் முற்றும் சிவபெருமான் திருக்கூத்தியற் திருவம்பலமாகும். ஆதிபிரானடியும் திருவம்பலமாகும். நீர்மண்டலமும் தீ மண்டலம் இவை பற்றி எளிய பூதங்களும் அம்பலமாகும். மெய்ம்மை அம்பலமாவது திருவைந்தெழுத்து ஆகும். தூல பஞ்சாக்ஷரம் என்பது நமசிவாய என்று பார்த்தோம். அந்த பஞ்சாக்ஷரத்தை சிதம்பர சக்கர நடுவில் ஈசனை மனித உருவில் காணும் முறையை திருமூலர் அருளுகிறார். மேலே சொல்லப்பட்ட 'மகார நடுவே...' என்னும் திருமந்திரத்தின் விளக்கத்திலும் காண்க.

திருமந்திரம் (திருவாவடுதுறை பதிப்பு - பாட்டு 949
திரு ராமனுதம்பிள்ளை உரை - பாட்டு 929)

கொண்ட இச்சக்கரத்துள்ளே குணம்பல
கொண்ட இச்சக்கரத்துள்ளே குறியைந்து
கொண்ட இச்சக்கரத்துள் நின்றகூத்தே

இந்த திருவம்பல சக்கரத்துள்ளே எல்லாம் பொருந்தியிருக்கிறது.

திருமந்திரம் (திருவாவடுதுறை பதிப்பு - 987
திரு ராமனுதம்பிள்ளை உரை - பாட்டு 965)

எட்டுவரையின் மேலெட்டு வரைகீறி
இட்டநடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்திலே யறைநாற்பத் தெட்டுமிட்டு
சிட்டஞ் செழுத்துஞ்செபி சீக்கிரமே

திருமந்திரம் (திருவாவடுதுறை பதிப்பு - பாட்டு 988
திரு ராமனுதம்பிள்ளை உரை - பாட்டு 965)

தானவர் சட்டர்சதிரர் இருவர்கள்
ஆனவிம் மூவரோடாற்ற வராதிகள்
ஏனைப்பதினைந்தும் விந்துவும் நாதமும்
சேனையுஞ் செய்சிவ சக்கரந்தானே

சிவசக்கரம் அமைக்கும் முறையைக் கூறுகிறது எட்டு கோடுகள் மேல் எட்டு கோடுகள் இட்டு நாற்பத்தி ஒன்பது அறைகளாக்கி அவற்றில் நடுவறையில் சிவ எழுத்தாகிய சி-யை பொருந்தி 48 அறைகளிலும் மிச்சமான அஞ்செழுத்தை அடைத்து செபிப்பாயாக.

சுற்றிலும் தானவராகிய ஐயனர், சட்டநாதர் சபைப் புறப்போராகிய பிள்ளை, முருகன் ஆகிய இந்த மூவரோடு துவார பாலகர்கள் மற்றைய 15 தானங்களில் விந்து நாதம் சிவகணநாதர்கள் இவர்களை ஆவாகிக்க இது சிவசக்கரமாம்.

| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
|---|---|---|---|---|---|---|
| 17 | சி | வ | ய | ந | ம | 1 |
| 16 | ம | சி | வ | ய | ந | 2 |
| 15 | ந | ம | சி | வ | ய | 3 |
| 14 | ய | ந | ம | சி | வ | 4 |
| 13 | வ | சி | ய | ந | ம | 5 |
| 12 | 11 | 10 | 9 | 8 | 7 | 6 |

*திருமந்திரம் (திருவா பதிப்பு 996 - பிள்ளை உரை 972)*

நம்முதல் அவ்வொரு நாவினராகியே
யம்முதலாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முதலாகவே உணர்பவர் உச்சிமேல்
உம்முதலாயவன் உற்று நின்றானே

சிவாய என உணர்பவர் உச்சியில் சிவம் பிரகாசிக்கும். நகாரம முதலாக அகரமாகிய உயிர், இறுதியாக உள்ள எழுத்துக்களோடு உரைக்கின்றவர்களாகி சிகாரம் நடுவாய் யகாரம் முதலாகிய எழுத்துக்களை இடைக்கண் உள்ள எட்டு அறைகளில் வைத்து அறிகின்ற தூதர்கள் உடைய உச்சியின் மேல் சிவம் பொருந்தி விளங்குவன்.

| | | | | |
|---|---|---|---|---|
| | | | | |
| | ய | வ | ய | |
| | வ | சி | வ | |
| | ய | வ | ய | |
| | | | | |

நம்முதல் அவ்வொரு — நமசிவய

உம் முதலாயவன - உ — சத்தி முதலாயவன் -
சத்திக்கு முதலாயவன்

திருமந்திரம் (திருவா பதிப்பு - பாட்டு 977,
ப. ராமனுதம்பிள்ளை உரை - பாட்டு 972)

நின்ற அரசம்பலகை மேல்நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையிற்சாதகத்
துன்று மெழுகையுள் பூசிச்சுடரிழை
தன்ற வெதுப்பிடத் தம்பனங்காணுமே

தம்பன முறையை கூறுகிறது. அரசம் பலகை மேல் நேராக பொருத்த மகார முதலாக மாறியிட்டு பனை ஓலையில் அவ்வாறே அடைத்து சாதகம் சித்திக்க. தேன் மெழுகை ஓலையுட் பூசி விளக்குச் சுடரில் நன்ருக காய்சச தம்பனமாம் எனப்படும்.

தம்பனம் — கட்டுதல் - எதிரியை செயல்படாதவாறு கட்டுதல்

மவ்விட்டு — மகாரத்தை முதலெழுத்தாக இட்டு

| ம | சி | வ | ய | ந |
|---|---|---|---|---|
| ந | ம | சி | வ | ய |
| ய | ந | ம | சி | வ |
| வ | ய | ந | ம | சி |
| சி | வ | ய | ந | ம |

முதலிலும் இறுதியிலும் மகாரம் இருப்பதை காணலாம்

திருமந்திரம் (திருவா பதிப்பு – பாட்டு 998
ப. ராமனுதம்பிள்ளை உரை - பாட்டு 97)

கரணவிரலிப் பலகைய மன்றிசை
மரணமிட் டோட்டின் மகாரவெழுத்திட்டு
வரண மிலிங்காயம் பூசியடுப்பிடை
முரணிற் புதைத்திட மோகனமாகுமே

மோகன முறை பேசுகிறது. சாதனமாக உள்ள கொன்றைப் பலகையின் மேல் தெற்கு திசையில் மாரக மந்திரத்தை எழுதி ஏட்டில் மகரமிட்டு மறைப்பற்ற ஐங்காயத்தை பூசி அடுப்பில் தலைகீழாக புதைத்தால் மோகன சக்தி உண்டாம்.

மோகனம் — மயங்க வைத்தல் - மயக்குதல்
கரணம் — சாதனம் - உபகரணம் இரளி — கொன்றை
மரணம் இட்டு — நிசி என்ற மந்திரம் இட்டு
ஐங்காயம் — சுக்கு, மிளகு, கடுகு, உள்ளி, வெள்ளுள்ளி

பொதுமக்கள், அரசர், செல்வர், மாதர், பகைவர், தெய்வம், பேய், பூதம், விலங்கு முதலிய அனைத்துயிர்களையும் தம்மிடத்தில் மயங்கி தம் சொல்வழி நிற்கப் பண்ணுதலே மோகனம் என்பது.

பலகை — கொன்றை மரப் பலகை

மகாரத்தை முதலில் கொண்டு இருப்பதால்
இதுவே மாரண மந்திரமாகும்.

மலம் - ம்ருத்யு எனவும் சொல்லப்படுவதால், அதனைக் குறிக்கும் எழுத்து 'ம'வை முதலில் உடைய இம்மந்திரமே இவற்றையெல்லாம் தருவதாம்.

மந்திரத்தை சக்கரத்திலும் ஏட்டிலும் யமன் திசையாகிய தெற்கில் உள்ள வரிசையை முதலாகவும், வடக்கில் உள்ள வரிசையை இரண்டாவதாகவும் கொண்டு எழுதி ஓலையில் ஐங்காயத்தை அரைத்து பூசி அதனை அடுப்பு வாயில் அழுந்தப் புதைத்து சக்கரத்தை வழிபட்டு மந்திரத்தில் கீழ் விளிம்பு தொடங்கி மேற்கூறிய முறையிலே செபித்து வர மோகனம் எனும் வித்தை கைவரும்.

முரண் — வலிமை

சக்கர அமைப்பு வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 2 | சி | வா | ய | ந | ம |
| 3 | வா | ய | ந | ம | சி |
| 4 | ய | ந | ம | சி | வா |
| 5 | ந | ம | சி | வா | ய |
| 1 | ம | சி | வா | ய | ந |

வடக்கு

மேற்கு / கிழக்கு

| சி | வ | ய | ம | ந |
|---|---|---|---|---|
| வ | ய | ம | ந | சி |
| ய | ம | ந | சி | வ |
| ம | ந | சி | வ | ய |
| ந | சி | வ | ய | ம |

தெற்கு

நசிவயம என்ற மாரண பஞ்சாக்கரத்தை யமன் திசையில் எழுதி ஏட்டில் 'ம' என்று மட்டும் எழுதி ஐங்காயம் பூசி அடுப்பில் செருகி மோகன சித்தி விளையும்.

திருமந்திரம் (திருவா பதிப்பு 1002
ப. ரா. பிள்ளை உரை - பாட்டு 978)

எண்ணுக்கருடனை ஏட்டின் யகர்ரமிட்(டு)
எண்ணுப் பொன்னுளில் எழுவெள்ளி பூசீடா
வெண்ணுவற் பலகையிலிட்டு மேற்கேநோக்கி
எண்ணுவெழுத்தோ டெண்ணுயிரம் வேண்டிலே

இதில் ஆகர்ஷண முறை ஆகருடனம் என்னும் வித்தை தெரிவிக்கப்பட்டுள்ளது.

எண்ணப்படுகின்ற ஆகர்ஷண முறையாவது :

ஏட்டில் யகாரத்தை மாறி எழுதி வியாழக்கிழமையில் வெள்ளிப் பற்பதத்தை மேலே பூசி வெண்ணுவற் பலகையிட்டு மேற்கு திசை நோக்கியிருந்து எண்ணு எழுத்தாகிய விந்துவோடு எண்ணுயிரம் உருச் செபிக்க. எண்ணு எழுத்து 'ம்' அதாவது 'யம்' எனச் செபிக்க.

உயிர்ப் பொருள், உயிரில்லாப் பொருள் ஆயினும் தொலைவில் உள்ளவற்றை தான் இருந்த இடத்தில் இருந்தே வரவழைத்தல் ஆகருடணம் என்னும் வித்தை.

பலகை - வெண்ணாவல் மரப் பலகை; ஓலையிலும் எழுதி அதன் மேல் ஒரு வெண் பூச்சினைப் பூசி வியாழக்கிழமையில் மேற்சொன்ன பலகை மேல் வைத்து வழிபட்டு மேற்கு நோக்கி அமர்ந்து அம்மந்திரங்களை அசபா மந்திரத்தோடு எண்ணாயிரம் உரு விரும்பி செபித்தால் ஆகருடணம் என்னும் வித்தை கைவரும்.

சக்கர அமைப்பு வருமாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | ய | ந | ம | சி | வ |
| 2 | வ | சி | ய | ம | ந |
| 3 | சி | வ | ய | ம | ந |
| 4 | ம | சி | வ | ய | ந |
| 5 | ந | ம | சி | வ | ய |

இவ்வாறு திருமந்திரத்தில் பஞ்சாக்ஷர ஜபம் தலைக்கொண்டு தம்பனபதி, அட்ட கன்ம வித்தை இவைகளை திருமூலர் அருளுகிறார். மந்திர சாஸ்திரங்களிலும், சித்தர் முறைகளிலும் வேறு வேறு முறையில் அட்டகன்ம வித்தைகள் அறிவிக்கப் பெற்றுள்ளன. இவை அவரவர் அனுபவம். எனவே ஒவ்வொன்றுக்கும் உயர்வு தாழ்வு கருதாது எதில் அனுபவமோ அதில் உறுதிக் கொண்டு ஓத வேண்டும்.

திருமூலர் மற்றும் பஞ்சாக்கரத்தைப் பற்றி 4ம் தந்திரம் அருச்சனை பகுதியில் அறிக. பின்னர் திருமூலர் 4ம் தந்திரம் சாம்பவி சக்கரத்தில் பஞ்சாக்ஷரத்தைப் பற்றி அருளுகிறார். இதை திரு ப. ராமனுதம்பிள்ளை திருமந்திரம் உரை உள்ள நூலில் திருமந்திரம் 1275, 1276ல் காண்க.

திருமந்திரம் 905 (திருமையாதீன 1984ம் வருஷ வெளியீடு
திரு அருணை வடிவேல்முதலியார் உரையாசிரியர்)

நாடும் பிரணவம் நடுஇரு பக்கமும்
ஆடும் அவர்வா அமர்ந்தங்கு நின்றது
நாடும் நடுவுள் முகம் நமசிவாய
வாடும் சிவாயநம புறவட்டத் தாயதே

சக்கரத்திலே நடுவட்டத்தில் நடுவில் பிரணவத்தையும் (நடு விடத்தை இரு முக்கோணத்தின் கூட்டாகக் கருதி) மேல் முக்கோணத் தில் கீழ் முக்கோணப் பகுதியில் வகாரம் நான்கும் நடுவிடத்தை சூழ்ந் துள்ள உள்வட்ட கட்டங்கள் எட்டினையும் முன்சொன்னவாறே பகுதிப் படக் கருதி மேற்பகுதி அறை ஒவ்வொன்றிலும் 'ய' என்பதனையும் சுற்று வட்டத்தின் (விளிம்பு வட்டம்) மேற்புறத்து இடப்பக்க மூலை யிலும், கீழ்புறத்து வலப்பக்க மூலையிலும் 'சி' என்பதை நிறுத்தி அவற்றின் இருபக்க கட்டங்களிலும் முறையே 'வா, ய, ந, ம' என்றும் எழுத்துக்களையும் பொறித்து வழிபட்டு ஜபிக்க.

அதன் வடிவம் வருமாறு :

| சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|
| வா | நம | நம | ய | ந |
| ய | நம | சி சி வா<br>சி ஓம் வா<br>சி வா ய | ய | ய |
| ந | ந.ம | ய | ய | வா |
| ம | ந | ய | வா | சி |

திருமந்திரம் 913 (பிள்ளை உரை 910)

1ஆறெட்டெழுத்தின்மேல் 2ஆறும் பதினொலும்
ஏறிட்டதன்மேலே 4விந்துவும் 5நாதமும்
சீறிட்டுநின்று சிவாயநம என்னக்
கூறிட்டு மும்மலம் கூப்பிட்டுப்போமே

## என் குருநாதர் விளக்கம் :

1) ஹ 2) ஊ 3) ஔ இந்த மூன்றும் சேர்ந்து ஹௌ

4) விந்து - (ஹௌ) ஹௌம், ஓபோல ஹௌ,
ஓம்போல ஹௌம் என்று கொள்ள வேண்டும்

5) இவற்றை ஒலிப்பது நாதம்

எனவே 'ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம' என இடையறாது கணித்துக் கொண்டிருந்தால் மும்மலமும் அறும்.

## பிராசாத சக்கரம்

| ஓம் | ஹாம் | ஹௌம் | சி | வா | ய | ந | ம |
|---|---|---|---|---|---|---|---|
| ஹாம் | ஹௌம் | சி | வா | ய | ந | ம | ஓம் |
| ஹௌம் | சி | வா | ய | ந | ம | ஓம் | ஹாம் |
| சி | வா | ய | ந | ம | ஓம் | ஹாம் | ஹௌம் |
| வா | ய | ந | ம | ஓம் | ஹாம் | ஹௌம் | சி |
| ய | ந | ம | ஓம் | ஹாம் | ஹௌம் | சி | வா |
| ந | ம | ஓம் | ஹாம் | ஹௌம் | சி | வா | ய |
| ம | ஓம் | ஹாம் | ஹௌம் | சி | வா | ய | ந |

பிராசாத கலை என்பதைப் பற்றி தருமையாதீன வெளியீடு (1984) திருமந்திரம் திரு அருணை வடிவேல் முதலியார் உரையில் பக்கம் 309ல் விளக்கம் காண்க.

பிராசாத கலைகளின் மாத்திரையளவை 'பிராசாத சட்கம்' முதலிய நூல்களில் காண்க.

உபதேசம் - என் குருநாதர் காஞ்சீபுரம் தொண்டை மண்டல ஆதீனம் ஞானப்பிரகாச தேசிய பரமாசார்ய ஸ்வாமிகள் 22ம் பட்டம் (பூர்வாஸ்ரமம் முத்து சு. மாணிக்கவாசகம்) அவர்கள் எனக்கு சித்தாந்த பாடம் சொல்லி சிவபூஜை தீக்ஷை செய்து பின் ஞானபூஜை தீக்ஷை செய்து மகா மந்திரமாகிய 'ஓம் ஹாம் ஹௌம் சிவாயநம' என்பதை அடியேனுக்கு உபதேசம் செய்து அருளினார்கள்.

தருமையாதீனம் வெளியீடு - பாட்டு 917

அஞ்செழுத்தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத்தாலே அமர்ந்த பஞ்சாக்கரம்

அஞ்செழுத்தாகிய அக்கர சக்கரம்
அஞ்செழுத்துள்ளே அமர்ந்து நின்றானே

'அதுவாம் அகாரம்' என்னும் மந்திரத்திலே கூறப்பட்ட ஐந்தெழுத்து வழியாகவே சிவபெருமான் வந்தமர்கின்றான். அந்த ஐந்தெழுத்தினாலே அவனது பஞ்சாக்கர மந்திர எழுத்துக்களும் அமைகின்றன. ஆகவே இவ்விருதிற எழுத்துக்களும் அமைகின்ற சக்கரங்களிலே அவன் தங்கி நிற்கின்றான்.

பாட்டு - 918 கூத்தனைக் காணும்குறிபல பேசிடின்
கூத்தன் எழுத்தின்முதல் எழுத்தோதினால்
கூத்தனொடொன்றிடுங் கொள்கையராம் நிற்பர்
கூத்தனைக் காணும் குறியதுவாகுமே

கூத்தப் பெருமானைப் பருவடிவிற் காண நிற்கும் பொருள்கள் பலவாம். அவற்றுள் மந்திரம் சிறந்தது. ஆதலின் அவற்றுள் தலையானதாகிய மந்திரத்தை முதல் எழுத்தளவில் ஓதினாலும் அப்பெருமானோடு ஒன்றித்து நிற்கும் உணர்வை மக்கள் பெறுவார்கள்.

பாட்டு - 919 அந்திசைக்குள் நின்று அனலை எழுப்பியே
அத்திசைக்குள் நின்ற நவ்வெழுத்தோதினால்
அத்திசைக்குள் நின்ற அந்த மறையனை
அத்திசைக்குள் ஞறவர்க்கி னன்தானே

திருவம்பல சக்கரங்களில் ஏதாவது ஒன்றில் உணர்வை நிறுத்தி பிராணாயாமத்தால் மூலாதாரத்தில் உள்ள அனலை ஓங்கி எழச் செய்து சக்கரத்தில் உள்ள எழுத்துக்களில் நகாரத்தை செபித்தால் அச்சக்கரத்தில் மறைந்து நிற்கும் கூத்தப் பெருமானை அந்த நகரத்திற்கு உரியவளான திரோதான சக்தி அச்சக்கரத்தில் பொருந்த செய்வாள். இது முதல் நான்கு மந்திரங்களால் ஒவ்வொரு எழுத்தே பயனளித்தலை கூறுகிறது. இதனால் நகாரத்தை ஓதுதலின் பயன் கூறப்பட்டது.

இதனுள் பிரணவ மந்திரத்தை முதலில் கொண்டு நமசிவாய என்பதை நான்கு முறையாலும், சிவாய என்பதை நான்கு முறையாலும் செபிக்க ஒரு வட்டமாம். ஐம்பத்து நான்கு வட்டம் செபிக்க தூல சூக்ஷ்ம பஞ்சாக்கரங்கள் தனித்தனி நூற்று எட்டு ஆகிறது. இருநூற்றி ஐம்பது நான்கு வட்டங்கள் செபிக்க அவை தனித்தனி ஆயிரத்து எட்டு உருவாகும்.

இவற்றுள் தூல பஞ்சாக்ஷரத்தில் பாச எழுத்து இரண்டும், பதி எழுத்து இரண்டும் தம்முள் இணைந்தும், ஆன்ம எழுத்து அருளெழுத்தோடும், திரோதன எழுத்தோடும் தொடர்புற்றும் நிற்றல் அறிந்து கொள்க

சமட்டி பிரணவத்தோடு தூலம், சூக்ஷ்மம் எனும் இரு பஞ்சாக்கரங் களும் செபிக்கப்பட நிற்றலால் இது சூக்குமா சூக்கும திருவம்பல சக்கரமாகும். சூக்கும சக்கரம் விடு பேறு விரும்புபவர்களுக்கும், தூல சக்கரம் உலக இன்பத்தை விரும்புபவர்களுக்கும், சூக்குமா சூக்கும சக்கரம் இரண்டினையும் விரும்புபவர்களுக்கும் உரியதாகும்.

பாட்டு - 929

பரமாய அஞ்செழுத்துள் நடுவாகப்
பரமாய யநவசிம பார்க்கில் மவயநசி
பரமாய சியவநமவா பரத்தோதில்
பரமாய வாசிமயநவாய் நின்றதே

திருவைந்தெழுத்து ஐம்பத்தோர் எழுத்துக்களின் இடை நிற்கை யில் நெடுக்காயினும் குறுக்காயினும் நடுவரிசையில் நிற்கும். எனவே நடு வரிசையில் 'சிவாயநம' (1) என்றும், நடுவரிசைக்கு மேல் வரிசை யில் 'யநவாசிம' (2) என்றும், அதற்கு மேல் வரிசையில் 'மவாயநசி' (3) என்றும், அடி வரிசையில் 'சியநமவா' (4) என்றும், 4வது வரிசைக்கு மேல் 'வாசிமயந' (5) என்றும் மாறி நிற்பனவாம்.

அது இவ்வாறு :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 3 | ம | வா | ய | ந | சி |
| 2 | ய | ந | வா | சி | ம |
| 1 | ந | ம | சி | வா | ய |
| 5 | வா | சி | ம | ய | ந |
| 4 | சி | ய | ந | ம | வா |

நடுவரிசை இடமிருந்து வலமாகவும், கீழிருந்து மேலாகவும் ஓதத் திருவைந்தெழுத்து நகாரம் முதலாக அமைந்து 'நமசிவாய' என்று புலப்படும். சிகாரங்கள் முக்கோண கூட்டி ரேகையில் முழுதும் நின்று சிகாரம் முதலாக உள்ளதை ஓதிக் கொள்ளுமாறு அமைந்துள்ளதை காண்க. பரம் — மேன்மை - மேல்

நடுவரிசை தொடங்கி மேன்மேல் ஓதுங்கால் அடிவரிசைக்கு திரும்பி பின் நடு வரிசையை அணுக வருதல் அறிக.

பாட்டு - 934
அகார உகார சிகாரம் நடுவா
வகாரமொடாறும் வளியுடன் கூடிச்
சிகாரமுடனே சிவஞ்சிந்தை செய்ய
ஒகாரமுதல்வன் உவந்து நின்றானே

சிகார அகார உகாரங்களின் நடுவே (அதாவது ஓங்காரத்தின் நடுவே) நிற்க கொண்டு செய்கின்ற பிராணயாமத்தில் கும்பிக்கப்பட்ட பிராணவாயுவோடே ஆறு ஆதாரங்களில் பொருந்தி 'சிவ' என்னும் மந்திரத்தை ஓதி சிவனை தியானித்தால் பிரண முதல்வனை அப்பெருமான் மகிழ்ந்து சக்கரங்களில் நின்று அருள் செய்வான். இதே கருத்தை என் குருநாதர் சிவ சிவ' என்னும் மாத்திரைகளை கொண்டு பிராணயாமம் போதித்ததை 'யோகம்' என்ற தலைப்பில் விவரம் காண்க.

பாட்டு - 1388
மண்ணில் எழுந்த மகார உகாரங்கள்
விண்ணில் எழுந்த சிவாயநம என்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணில் எழுந்தது காட்சிதர என்றே

பிருத்வி மண்டலமாகிய மூலாதாரத்தில் இருந்து பிரணவமாய் சூக்கும எழுத்தாய் புறப்பட்ட நாதம். பின் வளர்ச்சியுற்று ஆகாச மண்டலமாகிய ஆக்ஞையில் (புருவநடு) 'சிவாயநம' என்னும் தூல எழுத்தாய் வெளிப்பட்டு அதற்குபின் கண்ணில் ஒளி வடிவாயும் என்னிடத்து பதிந்து நின்றது. ஆதலின் ஒளிக்காட்சி ஒருவராலும் காணப்படாதது அன்று. மற்றும் அது தன்னை காண வேண்டும் என்பவர்க்கு காட்சி தர வேண்டும் என்றே முன்வரும் இயல்புடையது. 'விண்ணில் சிவாயநம என்று எழுந்து கண்ணில் எழுந்தது' என்க. சிவசத்தியது காட்சி நாத தரிசனத்தின் வழி கூடும் என உணர்த்தியது.

பாட்டு - 982
ஆங்குவடமேற்கில் ஐயனார் கோட்டத்தில்
பாங்குபடவே பலாசப் பலகையில்
காண்கருவேட்டில் கடுப்பூசி விந்துவிட்டு
ஓங்காரம் வைத்திடு உச்சாடனுத்துக்கே

உச்சாடனம் எனும் வித்தை கூறுகிறது. (பலகை - பூவரசன் பலகை) மேற்சொன்ன மந்திரத்தையே சக்கரத்திலும், ஏட்டிலும் எழுத வேண்டும். ஓலையில் கரியும். நஞ்சும் பூசி, ஓம்காரத்தில் மகாரத்தை நீக்கி, ஒகாரத்தை மற்றும் சுற்றி வளைத்து எழுதி அதை ஒருமுறை வழிபட்டு ஓலையை கொண்டு போய் ஐயனார் கோவிலில்

வுடமேற்கு மூலையில் பாதுகாப்பாக புதைத்து விட்டு சக்கரத்தை வழி பட்டு மந்திரத்தை மேற் கூறியவாறே செபித்தால் உச்சாடனம் என்னும் வித்தை கைவரும்.

இச்சக்கரம் மேல்பாட்டில் உள்ளபடியே, ஆனால் ஓகாரத்தால் வளைத்தல் வேண்டும்.




இதுபோன்று பலவிதமான சக்கர அமைப்புகளும், அதன் ஜெபிக்கும் முறைகளும், அதன் பலா பலன்களும் திருமந்திரத்தில் கூறப்படுகிறது. அவற்றில் சில முக்கியமான அமைப்புகள் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளன.



அத்தியாயம் — 16

# நிறைவுரை :

திருவைந்தெழுத்தின் பெருமையைப் பற்றியும், அம்மகா மந்திரம் நம் ஆன்ம வாழ்வில் நமக்கு உறுதுணையாக நின்று நம்மை உய்வித்தல் பற்றியும் ஒருவாறு விளக்கினேன். நூல்களைப் பயின்ற அளவில் நின்று விடுவதால் பயனில்லை. அது கற்கண்டு இனிக்கும் என்னும் உண்மையை நூல்கள் வழி அறிந்த அளவில் நின்று விடுவதை ஒக்கும். கற்கண்டின் இன்சுவையை அக்கற்கண்டை நம் வாயிலிட்டுச் சுவைத்து நுகர்ந்து இன்பமுறுவதன்றோ நூல்வழி அதன் சுவையை அறிந்ததின் பயனாகும்?

அவ்வாறே திருவைந்தெழுத்தின் பெருமையை இந்நூல் வழியாக அறிந்து கொண்டோம். அம்மந்திரத்தால் கிட்டும் பயனையும் நுகர்ந்து இன்புறுதல் வேண்டும். தூல பஞ்சாட்சரத்தைப் பிரணவத்துடன் சேர்த்தோ, சேர்க்காமலோ யார் வெண்டுமாயினும் கணிக்கலாம்; வாயார ஓதித் துதியும் பாடலாம். அச்செயல்களால் உங்கள் ஆன்மா டீக்குவமுற்றுத் தீட்சை பெற ஆயத்தமாகும். சமய தீட்சையை ஆண் பெண் இருபாலரும் 7 வயதுக்கு மேல் 9 வயதுக்குள் பெறுதல் வேண்டும். அப்பொழுது தீட்சாகுரு, இம்மந்திரத்தைப் பீஜ மந்திரங் களுடன் சேர்த்து உபதேசம் செய்வார். அம்முறையில் கணித்து வருவோர் அடுத்து விசேட தீட்சைக்குத் தகுதி பெறுவர் அத்துடன் ஆன்மார்த்த சிவ பூசையும் பெறுதல் வேண்டும். அதற்குரிய வயது வரம்பு 9 வயதுக்கு மேலும், திருமணம் செய்து கொள்வதற்கு முன்பும் என்று விதித்துள்ளனர்.

ஆன்மார்த்த சிவபூசையில் இறைவனை எவ்வாறு திருவைந்தெழுத்தால் வழிபடுவது என்பதை இந்நூலின் 10 ஆம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளேன்.

அந்நெறி நிற்போர் மேலும் மேலும் உயர்ந்து நிர்வாண தீட்சை போன்றவற்றை பெறவும், அதிசூட்சும பஞ்சாட்சரம், மகாகாரண பஞ்சாட்சரம், மகாமனு போன்ற மந்திரங்களைக் கணிக்கவும் தகுதி பெறுவர். இச்செயலே தவம் புரிதலாகும். அத்தவத்தின் பயனாகச் சிவபெருமான் தானாகவே நம்மைத் தேடி வந்து நம் உள்ளத்தில் கோயில் கொள்வான் என்பர் நம் பரம ஆசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருமான்.

"நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
தேனாய்இன் அமுதமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
தானேவந் தென்னுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை
ஒறுத்தன்றே வெறுத்திடவே"

(திருவாசகம் - திருவேசறவு - 10)

என்பது அவ்வமுத வாக்கு. இதை நூலினுள்ளும் விளக்கியுள்ளேன். பாடலின் ஈற்றடியே நிர்வாண தீட்சை பெறுவதற்கான பக்குவம். பின்னர் இத்தவம் நாம் வீடுபேறடையும் வரையும் தொடரும்; அந் நிலைகளில் படிப்படியாக வருவதே மகாகாரண பஞ்சாட்சரம்; மகா மனு என்பவற்றைக் கணித்தற்கான பக்குவம்.

திருமந்திர உரை நூல்களிலும், திருவாசகத்துக்குக் காழித் தாண்டவராயர் செய்துள்ள வியாக்கியானத்திலும், தூல பஞ்சாட்சரத்தில் பதினைந்து வகைகள்; சூட்சும பஞ்சாட்சரத்தில் பதினைந்து வகைகள்; முக்கலைப் பிரணவ பஞ்சாட்சரம்; ஐங்கலைப் பிரணவ பஞ்சாட்சரம்; சோடகலாப் பிரசாத பஞ்சாட்சரம்; பரமுத்தி நிலைப் பஞ்சாட்சரம் என வேறு வகைத் திருவைந்தெழுத்துக்கள் பேசப்பட்டுள்ளன. அவை ஒவ்வொன்றின் பெயர், அவற்றைக் கணித்தற்கான தகுதி, கணித்தலால் விளையும் பயன், அவற்றை விரித்து நான் இந் நூலில் விளக்கவில்லை. அவற்றைப் புரிந்து கொள்வதற்கு ஓரளவு வடமொழிப் பயிற்சியும் வேண்டும். தாகமுள்ளோர் அனுபவம் வாய்ந்த தக்க ஆசாரியார்களை அடைந்து பயன் பெறுவார்களாக.

அன்பர்கள் ஒவ்வொருவரும் தங்கள் குடும்பத்தில் உள்ள அனைவரையும் திருவைந்தெழுத்தை கணித்துப் பயன் பெறச் செய்வார்களாயின் அச்செயலே இந்நூலை இயற்றியதன் பயனை எனக்கு நல்கியதாகக் கொண்டு மனநிறைவும், மகிழ்ச்சியும் எய்துவேன். அதற்கு திருவருள் துணைபுரிவதாக. மன்பதை முழுதும் உய்வதாக.






# ஓம்

அ + உ + ம் +
விந்து + நாதம் = ஓம்

நாதம் — பிரபஞ்சங்கள் தோன்ற காரணம்

## தோற்றம் துடியதனில்

(உண்மை விளக்கம்)

துடி - நடராஜ பெருமான் கையில் உள்ள உடுக்கை

உடுக்கைதான் என்று பொருள் கொள்ளக் கூடாது

துடி - உடுக்கை - நாதத்தைக் குறிக்கும்

# ஓம் — பிரணவம்